உ

கடவுள் துணை.

அதிவீரராமபாண்டியன்

அருளிச்செய்த

# நைடதம்.

## மூலமும்-உரையும்.

இவை

அஷ்டாவதானம்

வீராசாமி செட்டியாரவர்கள்

மாணாக்கரிலொருவராகிய

உபாத்தியாயர்

கங்காதர முதலியாரால்

பழையபிரதியைக்கொண்டு

பரிசோதித்து

சென்னை சூளை

எஸ். பி. இராஜாராம்

அவர்களாற்றமது

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.



இதன் விலை 1913. ரூபா 2-0-0.



உ

கடவுள் துணை.

# நைடதம்.

நைடதம் என்னுஞ்சொல் நைஷதம் என்கிற ஆரியத்தின் திரிபு.
அதன்வரலாறு என்னவெனில்,
நிஷதம் என்பதோர் தேசத்தின்பெயர்.
அத்தேயத்தையாள்பவன் நைஷதன். அவனே நளன்.
அவனைக்குறித்துச் செய்யப்பட்ட நூல் நைஷதம்.

## பாயிரம்.

இதனால் எடுத்துக் கொண்ட காப்பியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு உயர்ந்தோர் வழக்கத்தின்படியே கவி கடவுள் வணக்கஞ்செய்தல் சொல்லப்படுகின்றன.

### விநாயகர்வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தழைவிரி கடுக்கை மாலைத் தனிமுதல் சடையிற் சூடும்
குழவிவெண் டிங்களிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

(பதவுரை.) தழை - செழித்த, விரி - மலர்ந்த, கடுக்கை - கொன்றை மலர்களாலாகிய, மாலை - மாலையையுடைய, தனி-ஒப்பில்லாத, முதல்-பரமசிவனால், சடையில்-சடையின்கண், சூடும்-சூடப்பட்டிருக்கிற, குழவி-குழந்தையாகிய, வெள் – வெள்ளிய, திங்கள் - சந்திரனை, இற்ற - ஒடிந்த, கோட்டது - (தன்) கொம்பினது, குறையென்று - சேஷமென்று, எண்ணி - நினைத்து, புழை – துளையையுடைய, நெடு - நெடிய, கரத்தால் - துதிக்கையினாலே,

---

* யாப்பருங்கலம். கழிநெடிலடியே கசடறக்கிளப்பி, னறுசீர் முதலா வையிரண்டீறா, வருவனபிறவும் வகுத்தனர் கொளலே.

பற்றி - பிடித்து, பொற்பு - அழகானது, உற-பொருந்த. இணைத்து (அதிற்) பொருத்தி, நோக்கும் - பார்க்கின்ற, மழை - மழைபோல்கின்ற, மதம் - மதத்தையுடைய, களிற்றின் - யானைமுகக் கடவுளுடைய, செய்யமலர் - செந்தாமரை மலர்போலும், அடி - திருவடிகளை, சென்னி - தலைமேல், வைப்பாம்- (நாம்) சூடிக்கொள்வாம்—எ-று.

(பொழிப்புரை.) தழைவிரிகடுக்கை என்றது, தாழைகள் விரிந்த கடுக்கை எனினும் பொருந்தும், தழைதலாகிய காரணத்தால், தழையென் றாயிற்று. மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளிய (குவலயானந்தசூத்திரம்) வழிபடு தெய்வவணககஞ்செய்து, மங்கலமொழி முதல் வழுவாதுரைக்கி, லெடுத்துக் கொண்ட விலக்கண விலக்கிய மிடுக்கணின்றி யினிது முடியுமே இவ் விலக்கணத்தால் கடவுள் வணக்கங்கூறினர் யாம்யென்னும் எழுவாய் எஞ்சி நின்றது. வைப்பாம் என்றது பயனிலை அடியென்றது செயப்படுபொருள் தழை - விரி என்கிற பெயரெச்சத் தொகைக ளடுக்கிக் கொன்றைமலரென்கிற வினைமுதற் பெயர்கொண்டன வாகும்.

மலரடி சென்னிவைப்பாம் என்றது - தன்மைப் பன்மை வினைமுற்றாகத் தம்மைப்புகழ்ந்து கூறியதற்கு இலக்கண மெங்கனமெனின் (மேற்படி சூத்திரம்) முனைபுனை சேவகன் முனிந்தார்ப்பதுபோற், கசடறக்கற்ற கல்வியாற்றலாற், றன்னைப் புகழத்தகுமெனச சாற்றினர், என்றதனாலறிக. இற்ற கோடு என்றது - விநாயகர் தம்மா லொடிக்கப்பட்ட கோடென்றருத்தமாம். இதற்கிலக்கிய மெங்கனமெனின் (கந்தப்புராணம்) கெஜமுக னுற்பத்தி படலம் (உ௲௬ - வது, உ௲எ - வது,) பாடல்கள்.

நின்றவன் றன்னை நோக்கி கொடியபல் படைக ளேவிச்
சென்றிவன் றன்னைக் கொல்லாச் சிவனருள் வரத்தின் சீரா
லின்றினிச் செய்வ தென்னன் றிரைவரை யுன்னி யெந்தை
தன்றிருக் கோட்டி லொன்று தடக்கையின் முறித்துக்கொண்டான்.

தடக்கையி லேந்துங் கோட்டைத் தந்தியா மவுணன் மீது
விடுத்தலு மனையவ மார்பை வெய்தெனக் கீண்டு போகி
புடற்படி மிசையே வீழ்த்தி யொல்லையி லோடித் தெண்ணீர்க்
கடற்படிந் தமலன் மைந்தன் காரத்திலவந் திருந்த தன்றே.

இச்செய்யுட்களில் கெஜமுகனைக் கொல்லக் கோட்டை ஒடித்தாரென்றது புராண சித்தாந்தம். இக்கருத் தறியாதார் பாரத மெழுதக் கோட்டை ஒடித்தாரென்று உரை வரைந்திருக்கின்றார்; அவர் இந்நூ லறியார்போலும் குழவியென்றதும், குழவுயென்றதும், ஒருபொருட்கிளவி (மேற்படிசூத்திரம்) மழவுங் குழவு மிளமைப்பொருள். பொற்பு என்றது—அழகுபொலிவு, (தொல்

காப்பியசூத்திரம்) பொற்பே பொலிவு என்றதனாலறிக, தந்தைக்கு மூத்தபிள்ளையின் மேலுந் தாய்க்கு இளையபிள்ளையின்மேலும் அன்புமிகுதலுலகியற்கையாதலாற் பரமசிவனிடத்தே விநாயகக்கடவுளுக்கு விளையாட்டுச்செயப்பட்டது. "மூத்தமகனிடத்தார்வ மீன்றெடுத்த பிதாமகற்குமுதிருமாற்றல்" என்பதனாலுமறிக. பிறவியைக் கொம்பின்குறையென்று மயங்கினமையால் மயக்கவணியாம்.

(கருத்து.) சிவன் முடியிலிருந்த பிறையை ஒடித்த கொம்புக்கிணைபார்க்கும் விநாயகரை வணங்குவோம்—என்பதாம்.

பாயிரம் - முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# சிறப்புப்பாயிரம்.

## இதனால் ஆக்கியோன்பெயர் முதலானவை சொல்லப்படுகின்றது.

நிலவுபொழி தனிக்கவிகை நிடதர்கோன் புகழ்ச்சரித நெடுநீர் வைப்பிற், புலவர்களி யமுதொழுகு புதுமொழிகூட் டுணைதமிழாற் புனைதல்செய்தான், வலனுயர்த்த வண்ணலஞ்சேல வான்றொடுபொற் கோட்டிமய வரையிற்றீட்டி, அலர்தலைமா நிலம்புரக்கு மதிவீர ராம னிக லரசரேறே.

(ப - ரை.) இகல் - பகைத்த, அரசர் - மன்னராகிய (யானைகளுக்கு) ஏறு ஆண்சிங்கமா யுள்ளவனாகிய, வலன் - வெற்றியினால், உயர்த்த - உயர்த்தப்பட்ட, அண்ணல்-பெருமைபொருந்திய, ஆம் - அழகிய, சேல்-மீனக்கொடியை, வான் - ஆகாசத்தை, தொடு - அளாவிய, பொன் - பொன்னையுடைய, கோட்டு-சிகரத்தையுடைய, இமயவரையில் இமையமலையினிடத்தே, தீட்டி-(தனக்குறிய வெல்லைக்கல்லாக) எழுதி, அலர் - பரந்த, தலை - இடைத்தையுடைய, மா - பெரிய. நிலம் - பூமியை, புரக்கும் - காக்கின்ற, அதிவீரராமன்-அதிவீரராமனென்கிற வியற்பெயருடைய பாண்டியராஜனானவன்,) நிலவு-சந்திரிகையை, பொழி - பொழிகின்ற, தனி - ஒப்பற்ற கவிகை - (முத்துக்) குடையையுடைய, நிடதர்கோன் - நளமஹாராஜனது, புகழ் - புகழையுடைய, சரிதம்-சரித்திரமாகிய, களி - களிப்பைத்தருகின்ற, அமுது - அமிர்தத்தை, நெடுநீர் – கடலாற் சூழப்பட்ட, வைப்பில் - பூமியிலுள்ள, புலவர் - புலவரானவர், கூட்டுண - கொள்ளை - கொள்ளும் படியாக, ஒழுகு-(அவ்வமிர்தம்) பெரு

குகின்ற, புதுமொழி - புதிய காப்பியத்தை, தமிழால்-தமிழ் மொழியினாலே, புனைதல் செய்தான் - அலங்கரித்துப் பாடினன்—எ-று.

(பொ - ரை.) புலவரென்பது தேவர்க்கும் வித்துவான்களுக்கும் பெயர். இங்கே வானென்றது நீலநிறமுள்ளதாகக் காணப்படு மாகாசமாம். பின் வருவனவற்றையும் இப்படியேகொள்க. கூட்டுணற்குக் கொள்ளையிட லென்பது "நலமணிமகுடந்தேடிக் கண்டிலர் நீதிசில கண்டிலர் திகைத்துவாடிச் சிந்தைநோயுழந்திது மாற்றவர் கூட்டுண் டோடிப் போயினது, என்பதனாலறிக. மொழியென்பது தன் காரியமாகிய காப்பியத்தை யுணர்த்த புதுவென்பது அக்காப்பியத்தை விசேடித்து நிற்கையால் இருபெயரொட்டாகு பெயராமென்றறிக.

அதிவீரராமனெனவே ஆக்கியோன் பெயரும், நிடதர்கோன் புகழ்ச்சரிதம் எனவே நுதலியபொருளும், அக்காரணத்தாலே தோன்றுகிற நைடதம் வென்கிற வடமொழிப்பெயரே இதற்குப் பெயரென்பதும் கூட்டுணவெனவே இந்த நூலுக்குப்பயனும் பெறப்பட்டன. தமிழாற் புனைதல் செய்தானெனவே முன்பிது தமிழிலின்றி வடமொழியிலிருந்தெடுத்துத் தமிழின் மொழிபெயர்க்கப் பட்டதென்பது, குறிக்கப்படுகின்றது. நெடுநீர் வைப்பிற் புலவர்களி யமுதொழுகு என்றதனால் விண்ணிற் புலவருக்குக் கடலமிர்தம் போல மண்ணிற்புலவருக்கு இச்சரித்திராமிர்த மமையு மென்னும் உவகையணி தொனிக்கின்றது 'இகலரசரேறு' என்பதில் அதிவீர ராமனிடத்தே சிங்கத்தன்மையை ஏற்றினதற்கேற்பப் பகைவரிடத்தே யானைத்தன்மையையேற்றாமையால் ஏகதேச வுருவகவணியாம் இது பெரும்பாலு மீற்றுச் சீர்களிரண்டு மாச்சீர்களு மற்றைநான்குங் காய்ச்சீர்களுமாகிய வடிகளால் வந்த ஆசிரியவிருத்தம்.

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# நாட்டுப் படலம்.

நளனாலாளப்பட்ட நிடதநாட்டின் வளத்தைச்
சொல்லப்படுகின்றது.

---

## கலித்துறை.

இதுமுத லிரண்டுபாட்டுகளால் மழைச் சிறப்புச்
சொல்லப்படுகின்றது.

*கருவி மாமழை கலைமக ளுருவென விளங்கி*
*இருவி சும்பிடைப் படர்ந்துசென் றினமணி கொழிக்கும்*
*பரவை வெண்டிரை மேய்ந்துயர் பனிவரை யுயிர்த்த*
*உருவ மோடரித் தடங்கணா ளுருக்கொடு மீண்ட.*

(ப - ரை.) கருவி - (உலகத்திற்குத்) துணைக்காரணமாகிய, மா - பெருமைபொருந்திய, மழை-மேகங்களானவை, கலைமகள் - சரஸ்வதியினது, உருவென-வடிவம்போல, விளங்கி - (வெண்மையாக) விளங்கி, இரு-பெரிய-விசும்பிடை ஆகாசத்தினிடத்தே, படர்ந்து - பரந்து, சென்று-போய், இனம்-இனமாகிய, மணி-இரத்தினங்களை, கொழிக்கும் - கொழிக்கின்ற, பரவை - கடலினது, வெள்-வெள்ளிய, திரை-அலைகளையுடைய (நீரை,) மேய்ந்து-குடித்து, உயர்-உயர்ந்த, பனிவரை மலையரசனால், உயிர்த்த-(புதல்வியாகத்) தரப்பட்ட, உருவ - (காதுகளுக்கு) நேராக, ஓடு-ஓடுகின்ற, தடம் - விசாலமாகிய, கணாள்-கண்களையுடைய பார்வதியினது, உரு-(கருநிறத்தை) கொடு-பெற்று, மீண்ட-திரும்பின எ-று.

(போ - ரை) முன்னுரு - வடிவு, பின்னுரு - நிறம். "உருவே யுட்கும் வடிவு மாகும்" என்பதனாலறிக. மழை கலைமகளுருவென விளங்கி—இதில் கலைமகளுரு உபமானம், மழை உபமேயம், என-உருபு. விளங்கல் - பொதுத் தன்மை. இந்நான்கும் விரிந்து நிற்கையால் விரியுவமையணியாம் தடங்கணாளுருக் கொடுமீண்ட—இதில் மழையாகிய உபமேயத்திலே தடங்கணாளுருவாகிய உபமானத்தின் குணத்தை யேற்றலால் பதப்பொருட் காட்சியணியாம். இது முதல் பத்துப்பாட்டுகள் வரைக்கும் பெரும்பாலு முதற் சீருமீற்றுச் சீருமாச்சீர்களு மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய வடிகளால் வந்த கலித்துறைகள். (க)

அன்னங் கண்படு தண்பணை நிடதநா டளிக்கும்
மன்னர் மன்னவன் மண்டமர் கடந்தவொள் வேலின்
மின்னி யாங்கவன் முரசென விண்ணிடை யதிர்ந்து
பொன்னங் குன்றின்மே லவன்கொடை போன்மெனப் பொழிந்த

(ப - ரை) அன்னம்-அன்னங்களானவை, கண்படு- தூங்குகின்ற, தண்-குளிர்ச்சி பொருந்திய, பணை-கழனிகளையுடைய, நிடதநாடு-நிடததேயத்தை, அளிக்கும்-காக்கின்ற, மன்னர்-அரசர்களுக்கு, மன்னவன் - அரசனாகிய (நளனது), மண்டு - நெருங்கிய, அமர் - போரை, கடந்த - முடித்த, ஒள்-ஒள்ளிய, வேலின் - வேல்போல, மின்னி-மின்னுதல் செய்து, அவன் - அவனது, முரசென-முரசம்போல, விண்ணிடை - ஆகாசத்தினிடத்து, அதிர்ந்து-ஒலித்து, பொன்-பொன்னையுடைய, அம் அழகிய, குன்றின்மேல்-இமயமலையின்மேல், அவன்-அவனது, கொடை-ஈகையை, போன்மென-ஒக்குமென்று சொல்லும் படியாக, பொழிந்த-(அம்மேகங்கள் நீரைச்) சொரிந்தன எ-று. ஆங்கு-அசை.

(போ ரை.) இங்கே பொன்மலை யென்றது இமயமலையாம். நிடததேசத்திற்குச் சமீபத்திற் சிறந்துள்ளது அதுவேயாதலால், பின்வரும் "கங்கை யென்றுலகேத்திய" வென்னும் பாட்டில் அம்மலையிற் பிறந்து வருங் கங்கையே அந்நாட்டிற்கு நதி என்பதனாலுமறிக. [மேகத்திற்கு மின்னுதல்பற்றி வேலும் ஒலித்தல்பற்றி முரசமும், அம்மேகத்தின் பெய்தற்குக் கைம்மாறு நோக்காமைபற்றி ஈகையும் உபமானஞ் செய்யப்படுதலால் உவமையணியாம்.] ஆகவே இக்கதைக்கு நாயகனாகிய நளராஜனுடைய வேல் முதலியவற்றி னுயர்வுதொனிக்கின்றது.

இதுமுதல் மூன்றுபாட்டுகளால் வெள்ளச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.

விலகி வில்லுமிழ் விரிகதிர் மணிபல வரன்றிப்
பொலன் முகட்டுயர் பொன்னெடுங் குன்றின்வீ ழருவி
குலவு வெண்டிரைக் குரைகட லுடுத்தபார் மடந்தை
அலர் முலைத்தலைத் துயல்வரு மாரமொத் துளதால்.

(ப - ரை) உயர்-(மலைகளில்) உயர்ந்த, நெடு-நெடிய, பொற்குன்றின்-இமயமலையின்மேல், பொலன் - அழகிய, முகட்டு - சிகரத்திலிருந்து, விலகி-இடைவிட்டு, வில்-ஒளியை, உமிழ்-வீசுகின்ற, விரி-விரிந்த, கதிர்-கிரணங்களையுடைய, பல-பலவகைப்பட்ட, மணி-முத்துக்களையும், வரன்றி-வாரிக்கொண்டு, வீழ்-வீழ்கின்ற, அருவி-வெள்ளமானது, குலவு-வளைவாகிய, வெள்-வெள்ளிய, திரை-அலைகளையுடைய, குரை - ஒலிக்கின்ற, கடல் - கடலாகிய (ஆடையை), உடுத்த-மருங்கிற் சூழக்கொண்டிருக்கிற, பார்மடந்தை - பூமிதேவியினுடைய, அலர் - அடிபரந்த, முலைத்தலை - (அம்மலையாகிய) முலையினிடத்து, துயல் வரும்-புரளுகின்ற, ஆரம்-முத்துமாலையை, ஒத்துளது-ஒத்திருக்கின்றது எ-று.

(போ - ரை.) பலவகைமுத்துக்களாவன: குறிஞ்சிக்கருப் பொருளாகிய யானைக்கொம்பு பன்றிப்பல், மூங்கில், இவை முதலியவற்றி லுண்டாகின்றவையாம் [பூமியிலே மடந்தை தன்மையையும் கடலிலே ஆடைத்தன்மையையும் மலையிலே முலைத்தன்மையையும் ஆரோபித்தலாகிய உருவகம் உறுப்பாகவும் அருவியின்கண் ஆரத்தன்மையைச் சம்பாவித்தலாகிய தற்குறிப்பு உருப்பியாகவும் வருதலால் உறுப்புறுப்பிக் கலவையணியாம்] (௩)

வேழ வெண்மருப் பெறிந்துவெள் ணித்திலம் வரன்றிக்
காழ கிற்றுணி சந்தொடு கையரிக் கொண்டு
கோழரைச் செழுங் குங்குமத் தடஞ்சினை சாடி
ஆழ்தி ரைக்கட லடுகிழித் தொழுகிய தன்றே

(ப - ரை.) வேழம்-யானைகளுடைய, வெள்-வெள்ளிய, மருப்பு-கொம்புகளை, எறிந்து - வீசிக்கொண்டும், வெள் - வெள்ளிய, நித்திலம்-முத்துகளை, வரன்றி - வாரிக்கொண்டு, காழ் - வயிரம்பொருந்திய, அகில்-அகின் மரங்களுடைய, துணி - துண்டங்களை, சந்தொடு - சந்தனமரங்களோடு, கையரிக்கொண்டு-சேர்த்துக்கொண்டும், கோழ்-வழுவழுப்பாகிய, அரை-அரையையுடைய, செழு-செழிய, குங்குமம் - குங்கும மரங்களுடைய, தடம்விசாலமாகிய, சினை-கிளைகளை, சாடி-முறித்துக்கொண்டும், ஆழ்- ஆழ்ந்த, திரை-அலைகளையுடைய, கடல்-கடலினது, அகடு-வயிற்றை, கீண்டு - கிழித்து, ஒழுகியது - (அவ்வெள்ளம்) சென்றது-எ-று, அன்று-ஏ-அசை.

(போ - ரை) அறித்தலென்பதற்குக் கையென்பது முன்னிடையாய்க் கூடி அவ்விரண்டும் ஒரு சொல்லாய் நின்றன, கைகூடல் கால்சீத்தல் என்பன போல மரங்களுக்குக் கோழரை, பொகுட்டரை, பொரியரை, முள்ளரை என்று சொல்லப்பட்டவற்றுள்ளே கோழரை-சருச்சரை யில்லாத அரையாம், பின். கோழரையரம்பை சாய்க்குங் குடக . நாடாளும்வந்தே. என்பதனாலுமறிக. (௪)

கங்கை யென்றுல கேத்திய கடவுண்மா நதிவெண்
சங்கு சூலுளைந் தலறிய தடம்பணை தவழ்ந்து
கொங் குயிர்த்த பூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி
அங்கண் மாநிலத் தமுதெனப் பரந்ததை யன்றே.

(ப - ரை.) கங்கையென்று - கங்காநதியென்று, உலகு - உயர்ந்தோரால், எத்திய-துதிசெய்யப்பட்ட, கடவுள் - தெய்வத்தன்மை பொருந்திய, மாநதி-பெரிய நதியானது, வெள் - வெள்ளிய, சங்கு - சங்குகளானவை, சூல் - சூலினாலே உளைந்து - வருந்தி, அலறிய - இரையும்படியாக, தடம்-விசாலமாகிய பணை-கழனிகளிலே, தவழ்ந்து-ஊர்ந்து, கொங்கு - வாசனையை, உயிர்த்த-வீசுகின்ற, பூ-மலர்களையுடைய, தடத்து-தடாகங்களில், உலாய்-திரிந்து. பல-பலவகைப்பட்ட, குளம் - குளங்களையும், நிறப்பி - நிறைத்து, அங்கண்-அழகிய இடத்தையுடைய, மா-பெரிய, நிலத்து-பூமிக்கு, அமுதென- அமிர்தமென்று சொல்லும்படியாக, பரந்தது-பரவிற்கு, எ-று. ஐ-சாரியை, அன்று-ஏ-அசைகள்.

(போ - ரை.) உலகுக்கு உயர்ந்தோரென்பது 'உலகமென்ப துயர்ந் தோர் மாட்டே' என்பதனாலறிக. கங்காநதிக்குத் தெய்வத் தன்மையாவது தன்னின் மூழ்கியோரைப் பரிசுத்தராக்கலாம். அலறிய வென்பது செய்யிய வென்வாய்ப் பாட்டு வினையெச்சம். உயிர்த்த வென்பது காலவழுவமைதி, பல வகைக் குளமாவன ஏரி, கயம், ஓடை, குட்டம் மடுமுதலியன நிலத்தமுதென வெனவே தேவருலகுக்குக் கடலமிர்தம்போ லென்னு முவமை யணி தொனிக்கின்றது. (௬)

இதுமுதல் ஐந்துபாட்டுகளால் வயல் வளச்சிறப்புச் சொல்லப்படுகின்றது

ஒழுகு தீம்புனல் சிறைசெயு மோதையு முழுநர்
குழுவின் சும்மையு முழத்தியர் குரவையி னார்ப்புங்
கழனி வாழ்கென வான்முளை வித்துநர் கலிப்பும்
மழை முழக்கொடு மாறுகொண் டொலித்தன மாதோ

(ப - ரை) ஒழுகு-பெருகியோடுகின்ற, தீ-மதுரம்பொருந்திய, புனல்-நீரை, சிறைசெயும்-கரைகோலித் தடுத்தற்கணுண்டாகின்ற, ஓதையும் - ஓசையும், உழுநர் - ஏருழுகின்றவருடைய, குழுவின்-கூட்டத்தினது, சும்மையும்-ஓசையும், உழத்தியர்-கடைசியரது, குரவையின் - குரவைக் கூத்தினது, ஆர்ப்பும்-ஓசையும், கழனி-வயல்களானவை, வாழ்கென-வாழ்கவென்று, வால்-வெள்ளிய, முளை - நெல்லு முளைகளை, வித்துநர் - விதைக்கின்றவருடைய, கலிப்பும்-ஓசையும், மழை-மேகத்தினது, முழக்கொடு-ஓசையுடனே, மாறுகொண்டு-பகைமைகொண்டு, ஒலித்தன-முழங்கின எ-று மாது ஓ-அசைகள்.

(போ - ரை.) வாழ்கவென்பது கடை..குறைந்தது. 'குரவை - கைகோத் தாடல்' குரவைக்கூத்தே கைகோர்த்தாடல், என்பதனாலறிக கரைகோலுதற் கணுண்டாகிய வோசை முதலியவற்றிற்கு மழை முழக்கத்தோடு மாறுகொள்ளுதலாகிய சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தால் தொடர்புயர்வு நவிற்சியணியாம் இதனால் அவ்வொலிகள் மேக வொலியைப்போலிருக்கின்றனவென்னும் உவமையணி யொலிக்கின்றது. (௭)

வள்ளவாய்ச் செழுங் கமலத்தில் வண்டுபாண் மிழற்ற
அள்ளலங் கருஞ் சேற்றிடை யாமைகண் படுக்கும்
பள்ள நீர்ச்செழும் பணைதொறும் பணிலமுத் துயிர்க்கும்
கள்ளுலா மலர்ப் பொதும்பரிற் களிமயி லகவும்

(ப - ரை) வண்டு - வண்டுகளானவை, வள்ளம் - கிண்ணம்போன்ற, வாய் – வாயையுடைய, செழு - செழிய, கமலத்தில் - தாமரை மலர்களிலே பாண் - இசைகளை, மிழற்றும் - பாடிக்கொண்டிருக்கும், ஆமை - கூர்மங்களானவை, அள்ளல் - குழம்பாகிய, கரு - கரிய, சேற்றிடை - சேற்றின்கண்,

கண்படுக்கும்-தூங்கிக் கொண்டிருக்கும், பணிலம்-சங்குகளானவை, பள்ளம்-ஆழமாகிய, நீர்-நீரையுடைய, செழு-செழிய, பணைதோறும்-கழனிகளிளெல்லாம், முத்து-முத்துகளை, உயிர்க்கும்-சொரியும், களி-களிப்பையுடைய, மயில்-மயில்களானவை, கள்-தேனானது, உலாம் - பெருகின்ற, மலர் - மலர்களையுடைய, பொதும்பரில்-சோலைகளிலே, அகவும்-ஆடிக்கொண்டிருக்கும் எ - று. அம்-சாரியை. (எ)

பண்ணைவாய்த்தவழ் பணிலங்க ளுயிர்த்தவெண் முத்துங்
கண்ணுடைக்கரும் பீன்றவெண் முத்தமுங் கமழும்
தண்ணந்தாமரை சொரிந்தவெண் முத்தமுந் தயங்கி
வெண்ணிலாக்கதிர் விரித்தலிற் குமுதம்வாய் விள்ளும்.

(ப - ரை.) பண்ணைவாய்-கழனிகளிடத்து, தவழ்-தவழ்கின்ற, பணிலங்கள்-சங்குகளால், உயிர்த்த-தரப்பட்ட, வெள்-வெள்ளிய, முத்தும்-முத்துகளும், கண்-கணுக்களை, உடை-உடைய, கரும்பு-கரும்புகளால், ஈன்ற-தரப்பட்ட, வெள்-வெள்ளிய, முத்தமும்-முத்துகளும், கமழும்-பரிமளிக்கின்ற, தண்-குளிர்ச்சிபொருந்திய, அம்-அழகிய, தாமரை-தாமரைமலர்களால், சொரிந்த-தரப்பட்ட, வெள்-வெள்ளிய, முத்தமும்-முத்துகளும், தயங்கி-விளங்கி, வெள்-வெள்ளிய, நிலா-சந்திரனது, கதிர்-கிரணத்தை, விரித்தலின்-பரப்புதலினாலே, குமுதம்-அல்லிமலர்களானவை, வாய்விள்ளும்-(சந்திரோதயமில்லாத காலத்திலும்) மலரும், எ - று.

(பொ - ரை.) சங்கு முதலானவைகளிலே முத்துப்பிறக்கு மென்பது, "தந்திவராக மருப்பிப்பிபூகந்தலைகதலி, நந்துசலஞ் சலமீன்றலை கொக்கு நளினமின்னார், கந்தரஞ்சாலி கழைகன்னலாவின் பல்கட்செவிகா, ரிந்துவுடும்புகதிர்முத்தமீனு மிருபதுமே" என்பதனாலறிக. முத்தாகியவுபமேயத்திலே சந்திரனாகிய வுபமானத்தின் குணத்தை யாரோபித்தலாற் காட்சியணி. (அ)

விழுந்தவஞ்சிறை வண்டின மிதிப்பமெல் லரும்பு
கிழிந்துவார்தரு தேறலுங் கிளர்சினைப் பலவின்
பழங்கனிந்துவீழ் தேறலும் பழனங்க டோறும்
வழிந்துபாய்தலின் வானுற வளர்வன செந்நெல்.

(ப - ரை.) விழுந்த-(மேல்) விழுந்த, அம்-அழகிய, சிறை - சிறைகளையுடைய, வண்டு-வண்டுகளுடைய, இனம்-கூட்டங்களானவை, மிதிப்ப-துவைக்க, மெல்-மெல்லிய, அரும்புகளானவை, கிழிந்து-கிழிய, வார்தரு-(அவைகளிலிருந்து) ஒழுகுகிற, தேறலும்-தேனும், கிளர்-விளங்குகின்ற, சினை-கிளைகளையுடைய, பலவின்-பலாமரங்களுடைய, பழம் - பழங்களானவை, கனிந்து-கனிய, வீழ்-(அவைகளிலிருந்து) விழுகின்ற, தேறலும்-தேனும், வழிந்து-பெ

ருக்கெடுத்து, பழனங்கடோறுங்-கழனிகளிலெல்லாம், பாய்தலின்-பாய்தலி னாலே, வான்-ஆகாசத்தை, உற-தொடும்படி, செந்நெல்-செந்நெற்பயிர்களா னவை, வளர்வன-வளரும், எ - று.

(போ - ரை.) கிழிய, கனிய என்பன கிழிந்து கனிந்து எனத்திரிந்து வந்தன. வானின்றுலகம் வழங்கி என்பதில் நிற்பவென்பது நின்றெனத்திரிந் தமைபோல செந்நெற்பயிருக்குந் தேறலைக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம் பந்தத்தைக் கற்பித்தமையால் தொடர்புயர்புநவிற்சியணி. (௯)

கூனிரும்பினிற் குறைத்தறி சும்மையிற் கொடுபோய்
மேனிவந்துயர் வரையெனப் போர்பல வேய்ந்து
நீணிறக்கரும் பகட்டினாற் றெழித்துவை நீத்த
தூனிறத்தநெற் டண்டியிற் பற்பலர் தொகுப்பார்.

(ப - ரை.) கூனிரும்பினில்-அரிவாளினால், குறைத்து-அறுத்து, அரி-(அவ்வறுக்கப்பட்ட) அரிகளை, சும்மையில்-சுமைகளாக்கி, கொடுபோய்-கொ ண்டுபோய், மேல்-மேல், நிவந்துயர்-ஓங்கிய, வரையென-மலைகள் போலத் (தோன்ற), பல-பலவாகிய, போர்-போர்களை, வேய்ந்து-போட்டு, நீணிறம்-நீலநிறம்பொருந்திய, கரு-பெரிய, பகட்டினால்-கடாக்களினாலே, தெழித்து-துவைப்பித்து, வை - வைக்கோலை, நீத்த-கழித்த, தூ-பரிசுத்தமாகிய, நிற த்த-சாந்தியையுடைய, நெல்-நெற்களை, பண்டியில்-பண்டிகளாற் (கொண்டு போய்), பற்பலர்-பலபல சாதியார்களும், தொகுப்பார்-(களஞ்சியங்களிலே) நிறைப்பார்கள். எ - று.

(போ - ரை.) கூனிரும்பு—இருபெயரொட்டாகுபெயர் நிவந்துயர்—ஒருபொருளைக் குறித்த இருசொற்கள். இதற்கு 'ஒருபொருளிருசொற்பிரிவில் வரையார்' என்பது விதி. நீல்-கடைக்குறை. (௧௦)

இதுமுதற் பதினறுபாட்டுகளால் அந்நாட்டினுள்ளோர்
செல்வமுதலிய சிறப்புகள் சொல்லப்படுகின்றன.

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

குரும்பைமென் முலையா ராடக் கூந்தலி னறவந் தோய்ந்த
இரும்புன லாறு பாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க்
கருங்கடற் புலவு நீங்கி நறுமணங் கமழு மென்றான்
முருந்துறழ் மூர லார்த மிகுதியை மொழிய லாமோ.

(ப - ரை.) குரும்பை-தென்னம்பிஞ்சுபோன்ற, மெல்-மெல்லிய, முலை யார்-முலைகளையுடைய மாதர், ஆட-முழுக, கூந்தலில் - (அவர்) தலைமயிரிலு ள்ள, நறவம்-சாந்தத்தோடு, தோய்ந்த-கலந்த, இரு-பெரிய, புனல்-நீரானது, ஆறு-ஆற்றினாலே (போய்), பாய்-விழ, எறி-வீசுகின்ற, திரை-அலைகளை, சுரு ட்டும்-மடக்குகின்ற, தெள்-தெளிவுபொருந்திய, நீர்-நீரையுடைய, கரு-கரிய,

கடல்-கடலினது, புலவு-புலானாற்றத்தை, நீங்கி - நீங்கச்செய்து, நறுமணம்-நல்லமணமானது, கமழுமென்றால் - (அக்கடலிடத்தே) மணக்குமென்றால், முருந்து-மயிலிறகினடியை, உறழ்-ஒத்த, மூரலாற்-பற்களையுடைய அவரது, மிகுதியை-பெருக்கத்தை, மொழியலாமோ-(நான்) சொல்லலாமோ, எ - று. தம்சாரியை, ஓ-எதிர்மறை, எ - று.

(போ - ரை.) நறவமென்னும் வாசனைப்பெயர் அதனையுடைய மயிர்ச்சாந்தத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். நீங்கியென்பது பிறவினைப்பொருளைத்தந்தது, "குடிபொன்றிக்குற்றமுமாங்கேதரும்" என்பதிற் பொன்றியென்பதுபோல. அந்நாட்டுமகளிரது செல்வ மிகுதியைச் சொல்லுதலால் வீறுகோலணியாம். (கக)

பூமலி தடங்க டோறும் புனல்குடை மகளி ரீட்டங்
காமரு கழனி தோறுங் கடைசியர் குரவை யீட்டந்
தேமலர்ச் சோலை தோறுஞ் செழுங்குயிற் றொழுதி யீட்டங்
கோமறு கிடங்க டோறுங் குனில்பொரு முரசி னீட்டம்.

(ப - ரை.) பூ-மலர்களாலே, மலி-நிறைந்த, தடங்கடோறும்-குளங்களிலெல்லாம், புனல்குடை-நீர்விளையாடுகின்ற, மகளிர்-மாதரது, ஈட்டம்-கூட்டமும், காமர்-அழகிய, கழனிதோறும்-வயல்களிளெல்லாம், குரவை-கைதோத்தாடுதலையுடைய, கடைசியர்-உழத்தியரது, ஈட்டம்-கூட்டமும், தேம்-வாசனைபொருந்திய, மலர்-மலர்களையுடைய, சோலைதோறும்-சோலைகளிலெல்லாம், தொழுதி-ஒலித்தலையுடைய, செழு-செழிய, குயில்-குயில்களது, ஈட்டம்-கூட்டமும், கோ-அரசரது, மறுகு-வீதிகளுடைய, இடங்கடோறும் - இடங்களிலெல்லாம், குணில்-குறுந்தடியால், பொரு-அடிக்கப்படுகின்ற, முரசின்-முரசங்களது, ஈட்டம்-கூட்டமும், (இருக்கும்) எ - று.

(போ -ரை.) காமரு-என்பதில் உகரம்சாரியை. தொழுதி-புள்ளொலி. கோசாதி யொருமை. (க௨)

கறுவொடு மொன்றோ டொன்று காரண மின்றிச் சீறிப்
பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செயப் பொருத்து மோதை
செறிமயிர்த் தகர்க டம்மிற் றீயெழத் தாக்க ஞெக்கி
யறைகழல் வீர ரார்க்கு மமலையை யவிக்கு மன்றே.

(ப - ரை.) பொறியுடை-புள்ளிகளையுடைய, குறும்பூழ்-காடைகளானவை, தம்மில்-தம்முள்ளே, ஒன்றொடொன்று - ஒன்றுடனொன்று, காரணமின்றி-ஏதுவில்லாமல், கறுவொடும்-கறுவுதலுடனே, சீறி - சீறிக்கொண்டு, போர்-சண்டையை, செய-செய்யும்படியாக, பொருத்தும்-(அவற்றைக்) கூட்டுதற்கணுண்டாகின்ற, ஓதை - (சிறுவ) ரோசையானது, செறி - நெருங்கிய,

மயிர்-மயிர்களையுடைய, தகர்கள்-ஆட்டுக்கடாக்கள், தம்மில்-தம்முள்ளே, தீ-ஒருப்பானது, எழ-தோன்ற, தாக்கல்-(ஒன்றையொன்) றிடித்தலை, நோக்கி-பார்த்து, அறை-ஒலிக்கின்ற, கழல்-வீரக்கழலையுடைய. வீரர் - வீரரானவர், ஆர்க்கும்-(ஆச்சரியப்பட்டு) ஒலிக்கின்ற, அமலையை-ஓசையை-அவிக்கும்-அடக்கும் எ - று.

(போ - ரை.) தகுதி பற்றிக்காடைச் சண்டைக்குச் சிறுவரென்பது வருவிக்கப் பட்டது. கழல்-வீரர்காலணி. "வீரத்தில் வீக்கியகழலே யாடவர் கான் மிசை யணிவடம்" என்பதனாலறிக. (கங)

மாதர்மென் முல்லை யீன்ற வான்முக யனைய மூரல்
கோதறு கருனை தீம்பால் கொழுங்கனி யிவற்றி னோடு
மாதுலர் யாவ ரென்ன வதிர்குரன் முரசிற் சாற்றி
வேதியர்க் கருத்திப் பின்னர் விருந்தொடு நுகர்வர் மாதோ.

(ப - ரை.) ஆதுலர்-யாசகர், யாவரென்ன-யாவரென்று, அதிர் - அதிர்க்கின்ற, குரல்-ஓசையையுடைய, முரசின்-முரசினாலே, சாற்றி-வினவி (வருவித்து,) மாதர்-அழகிய, மெல்-மெல்லிய, முல்லை - முல்லைக்கொடியினால், ஈன்ற-தரப்பட்ட, வால்-வெள்ளிய, முகயனைய-அரும்புகள் போலும், மூரல்-சோறும், கோதறு-குற்றமற்ற, கருனை-பொறிக்கறியும், தீ - தித்திப்பாகிய, பால்-பாலும், கொழு-செழிய, கனி-பழமும், இவற்றினோடும் - ஆகிய இவற்றோடு மற்றையுணவுகளையும், வேதியர்க்கு-அந்தணரை, அருத்தி- (முன்னே) உண்பித்து, பின்னர்-(அதன்) பின்பு, விருந்தோடும்-(சுற்றத்தார் முதலியோரோடன்றி) விருந்தின ரோடும், நுகர்வர்-(அந்நாட்டோர்) உண்பார், எ-று.

(போ - ரை.) மாது-ஓ-அசைகள். உம்மை இரண்டும் எச்சம். வேதியர்க்கு—உருபுமயக்கம். (கச)

முல்லையங் கோதை நல்லார் முகமதி வெயர்வு தோன்ற
வல்லிநுண் மருங்கு நோவ வால்வளை வாய்விட் டார்ப்ப
மெல்விரல் காந்தட் சேப்ப வெண்டயிர் கடைய மோதை
கொல்புலி முழக்க மென்ன வயின்றொருங் குளிரு மாதோ.

(ப - ரை.) முல்லை-முல்லைமலர்களைச் சூடிய, அம்-அழகிய, கோதை-கூந்தலையுடைய, நல்லார்-இடைச்சியர், முகமதி-(தமது) முகமாகிய சந்திரனிடத்து, வெயர்வு வேர்வையானது, தோன்ற-உண்டாகவும், வல்லி-பூங்கொடிபோலும், நுண்-நுட்பமாகிய, மருங்குல்-இடையானது, நோவ-வருந்தவும், வால்-வெள்ளிய, வளை-சங்கவளையல்களானவை, வாய்விட்டு - ஒன்றோடொன்றுதாக்குண்டு, ஆர்ப்ப-ஒலிக்கவும், மெல்-மெல்லிய, விரல்-விரல்கள், காந்தள்-காந்தண்மலர்போல, சேப்ப-சிவக்கவும், வெள்-வெள்ளிய, தயிர்-தயிரை,

கடையும் - கடைதலினாலுண்டாகின்ற, ஓசை - ஓசையானது, கொல் - கொல்லுகின்ற, புலி-புலியானது முழக்கமென்ன - உறுமுதல்போல, வயின்றொறும்-(அவர்) வீடுதோறும், குளிறும் - ஒலிக்கும் - எ - று. மாது - அசைகள்.

(போ - ரை.) நிலைமைத்திட்டுத் தயிர்கடைக்கின்ற இடைச்சிகளுக்கு அப்போது உண்டாகின்ற முகம் வெயர்த்தலாகிய சுபாவத்தைச் சொல்லுதலாகிய தன்மை நவிற்சியணியுங் கொல்புலிமுழக்கமெனக்குளிறுறு மென்னும் உவமையணியுஞ் சேர்ந்துவருதலால் சேர்வையணியாம். (கரு)

பூங்கரும் புடைந்த தீஞ்சா றடுபுகை புயலென் றெண்ணி
மாங்குயிற் றொகுதி யாவும் வாய்விடா தொழிந்த மஞ்ஞை
தூங்கிசை வண்டுந் தேனுஞ் சுரும்பொடு ஞிமிறும் பாடத்
தேங்கமழ் சோலை தோறுஞ் சிறைவிரித் தாடு மாதோ.

(ப - ரை.) உடைந்த - (ஆலையிற்) சிதைந்த, பூ - அழகிய, கரும்பு-கரும்புகளுடைய, தீ - தித்திப்பாகிய, சாறு - சாற்றை, அடு - காய்ச்சுமிடத் தெழுகின்ற, புகை-தூமத்தை, புயலென்று - மேகமென்று, எண்ணி - நினைத்து, மா - மாமரங்களிலுள்ள, குயில் - குயில்களுடைய, தொகுதியாவும் - கூட்டங்களெல்லாம், வாய்விடாதொழிந்த - கூவாதொழிந்தனவாக, மஞ்ஞை-மயில்களானவை, தூங்கிசை - நாட்டிய ராகத்தை, வண்டும் - கருவண்டுகளும், தேனும் - தேன்வண்டுகளும், சுரும்பொடு - பொறிவண்டுகளுடனே, ஞிமிறும் - பொன்வண்டுகளும், பாட - பாடுதல்செய்ய, தேம் - தேனானது, கமழ் - மணக்கின்ற, சோலைதோறும் - சோலைகளிலெல்லாம், சிறை - கலாபத்தை, விரித்து - விரித்துக்கொண்டு, ஆடும் - கூத்தாடும். - எ - று. மாது ஓ - அசைகள்.

(போ - ரை.) ஒழிந்தவென்பது முற்றெச்சமாய்வந்தது; "பாயுமாரி போற்பகழி சிந்தினை, ராயர்மத்தெறி தயிரினையினர்" இதிற்சிந்தினரென்பது சிந்தவென்னும் பொருளைத்தந்தமைபோல, வண்டு, தேன் சுரும்பு ஞிமிறு இந்நான்கும் வண்டுகளின் ஜாதிபேதம். "மங்கைநல்லவர் கண்ணுமனமும் போன், றெங்கு நாடியிடறுஞ் சுரும்புகள். வண்டுகாண்மகிழ் தேனினங்காண்மது, வுண்டு தேக்கிடு மொண்ஞிமி றீட்டங்காள்" என்பதனாலறிக. தேன் தேமென ஈறு இன்பமும் உண்டாகுகைசுபாவம். புகையை மேகமென்று மயங்குதலினாலே மயக்கவணியாகும். (கசு)

அரக்கெறி குமுதச் செவ்வா யலர்முலை யந்நலார் தந்
திருக்கிளர் கமலம் பூத்த சேயரிக் கண்ணும் வாவி
உருக்கிளர் குவளைப் போதும் வேற்றுமை யுணரா தற்று
வரிச்சிறைத் தும்பி யோடு வண்டின மருளு மாதோ.

(ப - ரை.) அரக்கு - சிவப்புநிறத்தை, எறி - வீசுகின்ற, குமுதம்-அல்லிமலர்போலும், செம் - செய்ய, வாய் - வாயையும், அலர் - அடிபரந்த, முலை - முலைகளையுடைய, அங்கலார் - அந்நாட்டுமாதருடைய, திரு - அழகினால், கிளர் - விளங்குகின்ற, கமலம் - தாமரைப்பூவாகிய (முகங்களிடத்து), பூத்த - மலர்ந்த, சேய் - செய்ய, அரி- இரேகைகளையுடைய, கண்ணும் - கண்களுக்கும், (கமலம்) - தாமரை மலர்களிடத்து, உரு - அழகினால், கிளர் - விளங்குகின்ற, குவளைபோலும் - நீலோற்பல மலர்களுக்கும், வாவி-குளத்தின்கண், வேற்றுமை - பேதத்தை, உணராது - அறியமாட்டாமல், உற்ற - (தேனுண்ண) அடைந்த, வரி - கீற்றுகளையுடைய, சிறை - சிறைகளையுடைய, தும்பியோடு - தும்பிகளுடன், வண்டு வண்டுகளுடைய, இனம்-கூட்டம், மருளும் - மயங்கும், - எ - று, மாதுஓ - அசைகள்.

(பொ - ரை.) கமலங் குவளைக்குங் கூட்டப்பட்டது. வாவியிடத்தென்றதனால் அங்கலார் நீர்விளையாடு மகளிரெனக்கொள்க. அவர்முகங்களைச்சேர்ந்த கண்களுக்குந் தாமரைமலர்களைச் சேர்ந்த குவளைகளுக்கும் விசேடந்தோற்றுமையைச் சொல்லுதலாற் பொதுமையணியாகும். (கஎ)

அல்லியங் கோதை மாத ரன்பொடு வளர்த்த முல்லை
மெல்லரும் பீன்ற தென்னு விழாவயர் முழவி னேடு
மல்லலங் திணிதோண் மைந்தர் மங்கையர் வதுவை யாற்றும்
பல்லிய முழக்க மார்க்கும் பரவையோ டிகலு மாதோ.

(ப- ரை.) அல்லி - அகவிதழ்களாகிய, அம் - அழகிய, கோதை மாலையையுடைய, மாதர் மகளிரானவர், அன்பொடு - அன்புடனே, வளர்ந்த, (தம்மால்) வளர்க்கப்பட்ட, முல்லை - முல்லைக்கொடியானது, மெல் - மெல்லிய, அரும்பு-அரும்புகளை, ஈன்றதென்னு - தந்ததென்று நினைத்து, விழா-(அதற்குத்) திருவிழாவை, அயர் - செய்யுமிடத்துண்டாகின்ற,முழவினேடு-வாத்தியவொலியோடு, மல் - மற்போரில், உயர்ந்த - உயர்ந்த, திணி-வலிமை பொருந்திய, தோள் - தோள்களுடைய மைந்தர் - காளையரானவர், மங்கையர் - மங்கைப்பருவப்பெண்களை, வதுவையாற்றும், விவாகஞ்செய்தற்கணுண்டாகின்ற, பல்லியம் - பலவகைவாத்தியங்களது, முழக்கம் - ஓசையானது, ஆர்க்கும் - ஒலிக்கின்ற, பரவையோடு - கடலொலியோடு, இகலும் பகைக்கும் - எ - று, மாது-ஓ-அசைகள்

(பொ - ரை.) கற்புடையமாதருக்கு முல்லைப்பூ உரித்தாதலால் அன்பொடுவளர்த்த முல்லையென்றார். இது "முல்லையந்தொடை யருந்ததிமுதலெ ழுமுனிவ, ரில்லறம்புரிதுணைவியர்" என்பதனாலுமறிக. அதற்கு விழாவாது பருவப் பெண்ணுக்கு முதற்பூப்பிலே செய்யப்படுஞ்சிறப்பை அதன்முதற்பூப்பிலே செய்தல் வாத்தியவோசைக்குங் கடலோசைக்கும் பகையில்லாமையிலே பகையைக்கற்பித்தமையினாலே தொடர்புயர்வு நவிற்சியணியாகும். ()

அவிரிழை சுமக்க லாற்றா தந்நலார்பரிந்து நீத்த
திவளொளி மணியு முத்துஞ் சிந்திய முன்றி றோறுங்
குவிமுலைக் கயவாய்ச் செங்கட் குடம்புரை செருத்தன் மேதி
கவையடி பெயர்ப்ப மாழ்கிக் காறளர்ந் தொதுங்கு மன்றே.

(ப - ரை.) அந்நலார் - அத்தேசத்து மாதரால், சுமக்கலாற்றாது - சுமக்க மாட்டாமல், பரிந்து - வருந்தி, நீத்த-களைந்தெறியப்பட்ட, அவிர் - ஒளி செய்கின்ற, இழை - ஆபரணங்களையுடைய, திவள் - அசையாநின்ற, ஒளி-ஒளியையுடைய, மணியும்-பலவிதமணிகளும்,முத்தும் - முத்துகளும்,சிந்திய இறைந்துகிடக்கின்ற, முன்றிறோறும் - வீட்டு முன்னிடந்தோறும், குவி - குவிந்த, முலை - முலைகளையும், கயம் - பெரியதாகிய, வாய் - வாயையும், செம் - செய்ய, கண் - கண்களையும், குடம்புரை - குடம்போலும், செருத்தல் - மடியையுமுடைய. மேதி - எருமைகளானவை, கவை - பிளப்பையுடைய, அடி - அடிகளை, பெயர்ப்ப - எடுத்துவைக்க, மாழ்கி - வருந்தி,கால் - கால்களானவை, தளர்ந்து - சோர்ந்து. ஒதுங்கும் - (பக்கங்களிலே) விளங்கும் - எ - று. அன்று ஏ - அசைகள்.

(போ - ரை.) இன்முன் முன்றிலெனநிலைமாறிப் போலியாய் வந்தது அடி - கீழ்க்கால், தளர்ந்து என்னுஞ்சினைவினை ஒதுங்குமென்னு முதல்வினையோடு முடிந்தது இதற்கு "அம்முக்கிளவியுஞ் சினைவினை தோன்றிற் சினையொடு முடியாமுதலொடு முடியினும் வினையோரனைய" என்பது விதி. அம்மணிகளு முத்துகளுங் குளம்பின் சந்தி லேறுண்டால் நோமென்றஞ்சி ஒதுங்கு மென்பது கருத்தாயிற்று செல்வமிகுதியைச் சொல்லுதலால் வீறு கோல்ணியாம். (கக)

பொரியரைத் தேமா நெற்றிப் பூங்கனி யிழிந்த தேனும்
விரிதலை யரம்பை யீன்ற மென்பழ னுகுத்த தேனு
முருகவிழ் சுளைவாய் விண்ட முட்புறக் கனியின் றேனுங்
குருகுபாய் தடமும் யாறுங் குறைவறப் பெருகு மன்றே.

(ப - ரை.) பொரி - பொருக்குகளையுடைய, அரை - அரையையுடைய, தேமா - தேமாவினது, பூ - அழகிய, கனி - பழங்களானவை, நெற்றி-முதிர, இழிந்த - (அவைகளிலிருந்) தொழுகிய, தேனும் - மதுவும், விரி - விரிந்த. தலை - தலையையுடைய, அரம்பை - வாழைகளால், ஈன்ற - தரப்பட்ட, மெல் - மெல்லிய, பழன் - பழங்கள், உகுத்த-சொரிந்த, தேனும் - மதுவும், விண்ட - வெடித்த, முட்புறக்கனியின் - பலாப்பழங்களினுடைய,முருகு-பரிமளாமனது, அவிழ் - விரிகின்ற, சுளைவாய் - சுளைவாயிலிருந் (தொழுகிய) தேனும் - மதுவும், குருகு - பறவைகளானவை, பாய் - பாய்கின்ற, தடமும் - எரிகளிலும், யாறும் - நதிகளிலும், குறைவற - குறைவுதீர, பெருகும் - பெருகிப்பாயும், எ - று.

(பொ - ரை.) நெற்றி வினையெச்சத்திரிபு. முட்புறக் கனியென்பது முள்ளுகளைப் புறத்திலுடைய கனியாம் குறைவு வெயிலாதிகளாலுண்டாவது. முக்கனிகளின் சாற்றிற்கும் எரிநதிகளுக்குஞ் சம்பந்தமில்லாமையிலே சம்பந்தத்தைக் கற்பித்தலினாலே தொடர்புயர்வு நவிற்சியாம். (உ०)

அருமறைக் கிழவ ருள்ளத் தவாக்கெட வன்பி னல்கும்
பெருநிதிக் குப்பை யோடு பெய்புனல் பெருகி யோடி
வரிவளை யலறியீன்ற மணியிள நிலவு காலுந்
திருவநீள் கழனி தோறுஞ் செந்நெலை வளர்க்கு மாதோ.

(ப - ரை.) அரு - அரிய, மறைக்கிழவர் - வேதத்திற்குரிய பார்ப்பாருடைய, உள்ளத்து-மனத்திலுள்ள, அவா - (பொரு) ளாசையானது, கெட - அழிய, அன்பின் - பத்தியினாலே, நல்கும் - கொடுக்கப்படுகின்ற. பெரு - பெரிய, நிதி - பொருள்களுடைய, குப்பையோடு - குவியல்களோடு, பெய் - (விதிப்படி) வார்க்கப்படுகின்ற, புனல் - நீரானது, செருகு பெருக்கெடுத்து, ஓடி - விரைந்துபோய், வரி - இரேகைகளையுடைய, வளை - சங்குகளால், அலறி - கூவி, ஈன்ற - தரப்பட்ட, மணி - முத்துகளானவை, இள - இளமைபொருந்திய; நிலவு-சந்திரிகையை, காலும் - வீசுகின்ற, திரு - அழகிய, நீள் - நீண்டிருக்கின்ற, கழனிதோறும் - கழனிகளெல்லாம், செந்நெலை - செந்நெற்பயிரை, வளர்க்கும் - வளர்விக்கும் - எ - று. அகரம். சாரியை, மாது - ஓ அசைகள்,

(பொ - ரை.) ஆச்சரியப் படத்தக்கதாயும் பொய்யாகியும் இருக்கின்ற தானப்புகழ்ச்சியாகிய மிகுதி நவிற்சியணியானது தான் நீருக்கும்பயிருக்குஞ் சம்பந்தத்தை உண்டாக்குகையாகிய தொடர்புயர்வு நவிற்சியணிக்கு அங்கமாகவருதலால் உறுப்புறுப்பிக் கலவையணியாம். (உக)

நிலவுவெண் முத்தும் பொன்னு நீனிற மணியுஞ் சாந்துந்
தலைமயக் குற்ற வாற்றாற் றண்மதி தவழுங் கோட்டு
மலைவளம் பெரிதென் கோயான் வால்வளை பரந்து மேயும்
அலைவளம் பெரிதென் கோயான் யாதென வறைவன் மாதோ.

(ப - ரை.) நிலவு- சந்திரிவகயையுடைய, வெள் - வெள்ளிய, முத்தும்- முத்துகளும், பொன்னும் - களங்களும், நீனிறம் - நீலநிறத்தையுடைய, மணியும் - மணிகளும், சாந்தும் - சந்தனக்கட்டைகளும், தலைமயக்குற்ற வாற்றல் - கலந்துகிடக்கையால், தண் - தண்ணிய, மதி - சந்திரனால், தவழும் - ஊர்ந்து செல்லப்படுகின்ற, கோட்டு - சிகரத்தையுடைய, மலை - மலையினது, வளம் - வளத்தை, யான் - நான், பெரிதென்கோ - அதிகமென்று சொல்லுவேனோ, வால் - வெண்மைபொருந்திய; வளை - சங்குகளானவை, பரந்து - பரவி, மேயும் - மேய்கின்ற, அலை - அலைகளையுடைய கடலினது, வளம் - வளத்தை, யான் - நான், பெரிதென்கோ - அதிகமென்று

சொல்லுவேனோ, யாதென-(இவற்றுள்ளே) எதை (அதிக) மென்று, அறை வல்-(யான்) சொல்லுவேன், எ - று.

(போ - ரை.) முத்து முதலியவற்றை விரவிக்கூறினாரேனும் உரிமை பற்றிக் கடலுக்கு முத்து நீலமணியும், மலைக்குப் பொன்னுஞ் சாந்துங்கூட்டப்படும். நீலமணி கடலிற் பிறவாதேனுங் கடலகத் துள்ளவேறு தீவிற் பிறத்தல்பற்றி அதன்வளமெனப்பட்டது. மலைக்குங் கடலுக்கும் விசேடணங்களை மிகுத்துச் சொன்னமையால் அகின்முதலிய மற்றைமலை வளங்களும் பவளமுதலிய மற்றைக் கடல் வளங்களுங் கொள்ளப்படும். நானிலங்களின் முதனிலவளமுங் கடைநிலவளமுங் கூறவே மற்றை நிலவளங்களுங்கூறாதே யமையும் [இதில் ஐயவணியினாலே அப்பலவளங்களு மிகுந் திருக்கின்றன வென்னும் பொருள் தொனிக்கின்றது.] (உஉ)

உளங்கனிந் தாய ரூதும் வேயிசை செவியி னோர்ந்து
துளங்குவெள் ளருவிக் குன்றிற் றோகைகண் டுஞ்சுந் தெண்ணீர்
வளங்கெழு மருத வேலி வண்டுதா லாட்ட நெய்தல்
இளங்களிக் குமரி யன்ன மின்றுயில் கூறு மாதோ.

(ப - ரை.) ஆயர்-(முல்லைநிலத்துள்ள) இடையரால்,உளங்கனிந்து-மனமகிழ்ந்து, ஊதும்-ஊதப்படுகின்ற, வேய்-புள்ளாங்குழல்களுடைய, இசை-இராகத்தை, செவியின்-காதுகளினாலே, ஓர்ந்து-கேட்டு, துளங்கு-அசைகின்ற, வெள்-வெள்ளிய, அருவி-வெள்ளங்களையுடைய, குன்றில்-குறிஞ்சி நிலத்தில், தோகை-மயில்களானவை, கண்டுஞ்சும்-தூங்கும், தெள் - தெள்ளிய, நீர்-நீரினது, வளம்-வளமானது, கெழு-பொருந்திய, வேலி - வேலியுடைய, மருதம்-மருதநிலத்தில், வண்டுவண்டுகளானவை, தாலாட்ட - தாலாட்டிசையைப்பாட, நெய்தல்-நெய்தனிலத்தில், இள-இளமைபொருந்திய, களி-களிப்பையுடைய, குமரியன்னம்-பெட்டையன்னங்களானவை, இன் - இனிய, துயில்கூரும்-நித்திரைமிகும், எ - று.

(போ - ரை.) முல்லையோடு குறிஞ்சிக்கும் மருதத்தோடுநெய்தலுக்கும் அணிமை சொல்லப்பட்டது. (உ௩)

கொடியன மகளிர் தங்கள் குழையுநுண் மருங்கே வாளா
படுகொலை புரிவ மாதர் படைநெடுங் குவளைக் கண்ணே
அடிமிசை முறையிட் டென்று மரற்றுவ சிலம்பே சூழ்ந்து
கடிமது நுகர்வ வன்னோர் கருங்குழற் காமர் வண்டே.

(ப-ரை.) மகளிர்-மாதருடைய, குழையும்- வாடுகின்ற,நுண்-நுண்ணிய, மருங்கே - இடைகளே, கொடியன - கொடுமையுள்ளனவாம், (அன்னோர்) அ அவருடைய, மாதர்-அழகிய, படை-வாளும், குவளை-நீலோற்பலமும் போலும், நெடு-நெடிய, கண்ணே-கண்களே, வாளா - வீணாக, படு-இறந்துபடுகி

ன்ற,கொலை-கொலைத்தொழிலை, புரிவ-செய்வனவாம்,சிலம்பே-நூபுரங்களே, (அன்னோர்) அவருடைய, அடிமிசை-அடிகளின்மேல் விழுந்து, முறையிட்டு-(தங்குறைகளை) முறையிட்டு,என்றும்-எந்நாளிலும், அரற்றுவ-புலம்புவனவாம், அன்னோர்-அவருடைய, கரு-கரிய, குழல்-கூந்தலிலுள்ள, காமர்-அழகிய, வண்டே-வண்டுகளே, சூழ்ந்து-சூழ்ந்து, கடி - (வேதத்தினாலே) விலக்கப்பட்ட, மது-கள்ளை, நுகர்வ-குடிப்பனவாம், எ - று.

(பொ - ரை.) மருங்கே கொடியன என்பதற்கு—மருங்கே-இடைகளே, கொடியன-கொடிபோல்வன எனவும்; கண்ணேவாளா படுகொலைபுரிவ என்பதற்கு—கண்-கண்களே, வாளா-காரணமில்லாமல், படு-வருந்துகின்ற,கொலை-வருத்தத்தை, புரிவ-செய்வன எனவும், சிலம்பேயடிமிசை முறையிட்டென்று மரற்றுவ என்பதற்கு—சிலம்பே-சிலம்புகளே, அடிமிசை - அடிகளின்மேல், முறை-முறையாக, இட்டு-தரிக்கப்பட்டு,அரற்றுவ-ஒலிப்பன எனவும்; வண்டேசூழ்ந்து கடிமது நுகர்வ என்பதற்கு—வண்டே - வண்டுகளே, சூழ்ந்து-மொய்த்து, கடி-பரிமளம் பொருந்திய, மது-பூந்தேனை, நுகர்வ - குடிப்பன, எனவும் கருத்தாகக் கொள்க.

எனவே அந்நாட்டு மனிதர்களிலே கொடியவரும், வீணாக இறந்து படுகிற கொலைத்தொழிலைச் செய்பவரும்: பிறரடிகளின்மேலே வீழ்ந்து தங்குறைகளை முறையிட்டுப் புலம்புவோரும், வேதத்தினாலே விலக்கப்பட்ட கள்ளைக் குடிப்பவரும், இல்லையென்ப தாயிற்று. இடைமுதலியவைகளை அம்மனிதரிற் பிரித்தலால் ஏகாரங்கணான்கும் பிரிநிலைகள், கொடுமை முதலானவற்றை மனிதர்களினொழித்து இடை முதலானவற்றிற் காட்டலால் ஒழித்துக் காட்டணியாம். (உச)

கடல்படு மமுது மல்லற் கான்படு மமுது மோங்கும்
தடவரை யமுது மொன்றித் தலைமயக் குற்ற வாற்றால்
உடைதிரை யமுத மொன்றே யுடையவிண் ணாடு கொல்லோ
நிடதநா டதற்கு நேரா நிகழ்த்தலாந் தகைமைத் தம்மா.

(ப - ரை.) கடல்-கடலின்கண், படும்-உண்டாகிய, அமுதம்-(உப்புமுதலாகிய) அமுதமும், மல்லல்-வளம்பொருந்திய, கான் - காடின்கண், படும்-உண்டாகிய, அமுதம்-(பால் முதலாகிய) அமுதமும்,ஓங்கும்-உயர்ந்த,தடம்-பெரிய, வரை-மலையின்கண், (படும்) உண்டாகிய, அமுதம் - (தேன்முதலாகிய) அமுதம், ஒன்றி-பொருந்தி, தலைமயக்குற்ற-கலந்துகிடக்கிற, ஆற்றால்-காரணத்தால்,உடை-(கரையை) உடைக்கின்ற, திரை-அலைகளையுடைய (கடலின்கண்,) படும்-உண்டாகிய,ஒன்றமுதமே-ஓரமிர்தத்தையே, உடைய-(தனித்து) உடைய, விண்ணாடோ - தெய்வநாடோ, நிடதநாடதற்கு-நிடததேசத்திற்கு, நேரா-ஒப்பாக, நிகழ்த்தலாம்-சொல்லுதற்காகின்ற, தகைமைத்து-குணத்தை யுடையது, எ - று, கொல்-அசை, ஓ எதிர்மறை.

(போ-ரை.) அமுது உண்ணுதற்குரிய அறுசுவை யுணவுகளுக்கும்தேவருணவிற்குஞ் சிலேடை. "அமுதுபா றேவருண்டி யார்புனல்சுதை சுவைப்பேர" என்பதனாலறிக. உபமேயமாகிய நிடதநாட்டிற்கு உபமானமாகிய வோரமுதமுடைய தெய்வநாட்டினும் பலவமுத முடைமையாகிய விசேஷத்தைச் சொல்லுதலால் வேற்றுமை யணியாம். (உ௫)

நலனுறு குமரர்யார்க்கு நண்ணிய விருந்தோ டுண்டும்
பலகலை கேள்வி யாய்ந்தும் பகற்பொழு தினிது நீங்கும்
அலர்முலை யந்ந லார்த மலத்தக மலர்த்தா ணீவிப்
புலவிக டீர்த்துஞ் சேர்ந்து நள்ளிருட் பொழுதும் போமால்.

(ப-ரை.) நலன்-நற்குணங்களை, உறு - பொருந்திய, குமரியார்க்கும்-ஆடவரெல்லாருக்கும், நண்ணிய-(தம்பிடத்து) வந்த, விருந்தோடு-விருந்தினரோடு, உண்டும்-(அறுசுவையுண்டிகளை) யுண்ணலாலும்,பல-பலவகையாகிய, கலை-கலைகள், கேள்வி-கேள்வியினாலே, ஆய்ந்தும்-ஆராய்ச்சி செய்தலாலும், பகற்பொழுது-பகற்காலமானது, இனிது-இனியதாக, நீங்கும்-கழியும், அலர், அடிபரந்த, முலை-முலைகளையுடைய, அந்நலார் - அழகிய, மங்கையருடைய, அலத்தகம்-செம்பஞ்சூட்டிய, மலர்-தாமரைமலர் போலும், தாள்-அடிகளை-நீவி-தடவி, புலவிகள்-ஊடல்களை, தீர்த்தும்-நீக்குதலாலும், சேர்ந்தும்-(அவரைச்) சேர்தலாலும், நள்ளிருட்பொழுதும்-நடுவிராக்காலமும் (இனிது)இனியதாக, போம்-கழியும், எ - று, தம்-சாரியை, ஆல் அசை.

(போ - ரை.) உண்டு, ஆய்ந்து, தீர்த்து, சேர்ந்து, இந்நான்கும் வினையெச்சத்திரிபுகள். பலகலைகளாவன-வேதவேதாங்கமுதலிய அறுபத்துநாலு கலைகளாம். இரவின் முதற்பங்கு உணலாதிகளாலும், கடைப்பங்கு நித்திரையினாலும் கழிதல்பற்றி நள்ளிருட்பொழு தென்றார். (உசு)

[இதனால் அந்நிடததேசத்திலுள்ளே நளராஜனுக்கிடமாகிய
மாவிந்த நகரத்தின் சிறப்பைப் புகழத்தொடங்கி
னமை சொல்லப்படுகின்றது.]

கொல்லுலை வேற்க ணல்லார் கொழுநரோ டூடி நீத்த
வில்லுமிழ் கலன்க ளியாவு மிளிர்சுட ரெறிக்கு மாற்றால்
எல்லியும் பகலுந் தோன்று திமையவ ருலக மேய்க்கும்
மல்லன்மா விந்த மென்னும் வளநகர் கூற லுற்றும்.

(ப - ரை.) கொல்-கொல்லனது, உலை-உலைக்களத்திலே (காய்ச்சப்பட்ட,) வேல்-வேல்போலும், கண்-(சிவந்த) கண்களையுடைய, நல்லார்-மாதரால், கொழுநரோடு-(தம்முடைய) கணவரோடு, ஊடி-பிணங்கி, நீத்த-களைந்தெறியப்பட்ட, வில்-காந்தியை, உமிழ்-வீசுகின்ற,கலன்களியாவும்-ஆபரணங்களெல்லாம், மிளிர்-விளங்குகின்ற, சுடர்-கிரணங்களை, எறிக்கும் - வீசுகின்ற, ஆற்றால்-காரணத்தால், எல்லியும்-இரா (இது) வென்றும், பகலும் - பக

(லிது) வென்றும், தோன்ருது-அறியப்படாமல், இமையவர்-தேவரது, உலகம்-உலகத்தை, எய்க்கும்-ஒத்திருக்கின்ற மல்லல்-செல்வத்தையுடைய,மாவிந்தமென்னும்-மாவிந்தமென்று சொல்லப்படுகின்ற, நகர்-பட்டனத்தினது, வளம்-சிறப்பை, கூறலுற்ரும்-(யாஞ்) சொல்லத் தொடங்கினேம், எ - று.

(போ - ரை.) கணவர்மேற் கோபத்தினுலே கண்கள் சிவத்தலிற் காய்ச்சப்பட்ட வேலையுவமான மாக்கினர். இரவும்பகலுந் தோன்ருமையை ஆபரணகாந்தியினுலே சாதிப்பதாகிய செய்யுட்குறியை அங்கமாகக் கொண்டு இமையவருலகமேய்க்கு மென்னு முவமை வருதலாற் கலவையணி. (உஎ)

நாட்டுப்படல—முற்றும்.



உ

கடவுள் துணை.

# நகரப்படலம்.



இது நளனது இராஜதானியாகிய மாவிந்த நகரத்தின் சிறப்பைச் சொல்லப்படுகின்றது.

*கலி நிலைத்துறை*

குடவளைக்குலம் வயிறுளைந் தினமணி கொழிக்கும்
மடுவில்வானக ருருவுகாட்டியது போன்ம் மதில்சூழ்
கடிகொண்மாநக ரங்கிழல் கதுவிடா தகன்ற
புடைகொ ணீர்நக ருடுத்தலை பொங்குபே ரகழி.

(ப - ரை.) மதில்-மதில், சூழ்-சூழ்ந்த, கடி-காவலை, கொ-கொண்டிருக்கிற, மா-பெருமைபொருந்திய, நகர் - (முன் சொல்லப்பட்ட) நகரமானது, குடம்-குடம்போலும், வளை-சங்குகளது, குலம்-குலமானது, வயிறுளைந்து-வயிறுநொந்து, இனம்-(ஒன்றற்கொன்) றினமாகிய, மணி-முத்துகளை, கொழிக்கும்-சொரிதற்கிடமாகிய, மடுவில்-ஒருதடாகத்துள், வானகர்-அமராவதிபட்டணத்தினல், காட்டியது-காட்டப்பட்டதாகிய,உருவு-நிழலை, போன்ம்-போலும், நகர்-அங்ககரத்தினுல், உடுத்து-உடுக்கப்பட்டு, அலை-அலைகளால், பொங்கு-விளங்குகின்ற, பேர்-பெரிய, அகழி-அகழியானது, அங்நிழல்-அங்நிழலினுல், கதுவிடாது-பற்றப்படாமல், அகன்ற-நீங்கிய, புடை-சுற்றுப்பக்கத்தை, கொள்-(தனக்கிடமாகக்) கொண்ட. நீர்-நீரை, (போன்ம்) - போலும்.

'குடவளைக்குலம் வயிறுளைந் தினமணி கொழிக்கு மடுவில்'' என்றத னல் வானகரத்தின் பிரதிபிம்பம் உள்ளடங்குதற்குத் தகுந்த விசாலமுள்ள தென்பதாயிற்று. சங்குகள் முத்துகளை மிகுதியாகத் தருதல்தோன்ற ஈனு மென்னுது கொழிக்குமென்றார். கோலுமென்னுஞ்செய்யு மென்வாய்பாட்டு முற்றுவினை ஈற்றய லுகரங்கெட்டு லகரமெய் னகரமெய்யாகத் திரிந்தது. இதற்குவிதி "அவற்றுள் செய்யுமென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு, என்னுஞ் சூத்திரவுரையிற்காண்க'' போனமென்பது புடைகொணர்க்குங் கூட்டப்ப ட்டது, உடுத்துகதவிடாது என்பவை 'எழுதிவந்தவோலை' என்கிற விடத் தே எழுதியென்பதுபோலச் செயப்பாட்டு வினைப்பொருளைத் தந்தன அந்த மாவிந்தநகரத்தை அமராவதியின் பிரதிபிம்பமாகவும், அந்த மாவிந்த நகரை ச்சூழ்ந்த அகழியை அந்நிழலைச்சூழ்ந்த நீராகவுங் குறித்தலால் தற்குறிப்பணி யாகும். (க)

[இதனால் அகழியின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கண்ணகன்றபே ரகழியி னுழக்கிய கரிகள்
தண்ணந் தாமரைத் தாளெனத்தடக்கையாற் பிலத்தில்
நண்ணுஞ்சேடனை யெடுத்ததன்சுடிகையினுறி
உண்ணிவந்தொளிர் மணியினு லுற்கையென் றெறியும்.

(ப - ரை.) கண்ணகன்ற - இடம்பரந்த, பேர்-பெரிய, அகழியில்-அக ழியின்கண், உழக்கிய - கலக்கிய, கரிகள்-யானைகள், தண்-தண்ணிய, அம்- அழகிய, தாமரை - தாமரையினுடைய, தாளென - நாளமென்று நினைத்து, தடம்-பெரிய, கையால்-துதிக்கையினலே, பிலத்தில்-பாதாளத்திலே, நண் ணும்-வாசஞ்செய்கின்ற, சேடனை-சேடனென்னும் பாம்பை, எடுத்து - மே லெடுத்து, அதன்-அப்பாம்பினது, சுடிகையில்-உச்சியின்கண், உள் - (அத) னுள்ளிருந்து, நிவந்து-மேலெழும்பி,நாறி-காணப்பட்டு, ஒளிர்-விளங்குகின்ற, மணியினல்-இரத்தினத்தினலே, உற்கையென்று-கொள்ளியென்றஞ்சி, எறி யும்-(அதனை) வீசும் எ-று.

(போ - ரை.) நல்ல சாதிப்பாம்பிற்கு வளருந்தோறும் உள்ளிருந்து மேலெழும்பிக் கொண்டுவந்து தகுந்தபருவத்திலே உச்சியிற் புறப்பட்டுக் காணப்படுதலால் உண்ணிவந் தொளிர்மணி யென்றார். கரிகளென்று பன் மையாற் கூறலால் தனித்தனி யெடுத்தென்றுகொள்க. சேடனைத் தாமரை நாளமென்றுங் கொள்ளியென்றும் மயங்குதலால் மயக்கவணி. யானைக்குஞ் சேடனுக்குஞ் சம்பந்தத்தைக் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சி யணியி னலே அகழி பாதாளவரைக்கும் ஆழ்ந்துள்ளதென்னும் பொருளொலிக் கின்றது. (உ)

[இதனலே மதிலினது சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

ஒற்றையாழியந் தேரவ னுயர்மதில் கடக்கப்
பெற்றிலாமையிற் பிறங்கு பொற் கதவங்கடிறக்கும்
அற்றநோக்குவ னந்நலா ரியல்புற வணியக்
கற்றைவெண்மதி சாளரத் தடியிற் காட்டும்.

(ப - ரை.) ஒற்றையாழி-ஓருருளையையுடைய, அம்-அழகிய, தேரவன்-தேரையுடைய (சூரியனானவன்), உயர்-(தன்வழியின்) மேலுமுயர்ந்த,மதில்-மதிலை, கடக்க-தாண்டுதற்கு, பெற்றிலாமையின்-(வல்லமை) பெற்றிலாமையால், பிறங்கு-விளங்குகின்ற, பொன்-பொன்மயமாகிய, கதவங்கள்-(அம்மதில்வழிக்) கதவுகளை, திறக்கும்-திறக்கும், அற்றம்-சமயத்தை, நோக்குவன்-பார்த்துக்கொண்டிருப்பான், அந்நலார் - அழகிய மகளிரானவர், இயல்புறதிருத்தமுண்டாக, அணிய - (திலதமுதலானவற்றைத்) தரித்துக்கொள்ள, கற்றை-(கிரணக்) கற்றையையுடைய, வெள்-வெள்ளிய,மதி-சந்திரனானவன், சாளரத்து-(அம்மதின்மேற்) பலகணியின்புறத்திருந்து, ஆடியின்-நிலைக்கண்ணாடிபோல, காட்டும்-(அவருக்குத் தன்னைக்) காட்டுவான் எ-று.

நிலைக்கண்ணாடி-நிலையாக முன்வைக்கப்படுவது.

போ-ரை.அற்றஞ்சமயமென்பது."அற்றமே மறைவுஞ்சோர்வுமவகாசந்தானுமாகும்"என்பதனாலறிக. கற்றைவெண் மதியென்றதனாற்பூரணசந்திரனெனக்கொள்க, சந்திரன்-சாளரத்துள்ளே நுழைதற் கிடம்பெறாமற் புறத்தேநிற்கைபற்றி ஆடியிற் காட்டுமென்றார். சூரியனோடு மதில்வாயிலுக்குஞ், சந்திரனோடு மதிற்சாளரத்திற்குஞ் சம்பந்தஞ் சொல்லுதலால் தொடர்புயர்வு நவிற்சியணிகளாம். இதனால் அந்நகரத்து மதிலுக்கு அதிக உயர்வு தொனிக்கிறது. (ந)

[இதுமுதல் முப்பத்துநாலு பாட்டுகளால் வீடுகள் முதலியவற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.

மறுவிகந்தவெண் மதியென வயங்கிய பித்தி
செறியுமாடங்கள் வெண்கதிர் பரப்பிடு செவ்வி
நறவுயிர்த்தபைந் துணர்மலி கற்பக நாட்டை
வெறுவிதாமென வெண்ணகை புரிவது போலும்.

(ப - ரை.) மறு-களங்கத்தினின்றும், இகந்த-நீங்கிய, வெள்-வெள்ளிய, மதியென-சந்திரன்போல, வயங்கிய-விளங்கிய, பித்தி-(பளிங்குச்) சுவர்களானவை, செறியும்-நெருங்கிய, மாடங்கள்-மாளிகைகளானவை, வெள் - வெள்ளிய, கதிர்-கிரணங்களை, பரப்பிடு-விரிக்கின்ற, செவ்வி-அழகினாலே, நறவு-தேனை, உயிர்த்த - தருகின்ற, பைந்துணர் - பசிய பூங்கொத்துகளால், மலி-நிறைந்த, கற்பகம்-கற்பகத்தருக்களையுடைய, நாட்டை-சுவர்க்கத்தைக் குறித்து, வெறுவிதாமென-வறுமையுடையதென்று, வெள்-வெள்ளிய, நகை-சிரிப்பை, புரிவது-செய்வதை, போலும்-ஒக்கும் (அந்நகரம்) எ-று.

(போ - ரை.) விரும்பப்படுகிற உண்டி அணிஆடை முதலியவற்றைக் கற்பிக்கின்ற கற்பகதருவையுடைத்தாய் மற்றெல்லாவுலகங்களாலும்புகழப்படுகைதோன்றக் கற்பகநாடென்றார், அப்படியிருந்தும் அதுதன்பெருவளத்தி

ற்குச்சிறியதாகக்காணப்படுதலால் மாவிந்தம் அதனையிகழ்ச்சிசெய்து சிறிப்ப தென்றதாயிற்று சிறிப்பதற்குத் தெருவாயாகவும் மாடவரிசைகள்பல்வரிசை களாகவும்கொள்க. பளிங்குமாடங்களின் வெள்ளொளி வீசலாகிய தருமசம் பந்தத்தினலே மாவிந்தத்தைச் சிரிப்பதாகக் குறித்தலார் பொருட்டற் குறி ப்பணியாகும் இதனலே மாவிந்தத்தின் வளஞ் சுவர்க்கவளர்த்தினுமிகுந்துள் ளதென்பது தொனிக்கின்றது. (ச)

வடிகொள் வெண்சுதை தீற்றியமாடநீள் கழுத்திற்
படியமைம்முகில் கதிர்விடு பானிலாக் குழவி
முடியின் மீதுறத் தவழ்தலான் முழுமெயும் வெள்ளைப்
பொடியணிந்தருள் கறைமிடற் றண்ணலைப் பொருவும்.

(ப- ரை.) வடிகொள்-வடித்துக்கொள்ளப்பட்ட, வெண்சுதை - வெள்ளிய சுண்ணச்சாந்தை, தீற்றியமாடம்-பூசியமாளிகையானது, நீள்கழுத்தில்- நீட்சிபொருந்திய (அதன்) கண்டத்தின் கண், மை-கரியமேகமானது படிந் திருக்க, கதிர்விடு-கிரகணங்களை வீசுகின்ற, பானிலாக்குழவி-வெண்பிறையா னது, முடியின்மீது - (அதன்) முடியின்மேலே, உறத்தவழ்தலால்-பொருந் தஊர்தலால், முழுமெயும்-திருமேனிமுழுதிலும், வெள்ளைப்பொடி-விபூதி யை, அணிந்தருள்-பூசியருளிய, கறைமிடற்று - (நஞ்சக்) கறைபொருந்திய கண்டத்தையுடைய, (நிலாக்குழவிமுடியின்மீது) - பிறையானது முடியின் மேல், (உற) - பொருந்த, (தவழ்) - ஊர்கின்ற, அண்ணலை-பரமசிவனை, பொருவும் ஒத்திருக்கும் - எ - று.

(பொ - ரை.) நிலாக்குழவி முடியின்மீ துறத்தவழ்தல் பரமசிவனுக் குங் கூட்டப்பட்டது. மாளிகையினது வடிவத்திற் பூசிய சுண்ணச்சாந்து பரமசிவனதுவடிவத்திற் பூசிய விபூதிபோலவும், அதனது கழுத்திலேபடிந்த கரியமேகம் அவன் கழுத்திலேபடிந்த நஞ்சக்கறைபோலவும், அதன்முடிமே லே தவழ்கின்ற பிறை அவன் முடிமேலே தவழ்கின்ற பிறைபோலவும், தோன்றுதலாலே அது பரமசிவனுக்கு ஒப்பாக இருக்கு மென்பதாம். இது உவமையணி. இதனல் அம்மாடங்கள் சந்திரமண்டலத்தை யளாவி யிருக்கின் றன வென்பது தொனிக்கின்றது. (ரு)

மழைக்கண் மங்கையர் பயிறரமரகத மணியி
னிழைத்த செய்குன்றின் பைங்கதிர் பொன்னிலத் தெய்தக்
குழைத்த வைந்தரு நீழலிற் குலவுமா னினங்க
டழைத்த புல்லென விரைவொடு தனித்தனி கறிக்கும்.

(ப - ரை.) மழை-குளிர்ச்சிபொருந்திய, கண் - கண்களையுடைய, மங் கையர் - மகளிரானவர், பயில்தர - (ஏறி) விளையாடுதற்கு, மரகதமணியின்- மரகதமணிகளாலே, இழைத்த-பதிக்கப்பட்ட, செய்குன்றின் - விளையாட்டு மலைகளுடைய, பைங்கதிர்-பசியகிரணங்களானவை, பொன்னிலத்து-தேவ

லோகத்தின்கண், எய்த-அடைய, குழைத்த-தளிர்த்த, ஐந்தரு-பஞ்சதருக்களது, நீழலில்-நிழலின்கண், குலவும் - குலவுகின்ற, ஆன் - பசுக்களுடைய, இனங்கள்-கூட்டங்களானவை, தழைத்த-செழித்த, புல்லென-புற்களென்று நினைத்து, விரைவொடு-சீக்கிரமாக, தனித்தனி-வொவ்வொன்றாக, கறிக்கும்-(அக்கிரணங்களைக்) கௌவும் - எ - று.

(போ - ரை.) மற்றை மலைகள்போலப் படைப்புக்காலத் துண்டாயதன்றி விளையாடுதற்காகச் செய்யப்பட்டமையாற் செய்குன்றென்றார். மரகத மணியின் கிரணத்தைப் புல்லென்று மயங்கினமையான் மயக்கவணியாகும் இதற்கு அக்கதிருக்குந்தெய்வலோகத்திற்குஞ் சம்பந்தத்தைக்கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சியணி அங்கமாதலால் கலவையணியாம். (சு)

புதுமணத்தமென் மகளிர்சா ளரத்திடைப் பொருந்து
மதியையின்னுயிர்ப் பாங்கியர் மறைந்தனர் நோக்கும்
கதிர்கொள் வாண்முக மென்றுதங்கா தலர்ப்புல்லும்
பதுமமென்கர நீக்கிநீள் படைவிழி புதைப்பார்.

(ப - ரை.) புது-புதிய, மணத்த-விவாகத்தையுடைய, மெல்-மெல்லிய, மகளிர்-மங்கையரானவர், சாளரத்திடை - (மேல்வீட்டின்) பலகணியின் புறத்து,பொருந்து-சேர்ந்த, மதியை-சந்திரனை, இன்-இனிய, உயிர்-உயிர்போலச்சிறந்த,பாங்கியர்-தோழியரானவர்,மறைந்தனர்-மறைந்தவராகி, நோக்கும்-பார்க்கின்ற, கதிர்-கிரணத்தை, கொள்-கொண்ட, வாள்-ஒலியையுடைய, முகமென்று-முகமென்றுநினைத்து, தம்-தம்முடைய, காதலர்-நாயகரை, புல்லும்-தழுவிக்கொண்டிருக்கிற, பதுமம்-தாமரைமலர்போலும், மெல் - மெல்லிய, கரம்-கைகளை, நீக்கி - (அவரிலிருந்து) நீக்கி, நீள்-நீண்ட, படை-வாள்போலும், விழி-கண்களை, புதைப்பார்-மூடிக்கொள்வார், எ-று.

(போ - ரை.) மறைந்தென்னும் வினையெச்சம் முற்றாய்த்திரிந்தது. இதற்குவிதி, "வினையெஞ்சுகிளவியும் வேறுபல்குறிய" என்பதனாலறிக. இன்னுயிர்ப்பாங்கியர் என்றதனால் அந்தப்புரச்செய்கையைப் பார்த்தற்கும் உரிமை தோன்றுகின்றது புதுமணத்தராதலால் இன்னுயிர்ப் பாங்கியர்க்குங் கண் மூடற் கேதுவான நாணஞ்சொல்லப்பட்டது. மதியைப்பாங்கியர் முகமென்று மயங்குதலால் மயக்கவணியாம், இதனால் அம்மகளிற்முகஞ் சந்திரனிற் சிறந்ததென்பதும் அம்மாடஞ் சந்திரமண்டலத்தினுயர்ந்த தென்பது ஒலிக்கின்றன.

வள்ளவாய் மலர் முகத்தியர் வதியுமே னிலையிற்
கள்ளறுமலர் நாற்றிய கருங்கையிற் கதிர்கள்
உள்ளுறப்புகுந் துவாமதி யுடலுரிஞ் சுதலால்
பிள்ளை வெண்மதி யாதனன்றெனப்பெரி துவக்கும்.

(ப - ரை.) உவா-பர்வகாலத்திலே தோன்றுகிற,வெள்-வெள்ளிய,மதி-சந்திரனானவன், வள்ள வாய்மலர்-தாமரை மலர்போலும், முகத்தியர்-முகத்தையுடைய மாதரானவர், வதியும் - வாசஞ்செய்கின்ற, மேனிலையில்-மேல்

வீட்டில், கள்-தேனுனது, அறு-நீங்காத, மலர்-மலர்களை, நாற்றிய-தொங்கக் காட்டிய, சுருங்கையில்-நுழைவாயிலே, கதிர்கள்-கிரணங்களானவை, உள் - உள்ளே, உற-பாய, புகுந்து-நுழைந்து, மதி - (யாவராலும்) மதிக்கப்படுகிற, உடல்-(தன்பெரிய) வுடம்பு, உரிஞ்சுதலால்-தேய்தலினலே, பிள்ளையாதல்-குழந்தையாதலே நன்றெனு-எனக்கு நல்லதென்று நினைத்து, பெரிது-மிகவும், உவக்கும்-(அப்பருவத்தை,) விரும்புவான், எ - று.

(போ - ரை.) வள்ளவாய் மலர்—கிண்ணம்போலும் வாயையுடைய மலரென்க. சுருங்கை-திட்டிவாயில். சுருங்கையென்பது கரத்தகற்படையு நுழைவாயினுமெனு நுவலுமிருபெயர். மகிழ்தலென்னும் பொருளைத் தருகிற வுலத்தலென்பது விருப்பத்தை யுணர்த்தலால் ஆகுபெயர் கலை குறைதலாகிய குற்றத்தினலே தாராளமாகச் சுருங்கையினுள்ளே நுழையுங்குண மிருத்தல் கண்டு அக்குற்றத்தை வேண்டுதலாலே வேண்டலணியாம். (அ)

உருவின் மைந்தரில் வேனில்வேட் குடைகுநரில்லை
பொருளிலார்களிற் றனதனைப் பொருவிலா ரில்லை
தெருளின் மாக்களிற் சேடனிற் றழ்குநரில்லை
அருளிலார்களி லைந்தரு நிகர்க்கலா ரில்லை.

(ப - ரை,) உருவு-அழகு, இல்-(தம்மிடத்) தில்லாத, மைந்தரில்-காளையருள், வேனில்-வசந்தகாலத்தையுடைய, வேட்கு-மன்மதனுக்கு, உடைகுநர்-தோற்பவர், இல்லை-இலர், பொருள் - செல்வப்பொருள், இலார்களில்-(தம்மிடத்) தில்லாதவருள், தனதனை-குபேரனை,பொருவிலார்-ஒவ்வாதவார், இல்லை-இலர், தெருள்-கல்வியறிவு, இல் - (தம்மிடத்) தில்லாத, மாக்களில்-மனிதருள், சேடனில்-ஆதிசேஷனில், தாழ்குநர்-குறைபவர், இல்லை-இலர், அருள்-ஈகையானது, இலார்களில்-(தம்மிடத்) தில்லாதவருள், ஐந்தரு-பஞ்சதருக்களுக்கு, நிகர்க்கலார்-ஒப்பாகாதவர், இல்லை-இலர் எ - று.

(போ -ரை.) அந்நகரத்திலே மன்மதன்போ லழகுள்ளவர்களை அழகில்லாத வர்களென்றும், குபேரன்போலச் செல்வமுள்ளவர்களைச் செல்வமில்லாதவர்களென்றும், ஆதிசேஷன்போலக் கல்வியுள்ளவர்களைக் கல்வி யில்லாதவர்களென்றும், பஞ்சதருக்கள் போல ஈகையுள்ளவர்களை ஈகையில்லாதவர்களென்றும், கொள்ளுதலால் அம்மன்மதன் முதலான பொருள்களில் மிகுந்த அழகு முதலானவை யுள்ளவர்களே சிறந்தவராகக் கொள்ளப்படுவ ரென்பதாயிற்று. (கூ)

பளிக்குமேனிலத் தன்பர்பாற் பயில்வுறு கலவி
திளைத்து மார்பிடைத் துயில்பவர் முகத்தில்வெண் டிங்கள்
கிளைத்ததண்கதிர் பரப்புதல் கிலர்ந்த சாளரத்தின்
ஒளித்து வாண்முகச் செவ்வியைக் கவர்வதொத்துளதால்.

(ப - ரை.) வெள்-வெள்ளிய, திங்கள்-சந்திரனுனது, பளிக்கு-பளிங்கினாலாகிய, மேனிலத்து-மேல்வீட்டினுள், அன்பர்பால்-நாயகரிடத்தில், பயில்வுறு-(நாள்தோறும்) பழகிய, கல்வி-புணர்ச்சியை, திளைத்து-அனுபவித்து, மார்பிடை-அவர்மார்பினிடத்தே, துயில்பவர்-தூங்குகிறமகளிரது, முகத்தில்-முகத்தினிடத்தே, கிளைத்த-தழைத்த, தண்-கண்ணிய, கதிர்-கிரணங்களை, பரப்புதல்-விரித்தலினாலே, கிளர்ந்த-விளங்குகின்ற, சாளரத்தின் பலகணியின்புறத்து, ஒளித்து-மறைந்துநின்று, வாள்-ஒளிபொருந்திய, முகம்-(அவர்) முகத்திலுள்ள, செவ்வியை-அழகை, கவர்வது-திருடுவதை, ஒத்துளது-ஒத்திருக்கும், எ - று.

(போ - ரை.) பிறரிடத்துள்ள பொருளைத் திருடுதற்குச் சமயம் தூங்கும் வேளையாதலால் துயில்பவரென்றார். சந்திரனைக் கவர்வதாகக் குறித்தலினாலே பொருட்டற் குறிப்பணி இதனால் முகத்துக்குச் சந்திரனிலும் அதிக காந்தியைச் சொல்லியதாகிய வேற்றுமையணி தொனிக்கின்றது. (க0)

கணங்கொண் மாமணி குயிற்றியொண் கதிர்செய் மேனிலையில்
சுணங்கு பூத்தணி பருமிதத் துணைமுலை மகளிர்
மணங்கொ டாமரை முகமுமொண் மதியமு மறியா
தணங்கரா மதி மருண்டுபார்த் தையுறவெய்தும்.

(ப - ரை) கணம்-கூட்டத்தை, கொள்-கொண்ட, மா-செரிய, மணி-மணிகளானவை, குயிற்றி-பதிக்கப்பட்டு, ஒள்-ஒள்ளிய, கதிர் - கிரணங்களை, செய்-செய்கின்ற, மேனிலையில்-மேல்வீட்டிடில், சுணங்கு-தேமலால், பூத்து-படர்ந்து, அணி-அலங்கரிக்கப்பட்ட, பருமிதல் - பருத்த அளவையுடைய, துணை-இரண்டாகிய, முலை-முலைகளையுடைய, மகளிர்-மாதரது, மணம்-வாசனையை, கொள்-கொண்ட, தாமரை-தாமரைமலர்போலும், முகமும்-முகத்தையும், ஒள்-ஒள்ளிய, மதியமும்-சந்திரனையும், அறியாது-அறியமாட்டாமல், அணங்கு-தெய்வத்தன்மை பொருந்திய, அரா-இராகுவானது, மதிமருண்டு-புத்திமயங்கி, பார்த்து-நோக்கி, ஐயுரவு-(இவற்றுள் முகம் யாதோ சந்திரன் யாதோ வென்கிற) சந்தேகத்தை எய்தும்-அடையும் எ - று.

(போ - ரை.) அணங்கு-தெய்வம். "அணங்கு நோயழகு தெய்வம்" என்பதாலறிக. ஒப்புவமையினாலே முகத்திற்குஞ் சந்திரனுக்கும் விசேடந் தோன்றாததாகிய பொதுமையணி ஐயவணிக்கு அங்கமாதலாற் கலவையணி, இதனால் அம்மேல்வீடுகள் சந்திர மண்டலத்தை யளாவியிருக்கின்றன வென்பதும் அவர் முகங்கள் சந்திரன்போல் விளங்குகின்றன வென்பதுந் தோன்றுகின்றன. (கக)

மேனிவந்தொளிர் மாடத்தின் விழுத்தக நிரைத்த
பானிலாமணித் தசும்பினிற் றண்கதிர் பரப்பக்
கானறும்புன னிறைதலுங் கதிரவன் றடந்தோர்
மானினங்குடித் தயர்வுயிர்த் தன்பரின் வாவும்.

பக், கள்வாற்புலியையவேறு காணியகாவன்மன்ன,னுள்ளகம்புழுங்கிமாதோ வுரைத்தனன் மன்னர்க்கெல்லாம்" எனப்பிறரும் இவ்வாறு கூறுதல்காண்க. பர்வகாலத்தில் நிறைமதிக்கண்டால் கடல்மிக்கொலித்தலறிக. (௧)

இதுமுதல் நாலுபாட்டால் இந்திரன் கலகமூட்டுதல்
சொல்லப்படுகின்றது.

விரிகதிர்ப்பரிதிமுன்னர் வெண்மதிமழுங்குமல்லாற்
பரிதியுமதியந்தோன்றிற் படரொளிமழுங்கலுண்டோ
வரசர்காணீவிர்வெய்யோ னருங்குலத்துதித்துந்திங்கண்
மரபின்மன்னவற்குநுங்கண் மாணெழின்மழுங்கினீரால்.

(ப - ரை.) விரிகதிர் - விரிந்த கிரணங்களையுடைய, பரிதிமுன்னர் - சூரியன்முன்னே, வெண்மதி - வெண்மைபொருந்திய சந்திரன், மழுங்குமல்லால்-மழுங்கிப்போகுமல்லாமல், பரிதியும்-சூரியனும், மதியந்தோன்றில்-சந்திரனுதித்தால், படர்-விரிக்கின்ற, ஒளிமழுங்கலுண்டோ - ஒளிகெடுதலுண்டோ, (இல்லை இவ்வாறிருக்க) அரசர்காள்-அரசர்களே, நீவிர்-நீங்கள், வெய்யோன் சூரியனுடைய, அருங்குலத்துதித்தும்-கிடைத்தற்கரிய மரபினிற்பிறந்தும், திங்கண்மரபின் மன்னவற்கு - சந்திரவமிசத்திற்பிறந்த அரசனுக்கு, உங்கள்-உங்களுடைய, மாண் - பெருமைபொருந்திய, எழில்-அழகு, மழுங்கினீர் - மழுங்கிப்போனீர்கள், எ-று.

சந்திரவம்சத்திற் பிறந்தவன் நளன்.

(பொ - ரை.) உலகத்தில் யாவருக்குங் குலத்தை யிழிவுபடுத்தலுண்டாகும் வேற்றுமை மற்றொன்றி லுண்டாகாதென்பதுபற்றி அரசரைநோக்கி இவ்வாறு சொல்லினரென்க. (உ)

உரிமையிற்புணர்ந்தமாத ரூடவுமறுத்திம்மாதின்
வரிமுலைப்போகம்வேண்டி மணவினைத்துணிந்துவந்தீர்
குருதிவேல்சுமந்துவாளா வீங்கியகுவவுத்தோளீர்
திருநகர்க்கினிநீர்போய்நுந் தெரிவையர்க்கென்சொல்வீரே.

(ப - ரை.) உரிமையில் - கிழமையினால், புணர்ந்த - கூடிய, மாதர்-மங்கையர்கள், ஊடவும் - பிணங்கிக்கொள்ளவும், மறுத்து - அதைநீக்கி, இம்மாதின் - இந்தமங்கையினுடைய, வரி - சந்தனக்கோலத்தையுடைய, முலைப்போகம்வேண்டி - ஸ்தனத்தினுடையபோகத்தைவிரும்பி, மணவினை-விவாகத்தொழிலை, துணிந்துவந்தீர் - நிச்சயித்துக்கொண்டு வந்தீர்கள், குருதி - உதிரந்தோய்ந்த, வேல்சுமந்து - வேற்படையைச்சுமந்து வாளா-வீணாக, வீங்கிய - பருத்த, குவவுத்தோளீர் - திரட்சிபொருந்திய தோள்களையுடைய அரசரே, திருநகர்க்கு - உங்களுடைய நகரத்திற்கு, இனி - இப்பொழுது, நீர்போய் - நீர்சென்று, நுந்தெரிவையர்க்கு - உம்முடைய மனைவிகளுக்கு, என்சொல்வீர் - யாதுசொல்வீர்கள். எ-று.

(போ - ரை.) வேறொருமாதரைத் தமது கணவனிலைத்தது தெரியினும் பொறுதமங்கையர் தமயந்தியின் விவாகத்தைக்குறித்துவந்த அரசரோடு மிகவும் பிணங்கியிருப்பரென்பது தோன்ற மாதருடவுமென்றும், நீர்விரும்பிவந்த தமயந்தியைக்கொண்டுபோன நளனை வெல்லும் வல்லமை உமக்கில்லையென்பது தோன்றக் குருதிவேல்சுமந்து வாளாவீங்கிய குவவுத்தோளீரென்றும், இங்ஙனமான நீர் உம்முடைய மனைவியர் பிணக்கையுந் தணிக்கமாட்டீரென்பதுதோன்ற நுங்தெரிவையர்க் கென்சொல்வீ ரென்றும்சொல்லினன். (கூ)

சூழிருஞ்சடைகடாங்கிச் சுடர்முடிதுறந்துகான்போய்
வீழ்சருகருந்திநீவிர் மெய்த்தவம்புரிதல்வேண்டுந்
தாழிருங்கூந்தலாளை நிடதர்கோன்றழீஇயபோதே
யாழிசூழுலகமெல்லா மவனடிபடுக்குமன்றே.

(ப - ரை.) சுடர்முடி - இரணங்களையுடைய கிரீடங்களை, துறந்து - விடுத்து, சூழ் - சுற்றுகின்ற, இரு - பெரிய, சடைகடாங்கி - சடைகளைச்சுமந்து, கான்போம் - வனத்திற்சென்று, வீழ - அங்கேயுதிர்கின்ற, சருகருந்தி - சருகைப்புசித்து, நீவிர் - (அரசர்களே) நீர், மெய்த்தவம் - உண்மையாகியதவத்தை, புரிதல்வேண்டும் - செய்தல்வேண்டும், (அஃதேனெனில்) தாழ் - தாழ்ந்த, இரு - பெரிய, கூந்தலாளை - அளகபாரத்தையுடைய தமயந்தியை, நிடதர்கோன் - நளன், தழீஇயபோதே - தழுவியபோதே, ஆழிசூழ் - கடலாற்சூழப்பட்ட, உலகமெல்லாம் - பூவுலகமனைத்தும், அவன் - அவ்வரசனுடைய, அடிபடுக்கும் - அடிபணிந்துகிடக்கும், எ - று.

(போ - ரை.) உம்முடைய குலத்திற்கும் உமக்கும் இப்பொழுது வந்த குற்றம் போரில்வென்று நீக்கல்வேண்டும்; அங்ஙனமின்மையால் இச்செய்கையாலன்றித் தீராதென்பான் மெய்த்தவம்புரிதல் வேண்டுமென்றும் தமயந்தி இலக்கணமுழுவதும் அமைந்த வுருவுடையவளாதலால் அவளைமணந்தவன் பூமண்டலமுழுதும்ஆள்பவனென்பதுதோன்ற, ஆழிசூழுலகமெல்லாமவனடி படுக்குமென்றும் சொல்லினன். வடதிசைக்குன்ற "மன்னவான் குலமரசுசெய்தீர், விடுகதிர்ப் பரிதிமுன்னர் மின்மினிவிளக்கமொத்தீர், வடுவுரையென்றுமாயும் வாளமரஞ்சினீரேன், முடிதுறந்தளியீர்போகி முனிவனம் புகுமினென்றான்." "திருமகளிவளைச்சேர்ந்தான் றெண்டிரை யாடைவேலி, யிருநிலமகட்குஞ்செம்பொ னேமிக்குமிறைவனாகுஞ், செருநிலத்திவனைவென்றீர் திருவினுக்குரியீரென்றான். கருமன நச்சுவெஞ்சொற் கட்டியங்காரனன்றே இவ்வாறு பிறருங்கூறுதல் காண்க. (ச)

கண்டவர்மனமுங்கண்ணும் கவர்ந்திடவனப்புவாய்ந்த
வொண்டொடிமாலைவேய்ந்தோற்குரியளென்றெண்ணவேண்டா
திண்டிறனிடதர்கோமான் செருவினிலிரியல்போக
மண்டமர்கடந்தவொள்வேன் மன்னவற்குரியளென்றான்.

(ப - ரை.) கண்டவர் - தன்னைப்பார்த்தவர்களுடைய, மனமும் - மனத்தையும், கண்ணும் - கண்களையும், கவர்ந்திட - வாரிக்கொள்ளும்படி, வனப்புவாய்ந்த - அழகுபெற்ற, ஒண்டொடி - தமயந்தியானவள், மாலைவேய்ந்தோற்கு - மாலைசூட்டினவனுக்கு, உரியளென்று - உரிமை யுடையவளென்று, எண்ணவேண்டா - நினைக்கவேண்டா, திண்டிறல் - மிகுந்தவலிமையையுடைய, நிடதர்கோமான் - நிடதேசத்தரசன், செருவினில் - போரில், இரியல்போக - ஓடிப்போக, மாண்டு - நெருங்கிய, அமர் - யுத்தத்திலே, கடந்த - செயித்த, ஒள்வேல் - ஒளிபொருந்திய வேலையுடைய, மன்னவற்கு-அரசனுக்கு, உரியளென்றான் - உரிமையுடையவளாவாளென்றான். எ-று.

(போ - ரை.) நளனைப்போர்செய்து வெல்லினும் அரசர்பலராதலால் இவள் எவனுக்கு உரியவளாதலென்னுஞ் சந்தேகமுண்டாகாமைப்பொருட்டு, இந்திரனனவன், நிடதர்கோமான் செருவினிலிரியல்போக மண்டமர்கடந்த வொள்வேன் மன்னவர்க்குரியளென்றா னென்க. மேற்படலத்தில் நூற்றறுபத்தைந்தாம் பாட்டிற்காட்டிய அனிச்சபூங் கோதையென்னு மேற்கோளால் பிறரும் இவ்வாறு கூறுதல்காண்க. (ரு)

இதனால் அக்கலகவார்த்தைகேட்ட பாண்டியன்வெகுளல்
சொல்லப்படுகின்றது.

என்றலுங்கடவுட்டிங்க ளிருங்குலமிழித்துக்கூற
னன்றுநன்றென்னநக்கு நாமவேல்வழுதிசீறி
யுன்றனைதுணிப்பனென்னு வொளிறுவாளுறையினீக்கிக்
குன்றெனவயிரவொள்வாட் குரிசிமேற்கனன்றுசென்றான்,

(ப - ரை.) என்றலும் - இப்படியென்று இந்திரன் சொன்னவளவில், கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, திங்களிருங்குலம் - பெருமைபொருந்திய சந்திரவம்சத்தை, இழித்துக்கூறல் - இழிவுபடுத்திச்சொல்லல், நன்றுநன்றென்ன - நல்லது நல்லதென்று, நக்கு - நகைத்து, நாமவேல் - அச்சத்தைத் தருகின்ற வேற்படையையுடைய, வழுதி - பாண்டியராஜன், சீறி - அதட்டி, உன்றனை - இப்படிசொல்லிய உனதுசிரத்தினை, துணிப்பனென்னு - தறித்துவிடுவேனென்று, ஒளிறு - பிரகாசிக்கின்ற, வாள் - வாளை, உறையினீக்கி- உறையினின்றுநீக்கி, குன்றெறி - மலைகளின் சிறகையறுத்த, வயிரவொள்வாள் - ஒளிபொருந்திய வச்சிரவாளையேந்திய, குரிசின்மேல்-இந்திரன்மேல், கனன்று - கோபித்து, சென்றான் - போனான், எ-று.

குன்றென்பது அதன் சிறகினுக்காதல் - ஆகுபெயர்.

(போ - ரை.) உமையவள், பரமசிவன் குமரவேள் என்னு மூவரும்விரும்பிவந்து அரசுசெய்திருந்த குலமாதலாலும், சந்திரனைச் சிவன்முடிமேற் கொண்டிருத்தலாலும், அந்தவம்சத்தைக் கடவுட்டிங்களிருங்குலமென்றார். அதனால் அக்குலத்திற்றோன்றிய பாண்டியனுக்கு அதை இழிவுபடுத்திய இந்திரன்மேல் வெகுளி யுண்டாயிற்றென்க. (சா)

[இதுவுமது.]

வெகுளலையணங்கிற்காக நளனுருக்கொண்டுமேய
வகல்விசும்பளிக்கும்வேந்த னிவனெனவமரர்கூறத்
துகளெழுமௌலிபண்டு தோற்றவன்றன்னோடென்கொ
லிகலெனப்புகையுமொள்வா ளுறைசெறித்தேகினானே.

(ப - ரை.) வெகுளலை - கோபியாதே, அணங்கிற்காக-தமயந்திக்காக, நளனுருக்கொண்டுமேய - நளன் வடிவங்கொண்டுவந்த, அகல்விசும்பு - அகன்றதெய்வலோகத்தை, அளிக்கும்வேந்தன் - காக்குமிந்திரன், இவனென-இவனென்று, அமரர்கூற - தேவர்கள்சொல்ல (அதுகேட்டு), துகளெழ-தூளியெழும்ப, மௌலி - கிரீடம், பண்டு - முன்னே, தோற்றவன்றன்னோடு-தோற்றுப்போனவிவனோடு, என்கொலிகலென - என்னபோரென்று, புகையும் - புகைகின்ற, ஒள்வாள் - ஒளிபொருந்திய வாட்படையை, உறைசெறித்து - உறையிலிட்டு, ஏகினான் - போனான், எ-று.

(போ - ரை.) மதுரையில் உக்கிரபாண்டியன் அரசு செய்திருந்தநாளில் தன்னாட்டிலிருக்கும் பொதியமலையின்கண் மேய்ந்திருந்தமேகங்களைப் பிடித்துத் தளைசெய்தான், அதைக்கேட்டு அப்பாண்டியனோடெதிர்த்து யுத்தஞ்செய்து இந்திரன் மகுடபங்கப்பட்டுத் தோற்றோடியபடியால்தோல்வியடைந்தவரோடெதிர்த்தல் தருமமென்பதுபற்றி இவன் அவ்விந்திரனென்றுகேட்டவாசன், துகளெழமௌலிபண்டு தோற்றவன்றன்னோடென்கோ, லிகலெனப்புகையுமொள்வா ளுறைசெறித் தேகினானென்றார். (எ)

இதுமுதல் மூன்றுபாட்டால் அரசர்செய்கை
கூறப்படுகின்றது.

கூற்றெனக்கனலியென்னக் குலவரைதிரிக்குமூழிக்
காற்றெனவுருமேறென்னக் கதிர்முடியரசரெல்லா
மாற்றருஞ்சீற்றத்தோடு மடங்கலந்தவிசினின்றும்
பாற்றினஞ்சுழலும்வைவாட் படையொடுநிலத்திற்பாய்ந்தார்.

(ப - ரை.) கூற்றென - யமன்போலவும், கனலியென்ன-அக்கினிபோலவும், குலவரை - சத்தகுலகிரிகளை ம், திரிக்கும் - சுழற்றுகின்ற, ஊழிக்காற்றென - முடிவுகாலக் காற்றுபோலவும், உருமேறென்ன-இடியேற்றைப்போலவும், கதிர்முடி - கிரணங்களையுடைய கிரீடமணிந்த, அரசரெல்லாம் - அரசரனைவரும், மாற்றரும் - நீக்குதற்கரிய, சீற்றத்துடன் - கோபத்துடன், மடங்கலந்தவிசினின்றும் - சிங்காதனத்திலிருந்து, பாற்றினம் - பருந்துக் கூட்டங்கள், சுழலும் - வட்டமிடுகின்ற, வை - கூர்மைபொருந்திய, வாட்படையொடும் - வாளாயுதத்துடன், நிலத்தில்-பூமியிலே, பாய்ந்தார் - குதித்தார், எ-று.

(பொ - ரை.) உயிர்போக்கலால் யமனையும், நீறுசெய்தால் அக்கினியையும் வேகத்தோடு தள்ளுதலால் காற்றையும், கர்ச்சித்து நடுக்கஞ்செய்தலால் இடியேற்றையும், பெரும்பான்மைபற்றி அரசர்க்கு உவமையாக்கினர். (அ)

கொய்யுளைக்கலினப்பாய்மா கொடிஞ்சியந்தேரிற்பூட்டி
மையன்மாமதத்தயானை பருமித்துமறலியேனுஞ்
செய்யகண்புதைக்குஞ்சீற்றத் திறல்கெழுவயவர்சூழ
மொய்கழலரசரெல்லா முருகுலாந்தும்பைவேய்ந்தார்.

(ப - ரை.) கொய்யுளை - கொய்துகட்டிய புறமயிரினையுடைய, கலினம் - கடிவாளம் பூண்ட, பாய் - தாவுகின்ற, மா - குதிரைகளை, கொடிஞ்சியந்தேரில் - மேன்மொட்டையுடைய இரதங்களில், பூட்டி - பூட்டுதல்செய்து, மையல் - மயக்கம்பொருந்திய, மா - பெரிய, மதத்த - மதத்தையுமுடைய, யானை - யானைகளை, பருமித்து - அலங்கரித்து, மறலியேனும் - கூற்றுவனாயினும், செய்யகண்புதைக்கும் - சிவந்தகண்களை மூடிக்கொள்ளத்தக்க, சீற்றம் - கோபத்தையுடைய, திறல்கெழு - வலிமைபொருந்திய, வயவர்சூழ - காலாள்கள் தம்மைச்சூழ்ந்துவரும்படி, மொய் - நெருங்கிய, கழல் - வீரக்கழலையணிந்த, அரசரெல்லாம் - அரசரனைவரும், முருகுலாம் - தேனொழுகுகின்ற, தும்பை - தும்பமாலையை, வேய்ந்தார் - தரித்தார்கள், எ-று.

(பொ - ரை.) தும்பை வேய்தலாவது—"செங்களத்து மறங்கருதிப்பைந்தும்பை தலைமலைந்தன்று, கார்கருதிநின்றதிருங் கௌவைவிழுப்பணையான், சோர்குருதிசூழா நிலனனைப்பப்போர்கருதித், துப்புடைத்தும்பை மலைந்தான் றுகளறுசீர், வெப்புடைத்தானையெம்வேந்து" இதலனறிக. (௯)

கொடுங்குணில்பொருதவெற்றிப் போர்ப்பறைகுளிரவெம்போர்க்
கடுந்திரல்வயவர்வின்னாண் புடைப்பொலிகடலினார்ப்ப
சுடுங்கனல்குளிரவெய்தாச் சுடர்விழிபொறிகள்சிந்த
மடங்கலேறனையவேந்தர் வாளமராழுவத்துற்றார்.

(ப - ரை.) கொடுங்குணில் - வளைந்த குறுந்தடியால், பொருத - அடிக்கப்பெற்ற, வெற்றி - சயத்தைத்தருகின்ற, போர்ப்பறை - யுத்தமுரசு, குளிற-ஒலிக்க, வெம்போர் - வெவ்வியபோர்செய்கின்ற, கடுந்திரல் - மிகுந்த சௌரியத்தையுடைய, வயவர் - படைவீரர்கள், வில் - வில்லை வளைத்துச் செய்யும், நாண்புடைப்பொலி - குணத்தொனிகள், கடலினார்ப்ப - கடல்போலொலிக்க, சுடுங்கனல் - சுடுகின்றநெருப்பும், குளிர - குளிரும்படி, வெய்தா - வெப்பமாக, சுடர்விழி - சிவந்தகண்கள், பொறி - நெருப்புப்பொறிகளை, சிந்த - சிதற, மடங்கலேறனைய - சிங்கவேற்றையொத்த, வேந்தர்-அரசர்கள், வாளமர் - வாட்போர்செய்கின்ற, அழுவம் - யுத்தகளத்தில், உற்றார்-அடைந்தார்கள், எ - று.

(பொ - ரை.) அனேக ரிறக்கும்படிச் செய்யும்போறைக் குறித்துப்ப றையையடிக்கின்றதாதலால், குணிலென்னது கொடுங்குணிலென்றார், விழிகள்சிவந்தும் பொறிகளுக்குச் சுடுங்கனலை ஒப்புச்சொல்லுதல் போலிருத்தலாற் சுடுங்கனல்சூளிரவெய்தாச் சுடர்விழிபொறிகள் சிந்தவென்றார். சூளிற, ஆர்ப்ப, சிந்தவென்னும் பெயரெச்சம் வேந்தரென்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. (௧0)

[இதனால் நளனது செருக்குச் சொல்லப்படுகின்றது.]

மன்னவர்தருக்கும்வெம்போர் வயிரவாள்சுமந்ததிண்டோட்
பொன்னகர்க்கிறைவன்சூழ்ந்த புணர்ப்புநாங்காண்டுமென்று
வொன்னலரகலமூழ்கி யூன்சுவைத்துதிரமாந்து
மின்னருபரிதியொள்வேல் வேந்தர்கோன்சிறிதுநக்கான்.

((ப - ரை.) மன்னவர் - அரசர்களுடைய, தருக்கும் - கர்வமும், வெம்போர் - வெவ்வியபோர்செய்கின்ற, வயிரவாள்சுமந்த - வச்சிரவாளைசுமந்த, திண்டோள் - வலிமைபொருந்திய தோள்களையுடைய, பொன்னகர்க்கிறைவன் - இந்திரனானவன், சூழ்ந்த - உண்ணிய, புணர்ப்பும் - சம்பந்தமும், நாங்காண்டுமென்று - நாங்காண்போமென்று, ஒன்னலர் - சத்துருக்களுடைய அகலமூழ்கி - மார்பினிடத்திலே குளித்து, ஊன்சுவைத்து - மாமிசத்தை மென்று, உதிரமாந்தும் - புண்ணீரைக்குடிக்கின்ற, மின்னரு - ஒளிவிடுகின்ற, பரிதி - சூரியன்போன்ற, ஒள்வேல் - ஒளிபொருந்திய வேற்படையையுடைய, வேந்தர்கோன் - நளமகாராசன், சிறிது - கொஞ்சம், நக்கான் - சிறித்தான், எ-று.

(பொ - ரை.) இங்கே நளன்சிரித்தது வீரச்சிறிப்பாம். அதுபரமசிவன் சிரித்துத் திரிபுரத்தைஎரிதலாலறிக. 'ஒன்னலரைச் செற்றனவொக்குஞ்சிறுநகைசெய்வன'' வென்றார் பிறரும். (௧௧)

[இதனால் தமயந்தி வருந்தல் சொல்லப்படுகின்றது.]

சிலைகுழைத்தரசர்நின்ற சீற்றமுநிணம்வாய்ப்பில்கிக்
கொலைபழுத்தொழுகும்வேலான் குவவுத்தோட்பணைப்புநோக்கி
யிலைமுகப்பூணினன்மற் றென்கொலாய்விளையுமென்று
முலைமுகட்டலங் [illegible]வற்கண் முத்துகவெருவிநின்றாள்.

(ப - ரை.) சிலைகுழைத்து - வில்லைவளைத்து, அரசர்நின்ற - அரசர்நிற்கப்பெற்ற, சீற்றமும் - கோபமும், நிணம் - கொழுப்பை, வாய்ப்பில்கி - வாயிற்சிதறி, கொலைபழுத்து - கொல்லுதல்மிகுந்து, ஒழுகும் - ஒழுகின்ற, வேலான் - வேற்படையையுடையநளனது, குவவுத்தோள் - திரட்சிபொருந்திய தோள்களினுடைய, பணைப்பும் - பூரிப்பும், நோக்கி - பார்த்து, இலைமுகப்பூணாள் - தமயந்தியானவள், என்கொலாய் விளையுமென்று - யாதால்முடியுமோவென்று, முலைமுகட்டு - ஸ்தனங்களினுடையவுச்சியில், வேற்கண் - வே

லிபோன்ற கண்களினின்றும், முத்துக-முத்துப்போல் நீர்துளிக்க, வெருவி-யெந்து, நின்றாள் - நின்றனள்.

(போ - ரை.) அரசர் கோபத்தையும் நளன்றேள் பூசிப்பையும்பார்த்த தமயந்தியானவள் அரசனுக்கு இத்தனைபேர், பகையாதற்கு நான்காரணமானேன் இனியாதாகுமோவென்று வெருவிநின்றனளென்க. மற்றுஅசைநிலை.

[இதனால் நளன் தமயந்தியைத் தேற்றல்
சொல்லப்படுகின்றது.]

செழுங்கடைமழைக்கணல்லாய் திண்சிலைகுழைத்துவெம்போர்க்
கெழுந்தவில்வரசர்மார்பத் திழிபெருங்குருதிமாந்தப்
புழுங்குவெம்பகழிமாரி பொழிந்தமர்முருக்கியாடி
யுழுந்துருள்பொழுதின்மீள்வ லுள்ளநீகவலலென்றான்.

(ப - ரை.) செழுங்கடை - செழுமையுள்ள கடையையுடைய, மழைக்கணல்லாய் - குளிர்ச்சிபொருந்திய கண்களையுடைய தமயந்தியே! திண்சிலை-வலிமையையுடையவில்லை, குழைத்து - வளைத்து, வெம்போர்க்கு - வெவ்வியுத்தத்திற்கு, எழுந்த - புறப்பட்ட, இவ்வரசர்மார்பகத்து - இவ்வரசர்மார்பினிடத்திலே, இழி - இழிகின்ற, பெருங்குருதி - அதிகவுதிரத்தை, மாந்த-உண்ணும்படி, புழுங்கு - வெம்புகின்ற, வெம்பகழிமாரி - வெவ்வியபாணமழையை, பொழிந்து - சொரிந்து, அமர் - யுத்தத்திலே, முருக்கி - கொன்று, ஆடி - விளையாடி, உழுந்துருள்பொழுதின் - உழுந்துருளுகிற காலத்திலே, மீள்வல் - திரும்புவேன், நீ-நீ, உள்ளம் - மனத்தினிடத்து, கவலல் - கவலைப்படவேண்டாம், எ-று.

(போ - ரை.) தயந்தி யாற்றாமையையுங் கவலைப்படுதலையு நோக்கிவிரைவுதோன்ற உழுந்துருள்பொழுதின் மீள்வலென்றான். [உழுந்துருள்பொழுதிலென உலகவழக்கச்சொல்லைத் தழுவிச் சொல்லுதலால் உலகவழக்கநவிற்சியணி.] (௬௩)

[இதனால் நளனுக்கு உதவியின்றிய பராக்கிரமஞ்
சொல்லப்படுகின்றது.

விளைசமர்க்கெழுந்துநின்ற வீமனையினிதினோக்கிக்
கரிமதக்களிறுந்தேருங் களப்படுத்திகலினேற்ற
வுளைவயப்புரவித்தானை யொன்னலர்ச்செகுப்பனீபோய்
நளிகடற்றானைசூழ நங்கையைக்காத்தியென்றான்.

(ப - ரை.) விளை - உண்டாகின்ற, சமர்க்கு - போர்செய்தற்கு, எழுந்துநின்ற - புறப்பட்டுநின்ற, வீமனை - வீமராஜனை, இனிதின் - இனிமையினால், நோக்கி - பார்த்து, களி - களிப்பையுடைய, மதக்களிறும் - மதயானையையும், தேரும் - தேரையும், களப்படுத்து - யுத்தக்களத்திலழித்து, இகலின் - பகையினால், ஏற்ற - எதிர்த்த உளை - புறமயிரினையுடைய, வயப்

புரவி - வலிமைபெற்றகுதிரைகளையும், தானை - சேனையையுமுடைய, ஒன்னலர் - சத்துருக்களை, செகுப்பல் - சொல்லுவேன், நீபோய் - நீசென்று, நளி - குளிர்ச்சிபொருந்திய, கடல் - கடல்போன்ற, தானைசூழ - சேனை சூழ்ந்திருக்க, நங்கையை - தமயந்தியை, காத்தியென்றான் - காப்பாயென்றான்.

[நளன் நங்கையைக் காத்தியென்றானென்க.]

(போ - ரை.) தமயந்தி நமக்கு மாலையிட்டபின்பு அவளைவிரும்பிநம்மோடெதிர்க்கும் அரசர் நாம் போர்செய்யும்போது அவளைக்கரந்து வௌவவரினும வருவரென்பதுபற்றியும், தன்பொருட்டு வந்தபேரை மற்றொருவர்பால் விடினும் தனக்கிழிவென்பது பற்றியும், அவட்குத் தந்தையாகியவீமனை அவளைக்காக்கும்படி வைத்தனனென்க. (கச)

[இதனால் நளன்போர்முயற்சிசெய்தல் சொல்லப்படுகின்றது.]

உடல்சினவுருமேறன்ன வயவரையொருங்குநோக்கிக்
கொடியணிகொடிஞ்சித்திண்டேர் கொய்யுளைக்கலினப்பாய்மா
கடன்மடைதிறந்தனென்னக் கரடமூற்றிருந்துபாயும்
படுமதக்களிநல்யானை பண்ணுறுத்திடுமினென்றான்.

(ப - ரை.) உடல் - பொருகின்ற, சினம் - கோபத்தையுடைய, உருமேறென்ன - இடியேற்றையொத்த, வயவரை - சேவகரை, ஒருங்குநோக்கி - ஒரேதரம்பார்த்து, கொடியணி - கொடிகளையணிந்த, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, திண் - வலிமைபொருந்திய, தேர் - தேரையும், கொய்யுளை - கொய்துகட்டிய புறமயிரினையுடைய, கலினம்-கடிவாளம் பூண்ட, பாய்மா - குதிரைகளையும், கடல் - கடலானது, மடைதிறந்ததுஎன்ன - மடைதிறந்ததென்று சொல்லும்படி, கரடம்-சுவடுபட, ஊற்றிருந்துபாயும் - ஊற்றிருந்து பாய்கின்ற, படுமதம் மதம்படுகின்ற, களிநல்யானை - களிப்பையுடைய நல்ல யானைகளையும், பண்ணுறுத்திடுமினென்றான் - அலங்கரியுங்களென்றான். எ-று.

(போ - ரை.) தனித்தனி உத்தரவுபண்ணிற் கால நீட்டிக்கு மென்பது பற்றி விரைந்து கூறினமைதோன்ற வயவரை யொருங்குநோக்கித் தேர், பாய்மா, யானை, பண்ணுறுத்திடுமினென்றான், (கரு)

[இதனால் நளன் போர்க்கோலங்கொள்ளுதல்
சொல்லப்படுகின்றது.]

நீங்கருகவசமார்த்து நேரலர்மௌலிதேய்க்கும்
பூங்கழனரலவீக்கிப் போரெனிற்பொருப்புமஞ்ச
வீங்கியகுவவுத்தோளில் வெங்கணைப்புட்டிறுங்கி
வாங்குவிற்றடக்கையேந்தி மறலிகண்புதைப்பநின்றான்.

(ப - ரை.) நீங்கரும்-பிரிதற்கரிய, கவசமார்த்து-கவசங்கட்டி, நேரலர்-சத்துருக்களுடைய, மௌலி - முடியை, தேய்க்கும் - தேய்க்கின்ற, பூங்க

ழல் - வீரக்கழலை, நரல - ஒலிக்கும்படி, வீக்கி - கட்டி, போரெனில் - யுத்தமென்றால், பொருப்புமஞ்ச - மலையுமஞ்சும்படி, வீங்கிய - பருத்த, குவவுத்தோளில் - திரட்சிபொருந்திய புயத்தின்கண், வெங்கணை - வெவ்விய பாணங்களையுடைய, புட்டிலுங்கி - அம்புக்கூட்டைத்தாங்கி, வாங்கு - வளைக்கப்பட்ட, வில் - வில்லை, தடக்கையேந்தி - விசாலம்பொருந்திய கையிலேந்தி, மறலி - யவனும், கண்புதைப்பகண்களை-மூடிக்கொள்ளும்படி, நின்றான்-நின்றனன். எ - று.

(போ - ரை.) நளன் கவசமார்த்துக் கழல்விக்கிப் பட்டில்தாங்கி வில்லேந்தி நின்றனனெனக்கூட்டுக. சத்துருக்கள் பணிந்துகிடத்தலால் நேரலர் மௌலிதேய்க்கும் பூங்கழலென்றார், மறலியென்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கு நின்றது. (கசு)

[இதனால் நளன்தேரேறுதல் சொல்லப்படுகின்றது.]

பொருசமர்தொடங்கிநின்ற புரவலர்மடவார்செய்ய
வரிநெடுங்கண்ணுந்தோளும் வலந்துடித்தின்னல்காட்டத்
குருமணிகுயிற்றுஞ்செம்பொற் கோடுயர்கொடிஞ்சித்தேரி
னருவரையிவருஞ்சீற்றமடங்கலேறென்னவார்ந்தான்.

(ப - ரை.) பொரு - பொருகின்ற, சமர் - யுத்தத்தை, தொடங்கிநின்ற- ஆரம்பித்துநின்ற, புறவலர் - அரசர்களுடைய, மடவார் மாதரது செய்ய - சிவந்த, வரி - அரிபரந்த, நெடுங்கண்ணும் - நெடிய கண்களும், தோளும் - தோள்களும், வலந்துடித்து-வலப்பக்கந்துடித்து, இன்னல்காட்ட-துன்பக்குறிகாட்ட, குருமணி-நிறம்பொருந்திய மணியால், குயிற்றும் - பதிக்கப்பட்ட, செம்பொன் - சிவந்தபொன்னாற்செய்த, கோடுயர் - சிகரத்தினாலுயர்ந்த, கொடிஞ்சித்தேரின்-மேன்மொட்டையுடையதேரின்மேல், அருவரை - அரிய மலையின்மேல், இவரும்-ஏறுகின்ற, சீற்றம் - கோபத்தையுடைய, மடங்கலேறென்ன - ஆண்சிங்கம்போல், ஆர்ந்தான் - ஏறினான்.

[நளன் தேரிலேறினனெனக் கூட்டுக.]

(போ - ரை.) மாதர்க்குத் துன்பம்வருமானால் வலத்தோள்களும் வலக்கண்களும் துடிக்குமென்பது துடிநூலிற்காண்க. (கஎ)

[இதனால் நளன் சங்கத்தொனிசெய்தல்
சொல்லப்படுகின்றது.]

ஊன்பயில்வடிவேலேந்தி யுடன்றுவெம்போரிலேற்ற
தேன்பயிறெரியல்வேந்தர் நடுக்குறத்திசையினின்ற
கூன்பிறைக்கோட்டுநால்வாய்க் குஞ்சரம்வெருவியோட
வான்பொதிரெறியத்தெய்வ வலம்புரிமுழக்கியிட்டான்.

(ப - ரை.) ஊன்பயில் - மாமிசந்தங்கிய, வடிவேலேந்தி-கூறியவேற்படையைத்தாங்கி, உடன்று - கோபித்து, வெம்போரில்-வெவ்வியயுத்தத்தில்

ஏற்ற - எதிர்த்த, தேன்பயில் - தேங்குகின்ற, தெரியல்-மாலையையுடைய, வேந்தர்-அரசர்கள், நடுக்குற - நடுக்கமடைய, திசையினின்ற-எட்டுத்திசையினுநின்ற, கூன் - வளைவுபொருந்திய, பிறைக்கோட்டு - பிறையையொத்த கொம்பினையும்,நால்வாய்-தொங்குகின்றவாயினையினையுமுடைய,குஞ்சரம்-யானைகள், வெருவியோட - பயந்தோடும்படி, வான் - ஆகாயம், பொதிரெறிய-நடுக்கமடைய, தெய்வவலம்புரி - தெய்வச்சங்கம், முழக்கியிட்டான் - தொனிசெய்தான், எ-று.

(போ - ரை.) சங்கத்தொனியினுல் தான் எது எது எப்படி ஆதல்வேண்டுமென்று நினைக்கின்ருனே அது அது அப்படியாகத் தொனித்தலால்தெய்வலம்புரி யென்ருர். (கஅ)

[இதனுல் இந்திரனடுக்கஞ் சொல்லப்படுகின்றது.]

கொன்னவில்பரிதிவைவாட் கூற்றுயிருண் ணுங்கூற்றின்
மின்னகுவரிவிலேந்தும் விடலையைநோக்கியேற்ற
மன்னவரளவின்றின்னேன் மணிவரைத்திணிதோள்வீக்க
மென்னினைந்தென்செய்தோமென் றிந்திரனடுங்கலுற்ருன்.

(ப - ரை.) கொல் - கொலைத்தொழிலை, நவில்-சொல்லப்பட்ட, பரிதி சூரியன்போன்ற, வைவாள் - கூர்மைபொருந்திய வாட்படையையும், கூற்றுயிர் - யமனுயிரை, உண்ணும் - உண்ணப்பட்ட, கூற்றின்-ஒரு யமன்போல் மின்னகு - ஒளியைவீசுகின்ற, வரிவிலேந்தும் - நெடிய வில்லையுமேந்திய, விடலையை - நளமகாராஜனை, நோக்கி - பாாத்து, ஏற்ற - எதிர்த்த, மன்னவர்-அரசர்களது, அளவன்று - அளவுடையதன்று, இன்னேன்-இவ்வரசனுடைய மணிவரை - அழகுபொருந்திய மாலைபோன்ற, திணி - வலிமைபெற்ற, தோள் - புயங்களினுடைய, வீக்கம் - பாரிப்பு, (ஆதலினுல்) என்னினைந்து-யாதைநினைந்து, என்செய்தோமென்று - யாதுசெய்தோமென்று, இந்திரன்-இந்திரனைவன், நடுங்கலுற்ருன் - நடுங்கினுன். எ-று.

(போ - ரை.) நாம் பொருமையால் மூட்டிவிட்ட சண்டையிற் கொலைப்பழிவந்து, அதிலும் நமக்கு அவமானமே வருதற்கு ஐயமில்லையென்று இந்திரன் நடுங்கலுற்ருனென்க. (கக)

[இனி யிரண்டுபாட்டால் சேனைகளின் ஆரவாரஞ்
சொல்லப்படுகின்றது.]

காத்திரண்முழக்கமென்னக் கனைகுரன்முரசமார்த்த
தூர்த்தனகடல்களேழுந் துரகதக்குரத்தின்றாளி
போர்த்தனவிசும்புபைம்பொற் கொடியொடுகுடையுமோங்கி
யார்த்தனவுவகைபொங்கித் துணங்கையிட்டலகையீட்டம்.

(ப - ரை.) கார்த்திரள் - மேகங்களினுடைய, முழக்கமென்ன - சத்தம் போல், கனை - முழங்குகின்ற, குரல் - குரலையுடைய, முரசம் - பேரிகை

கள், ஆர்த்த - ஒலித்தன, கடல்களேழும் - எழுசமுத்திரங்களையும், துரகதம்- குதிரைகளினுடைய, குரத்தின்றூளி - குளம்பினின்று மெழுகின்ற புழுதிகள், தூர்த்தன - தூர்த்துவிட்டன, விசும்பு - ஆகாயத்தை, பைம்பொற்கொடியொடு - பசியபொற்கொடிகளோடு, குடையும் - குடைகளும், ஓங்கி - உயர்ந்து, போர்த்தன - மூடிக்கொண்டன, அலகையீட்டம் - பேய்க்கூட்டங்கள், உவகைபொங்கி - மகிழ்ச்சிமிகுந்து. [துணங்கையிட்டு - கூத்தாடி, ஆர்த்தன- சத்தித்தன, எ-று. துணங்கை - இருகைமுடக்கிப்பழுப்புடையொத்தியாடல்.]

(போ - ரை.) கார்த்திரண் முழக்கமென்ன முரசமார்த்தவெனலால் அனேக முரசங்களென்றும், குரத்தின்றூளி கடல்களேழுந் தூர்த்தனவெனலால் அனேகங்குதிரைகளென்றும் விசும்பைப்போர்த்தனவெனலால் அனேகங்குடைகள்கொடிகளென்றும், துணங்கை யிட்டார்த்தனவெனலால்மாமிசமுண்ணவந்த பேய்களனேகமென்றும் பெறப்பட்டது. (உ0)

கூற்றெனவுரறியார்த்துக் கொல்சினவரியேறென்ன
வேற்றவர்வெருவநெய்த்தோ ரிடையறுதொழுகுங்கோட்டுச்
சீற்றமும்மதத்தினூழித் தீயையும்விக்கும்வேகக்
காற்றுழற்களிறுதூண்டிக் கட்கனல்கதுவச்செல்வார்.

(ப - ரை.) கூற்றென - யமனைப்போல், உரறி - ஆரவாரித்து, கொல்- கொல்கின்ற, சினம் - கோபத்தையுடைய, அரியேறென்ன - சிங்கவேற்றைப் போல், ஆர்த்து - கர்ச்சித்து, எற்றவர் - எதிர்த்தவர்கள், வெருவ - அஞ்ச, நெய்த்தோர் - உதிரமானது, இடையறுதொழுகும் - நீங்காதொழுகப்பெற்ற, கோட்டு - கொம்பையும், சீற்றம் - கோபத்தையுமுடைய, மும்மதத்தின் - மும்மதங்களால், ஊழித்தீயையும் - வடவாமுகாக்கினியையும் அவிக்கும் - அவிக்கப்பட்ட, வேகக்காற்றுறழ்சண்டமாருதத்தையொத்த, களிறுதூண்டி- யானையைச்செலுத்தி, கண்-விழிகளில், கனல்கதுவ - நெருப்புப்பற்ற, செல்வார் - செல்வார்கள், எ-று.

(போ - ரை.) வீரரைத் தன்கோட்டாற் குத்திக்கொல்லுதலால் யானைக்கொம்பு நெய்த்தோ ரிடையறு தொழுகுங் கோடெனப்பட்டது. "வேலாண்முகத்தகளிறு" என்றூர் பிறரும். (உக)

[இதுமுதல் பத்துப்பாட்டால் இருதிறச்சேனைகளும் பொருதல் சொல்லப்படுகின்றது.]

ஒள்ளழல்கண்ணிற்கால வுயிர்ப்பலியுண்ணுங்கூற்றின்
வள்ளுறைவடிவாளேந்தி வாய்மடித்தெயிறுதின்று
கள்ளவிழ்தும்பைசூடிக் கழுதுகைகொட்டியார்ப்ப
வள்ளிலைவயிரப்பைம்பூ ணரசரோடரசரேற்றூர்.

(ப - ரை.) ஒள் - பிரகாசம்பொருந்திய, அழல், நெருப்பு, கண்ணில்- கண்களினின்றும், கால - கொப்புளிக்க, உயிர்பலி - உயிராகிய உணவை

உண்ணும் - உண்ணுகின்ற, கூற்றின் - யமன்போல், வள்ளுறை - நெருங்கிய வுறையையுடைய, வடிவாளேந்தி - கூரியவாளை யேந்திக்கொண்டு, வாய்மடித்து - உதட்டை மடித்துக்கொண்டு, எயிறுதின்று - பல்லைக்கடித்து, கள்ளவிழ் - தேனொழுகுகின்ற, தும்பைசூடி - தும்பைமாலையைத்தரித்து, (இதுகண்டு) கழுது - பேய்கள், கைகொட்டி - கைகளைக்கொட்டி, ஆர்ப்ப - கர்ச்சிக்கும்படி, அள்ளிலை - அள்ளிக்கொள்ளும் இலைபோன்ற, வயிரப்பைம்பூண்-பசியபொன்னிற்பதித்த வச்சிராபரணத்தையுடைய, அரசரோடு-அரசருடன், அரசர் - அரசர்கள், எற்றூர்-எதிர்த்தார்கள், எ-று.

(போ - ரை.) அநேகரைச் சேதித்து உயிரை யுண்ணுதலால் வாட்படைக்குயமன் உவமை சொல்லப்பட்டது. வாய்மடித்தலும் பற்கறித்தலும் சினக்குறிப்பை வெளிப்படுத்தி நின்றன. அதிரப்பொருதற்கு வந்த குறிப்புத்தோன்ற கள்ளவிழ் தும்பைசூடியென்றூர். நெடுங்காலம் போரில்லாமையால் உணவுகள் கிடையாதிருந்தவருத்தம் இப்பொழுது கெடுமென்னும் உவமை மிகுதியால் கழுது கைகொட்டியார்ப்பவென்றூர். நெடுங்காலம் போரில்லாமை இந்திரப்படலத்தில் ஆங்கவண்மேலென்னும் பதினைலாம்பாட்டாலறிக, [தன்மை நவிற்சியணி.] (உஉ)

மண்ணிடைத்திரிவபோல மாதிரங்கடப்பதாவி
விண்ணிடைப்பறப்பவேழ மருப்பிடைமிதித்துமீள்வ
கண்ணிமைபொருந்திற்காணுக் கடுப்பினகலினப்பாய்மா
வெண்ணிலவயவர்தூண்டி யெதிரெதிர்மலைந்துநிற்பார்,

(ப - ரை.) மண்ணிடை-பூமியின்கண்ணே, திரிவபோல-திரிவனபோல, மாதிரம் - திசைகளை, கடப்ப - தாண்டுவன, தாவி - பாய்ந்து, விண்ணிடை - ஆகாயத்திலே, பறப்ப - பறப்பன, வேழமருப்பிடை - யானைக்கொம்பின்கண், மிதித்து - மிதித்து, மீள்வ - திரும்புவன, கண் - கண்கள், இமைபொருந்தில் - இமைகோட்டுமானல், காணுக்கடுப்பின் - காணக்கூடாத வேகத்தையுடையன, கலினப்பாய்மா - இத்தன்மையுள்ள கடிவாளம்பூண்ட தாவுகின்றகுதிரைகள், எண்ணில் - அளவற்றவைகளை, வயவர் தூண்டி - காலாட்கள்செலுத்தி, எதிரெதிர் - நேர்நேராக, மலைந்து - போர்செய்து, நிற்பார்-நிற்பார்கள், எ - று.

(போ - ரை.) கடப்ப, பறப்ப, மீள்வவென்னுங் கடுப்பினவாகிய பாய்மாவெனக்கூட்டுக. வேழமருப்பு இங்கே வெள்ளையானைக் கொம்பெனக்கொள்க. இதுவும் அவ்வணி. (உஙு)

சூழ்சுடர்வயிரவாளா லிந்திரன்றுமிக்குமுன்னம்
பாழியங்குடுமிக்குன்றஞ் சிறகொடுபறப்பவென்னக்
கேழ்கிளர்பரிதியேய்க்குங் கிளர்மணிக்கொடிஞ்சிமான்றே
ராழியோடாழிதாக்க வருஞ்சமர்தொடங்கிநிற்பார்,

(ப - ரை.) சூழ்சுடர் - ஒளிசூழ்கின்ற, வயிரவாளால்-வச்சிராயுதத்தால், இந்திரன் றுமிக்குமுன்னம் - இந்திரனறுப்பதற்குமுன்னே, பாழி - அகன்ற, குடுமி - சிகரங்களையுடைய, குன்றம் - மலைகளானவை, சிறகொடு - இறகுடனே, பறப்பவென்ன - பறப்பனபோல், கேழ்கிளர் - செந்நிறமிகுந்த, பரிதியேய்க்கும் - சூரியனையொத்த, கிளர்மணி - ஒளிவிளங்குமணிகள் பதித்த, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, மான்றேர் - குதிரைகட்டிய தேர்கள், ஆழியோடாழிதாக்க - உருளைகளோடுருளைகள் முட்ட, அருஞ்சமர் - அரிய யுத்தத்தை,தொடங்கி - ஆரம்பித்து, நிற்பார் - நிற்பார்கள், எ-று.

(போ - ரை.) ஒவ்வொருதேர், ஒவ்வொருமலைபோல் திரிதலால் அவைகட்குச் சிறகுடைய மலையுவமை சொல்லப்பட்டன. அனேகந்தேராதலால் நெருக்கம்பற்றிஆழிபோடாழிதாக்கவென்றார். அரசரோடரச ரெதிர்த்தலால் ஆழியோடாழி தாக்கினவென்க. (௨௪)

மோட்டிளமூலைகள்பாய்ந்த மருமத்தின்மூரியானைக்
கேட்டிணையுழக்கவெம்போர்க் கோளரியென்னச்சீறித்
தோட்டுணைகொட்டியார்த்துச் சுடர்நெடுங்குருதிவாளாற்
பூட்டியவோடைநெற்றி மத்தகம்போழ்ந்திட்டாரே.

(ப - ரை.) மோடு - உயர்ச்சிபொருந்திய, இளமூலை - இளமைபொருந்தியஸ்தனங்கள், பாய்ந்த - பாயப்பெற்ற, மருமத்தின் - மார்பின்கண், மூரி-வலிமையுடைய, யானைக்கோட்டிணை - யானையினிரண்டு கொம்புகளும், உழக்க - குத்திக்கலக்க, வெம்போர் - வெவ்வியபோர்செய்கின்ற, கோளரியென்ன - சிங்கவேற்றைப்போல், சீறி-கோபித்து, தோட்டுணை - இரண்டுதோள்களையும், கொட்டி - தட்டி, ஆர்த்து - கர்ச்சித்து, சுடர் - ஒளியையுடைய, நெடு - நெடிய, குருதி-உதிரந்தோய்ந்த, வாளால் - வாட்படையால், ஓடைபூட்டிய - முகபடாத்தையணிந்த, நெற்றி - நெற்றியையுடைய மத்தகம்-தலையை, போழ்ந்திட்டார் - பிளந்தார்கள், எ - று.

(போ - ரை.) தமது மார்பிற்குத்திய யானைக்குச்சிங்கம்வைரியாதலால், அரசரை கோளரியென்னச் சீறியென்றார். அரசர் சீறி ஆர்த்துவாளால் மத்தகம் போழ்ந்திட்டாரென்க. (௨௫)

கொலைத்தடங்கண்ணினல்லார் குறங்கின்மேற்குறங்குசேர்த்தி
முலைத்தடமுெழுமுங்கப்புல்லிக் கண்டுயின்முழவுத்தோளா
ரலைத்துமிழ்குருதிபொங்க வற்றுவீழ்புழக்கையேற்றி
மலைக்கடாக்களிறுபுல்லி மண்ணிடைத்துஞ்சுகின்றார்.

(ப - ரை.) கொலை - கொலைசெய்கின்ற, தடம் - விசாலம்பொருந்திய, கண்ணின் - கண்களையுடைய, நல்லார் - மாதர்களுடைய, குறங்கின்மேல்-துடைகளின்மேல், குறங்குசேர்த்தி - துடைகளைச்சேர்த்துக்கொண்டு, முலைத்தடம் - ஸ்தனதடங்களை, ஞெமுங்கப்புல்லி - அழுந்தத்தழுவிக்கொண்டு

கண்டுயில் - நித்திரைசெய்கின்ற, முழவு - மத்தளம்போன்ற, தோளார் தோளையுடைய அரசர்கள், அலைத்துவிழ் - அலைத்துமிழுகின்ற, குருதிபொங்க - உதிரமொழுக, அற்றுவீழ் - அற்றுவிழுந்த, புழைக்கை - துதிக்கையின்மேல், எற்றி - துடையை எற்றிக்கொண்டு, மலை-மலையையொத்த, கடாக்களிறு - மதயானையை, புல்லி - தழுவிக்கொண்டு, மண்ணிடை - பூமியிலே, துஞ்சுகின்றார் - நித்திரைசெய்கின்றார்கள், எ - று.

(போ - ரை.) மாதர் துடைக்குத் துதிக்கையும், முலைக்குயானையும், உவமையாதல் பற்றி அரசர் இறந்தும் முன்பு மாதரோடு துயிலுதல் போன்றிருந்தனரென்க. (௨௬)

கூற்றொடுங்கொம்மைகொட்டிக் குனிக்கும்வாளுழவர்வேகக்
காற்றினாற்பெண்ணையீன்ற கருங்கனியுகுவதேபோல்
வேற்றிறல்வயவர்சென்னி வீழ்த்துவெங்கரிகணூறிச்
சீற்றவெம்மடங்கலேற்றிற் செருக்களத்துழக்கியிட்டார்.

(ப - ரை.) கூற்றொடும் - யமனுடனே, கொம்மைகொட்டி - கைதட்டிக்கொண்டு, குனிக்கும் - கூத்தாடுகின்ற, வாளுழவர் - வாட்படையையுடைய வீரர்கள், வேகக்காற்றினில் - சண்டமாருதத்தில், பெண்ணையீன்ற - பனைமரந்தந்த, கருங்கனி - கரியபழம், உகுவதேபோல் உதிர்வதுபோல், வேற்றிறல் வேற்படையிற்றிறலையுடைய, வயவர் - படைவீரர்களுடைய, சென்னி- தலைகளை, வீழ்த்து - கள்ளி, வெங்கரிகள் - வெவ்வியயானைகளை, நூறி-கொன்று, சீற்றம் - கோபத்தையுடைய, வெம்மடங்கலேற்றில் - வெவ்விய சிங்கவேற்றைப்போல், செருக்களத்து - யுத்தகளத்தில், உழக்கியிட்டார் கலக்கினார்கள், எ - று.

(போ - ரை.) கொல்லுதலில் அவனோடொப்பாதலால் அவ்வுரிமைபற்றிக் கூற்றொடுங்கொம்மைகொட்டியென்றார். கொம்மை கொட்டலாவது, அகங்கைவிரித்துக்கொட்டுதலாம், மயிருள்ளதலையாதலால் வயவர். சென்னிக்குப் பனையின்கருங்கனி உவமைசொல்லப்பட்டது. [மடங்கலேற்றி லுழக்கியிட்டாரெனலால் உவமையணி.] (௨௭)

வயவரேரிருவர்தம்மில் வாளமர்விளைத்தலோடு
முயிர்துறந்தவற்குமாலை புனைதுமென்றும்பர்போந்த
கரமலர்க்கண்ணிகாணக் காளையர்மாய்ந்துமண்ணிற்
புயலுறழ்கூந்தற்காக வானினும்போர்செய்கின்றார்.

(ப - ரை.) வயவர்-படைவீரர்கள், ஓரிருவர்-இரண்டுபேர் தம்மில்-தமக்குள்ளே, வாளமர்-வாட்போரை, விளைத்தலோடும்-செய்தவளவில், உயிர் துறந்தவர்கு - இவருளாவி நீங்கினவனுக்கு, மாலை புனைதுமென் - மாலை தரிப்போமென்று, உம்பர்ப்போந்த, சுவர்க்கத்திலின்றும் வந்த, கயமலர்-தடாகத்திற்பூத்த மலரையொத்த, கண்ணி - கண்ணையுடைய அரம்பையா

னவள், காண - காணும்படி, காளையர் - வீரர்கள், மாய்ந்து - ஒருசேர இறந்து, மண்ணில் - பூமியிற்போல், புயல்உறழ் - மேகத்தையொத்த, கூந்தற்கு ஆக - கூந்தலையுடையபெண்ணிற்காக, வானினும் - ஆகாயத்தின்கண்ணும், போர் - யுத்தத்தை, செய்கிறார் - செய்கிறார்கள்.

(போ - ரை.) வானினுமென்பதில் உம்மை, இறந்ததுதழீஇய வெச்சவும்மையாம். மண்ணிற் புயலுறழ் கூந்தல்-தமயந்தி, வானிற் புயலுறழ் கூந்தல் அரம்பையெனக் கொள்க. இம்மையில் ஒருபெண்ணைப் பலர்விரும்பிப் போர் செய்வதுபோல்மறுமையிலும் ஓரரம்பையைவிரும்பியவர் பலராதலாற்பொருதனரென்க. எங்ஙனும்ஒருத்தியைப்பலர் விரும்பிற் போரேமுடியும் என்பது கருத்து. மாய்த்தும் போர்செய்கின்றா ரெனலால் தொல்லுருப்பெறலணி. ()

குருதிகொப்புளிக்கும்வேலான் குங்குமவளறுமூழ்கு
மருமத்தில்வாளிமூழ்க மயங்கினன்றெளிதலோடும்
விரைமொய்த்தகூந்தறாழ விண்ணினின்றார்வத்தோடு
முருவத்தார்புனையவந்தவொண்டொடிமயங்கிகின்றாள்.

(ப - ரை.) குருதி - உதிரத்தை, கொப்புளிக்கும் - உமிழ்கின்ற, வேலான் - வேற்படையையுடைய அரசனானவன், குங்குமஅளறு - குங்குமச்சேற்றில், மூழ்கும் - முழுசப்பெற்ற, மருத்தில் - மார்பினிடத்தில், வாளிமூழ்க- பாணங்கள்புதைய, மயங்கினன் - மயக்கங்கொண்டவனாகி, தெளிதலோடும்- தெளிந்தவளவில், விரைமொய்த்த - வாசனையையுடைய, கூந்தல்தாழ - குழலானது அவிழ, விண்ணின்நின்று-ஆகாயத்தினின்றும், ஆர்வத்தோடும்-ஆசையுடன்,உருவம்தார் - அழகியமாலையை, புனையவந்த-தரிக்கவந்த,ஒண்டொடி- அரமங்கையானவள், மயங்கிநின்றாள் - மயங்கிநின்றனள், எ-று.

(பொ - ரை.) கூந்த லவிழவெனலால் நினைப்பின்றி விரைந்து வந்தனளென்க. இவன்உயிர் மனிதரேகத்தைவிட்டுநீங்குமுன் மாலைசூட்டத் தெய்வமங்கைவந்து காத்திருப்பாளானால் விண்ணின்பம் பொறுதற்குப்போரின்மிக்கதில்லையென்பது கருத்து. (உகூ)

கான்படுமுருவப்பைந்தார் விதர்ப்பர்கோன்கன்னிவேற்க
ணூன்படாதுளையக்குத்தியுள்ளுயிர்பருகலாற்றேம்
வான்படாமின்னிறேச்சும்வாளினுன்மாய்துமென்னுத்
தேன்படுதெரியல்வேந்தர்செருமலைந்தாவிநீத்தார்.

(ப - ரை.) கான்படும் - வாசனையுண்டாகிய, உருவம் - அழகிய, பைந்தார்-பசியமாலையையுடைய விதர்ப்பர்கோன் - வீமனுடைய கன்னி-தமயந்தியினது, வேற்கண் - வேல்போன்றகண்களானவை, ஊன்படாது - மாமிசம்படாமல், உளைய - வருந்தும்படி, குத்தி - குத்தி, உள்ளுயிர் - உள்ளாவியை, பருகல் - உண்பதை, ஆற்றேம் - பொறுக்கமாட்டேம், வான்படா- மேகத்திற்றோன்றாத, மின்னின் - மின்போல், ஒச்சும்-எறிகின்ற, வாளின்-

வாட்படையால், மாய்துமென்ன - மாய்வோமென்று, தேன்படு - தேனுண்டாகின்ற, தெரியல் - மலர்மாலையையணிந்த, வேந்தர் - அரசர்கள், செருமலைந்து - போர்புரிந்து, ஆவி - உயிரை, நீத்தார் - நீக்கினார்கள், எ-று.

(போ - ரை.) மாதர்விழி வாளினுங்கொடியதென்பது, "வெய்யகூற்றுருத்தெறி வேல்விலக்கினு, மெய்துமூழ் வினைத்தொடரெண்ணிமாற்றினுந் தையலார் முழுமதி முகத்திற்றங்கிய, மையகட் காலவேன் மாற்றலாகுமே." இதனாலறிக. (கூ0)

முழவுறழ்திணிதோள்வீரர்முழுமெயுமிருபுண்மேய
விழிபெருங்குருதியாடியிளங்கதிர்ப்பரிதியேய்ப்ப
வழிகவுட்கடாத்தநால்வாயரசுவாவெருத்திற்றோன்றிப்
பொழிகணைமாரிசிந்தியகலிருவிசும்புபோர்த்தார்.

(ப - ரை.) முழவுறழ் - மத்தளத்தையொத்த, திணி - வலிமைபொருந்திய. தோள் - புயத்தையுடைய, வீரர் - படைவீரர், முழுமையும் - தேகமுழுதும், இரு - பெரிய, புண்மேய - புண்ணிற்பொருந்திய, இழி - ஒழுகின்ற, பெருங்குருதியாடி - பெரியவுதிரத்தில்மூழ்கி, இளங்கதிர்-இளம்பொருந்திய கிரணத்தையுடைய, பரிதியேய்ப்ப - சூரியனையொப்ப, கவுள் - கவுளினிடத்திலே, அழி - வீழுகின்ற, கடாத்த - மதத்தையுடைய, நால்வாய் - தொங்குகின்றவாயையுடைய, அரசுவா - அரசயானையின், எருத்தில் - பிடரியின்மேல், தோன்றி - ஏறி, பொழி - பொழிகின்ற, கணைமாரி - பாணவருஷங்களை, சிந்தி - சிதறி, அகல் - அகன்ற, இரு - பெரிய, விசும்பு - ஆகாசத்தை, போர்த்தார் - மறைத்தார்கள், எ - று.

(போ-ரை.) அரசுவாவிற்கிலக்கணம் சுயம்வரப்படலத்திற் 'குளிர்மதி' என்னும் எழுபத்துமூன்றாம் பாட்டுரையிற்காண்க. (கூக)

இனி மூன்றுபாட்டால் அரசர்களனை யெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.

அருமருந்தனையாள்சூட்டு மலங்கலந்தோளினானைப்
பொருதிரைப்புணரிசூழ்ந்த புவியிணிலரசரெல்லா
நிறையுளையரிமானேற்றை நிழல்சுளிதறுகட்சீற்ற
வரைபுரைகளிநல்யானை வளைந்தெனவளைந்துகொண்டார்.

(ப - ரை.) அருமருந்தனையாள் - அரியதேவாமிர்தத்தையொத்த தமயந்தியானவள், சூட்டும் - தரித்த, அலங்கலந்தோளினானை - மாலைவிளங்கும் புயத்தையுடைய நளனை, பொருதிரை - மோதுகின்றஅலைகளையுடைய, புணரிசூழ்ந்த - கடலாற்சூழப்பட்ட, புவியினில் - பூவுலகத்து, அரசரெல்லாம்- அரசரனைவரும், நிறை - வரிசைபெற்ற, உளை - புறமயிரையுடைய, அரிமானேற்றை - சிங்கவேற்றை, நிழல்சுளி - நிழலைக்கோபிக்கின்ற, தறுகண்-அஞ்சாமையையும், சீற்றம் - கோபத்தையுமுடைய, வரைபுரை - மலையையொ

த்த; களிநல்யானை - களிப்பையுடைய நல்யானைகள், வளைந்தென - வளைதந்னபோல், வளைந்துகொண்டார் - சூழ்ந்துகொண்டார்கள், எ-று.

(போ - ரை.) இத்தனையரச ரெதிர்த்தும் நளனுக்கு இணையாக மாட்டாரென்பது தோன்ற அரிமானேற்றைக் களிநல்யானை வளைந்தென வளைந்துகொண்டாரென்றார். (உவமையணி.) (௩உ)

நொறில்பரித்தடந்தேருந்தி நோன்சிலைகுழையவாங்கிப
பொறியழற்பகழிதூவிப் பொங்குளைப்புரவிமான்றேர்
தெறுகதக்களிநல்யானைசினவுவாள்வயவரீட்டங்
குறைபடநூழிலாட்டிக் கூற்றெனவரசரார்த்தார்.

(ப - ரை).) நொறில் - விரைவினையுடைய, பரி-குதிரைகட்டிய, தடம்-விசாலம்பொருந்திய, தேர்உந்தி - தேரைச்செலுத்தி, நோன்சிலை - பெரியவில்லை, குழையவாங்கி - வளையவளைத்து, பொறியழல் - அக்கினிப்பொறியையுடைய, பகழிதூவி - பாணங்களைவீசி, பொங்குஉளை - மிகுந்த புரமயிரினையுடைய, புரவி - குதிரைகளும், மான்றேர் - குதிரைக்கட்டியதேர்களும், தெறுகதக்களிநல்யானை - மிகுந்தகோபத்தையுங் களிப்பையுமுடைய யானைகளும்; சினவுவாள்வயவரீட்டம்-கோபிக்கின்றவாட்படையையுடைய படைவீரர்கூட்டமும், குறைபட - குரையும்படி, நூழிலாட்டி - அமிதமான கொலைசெய்து, கூற்றென - யமன்போல், அரசர்-மன்னர்கள், ஆர்த்தார் - கர்ச்சித்தார்கள், எ - று.

(போ - ரை.) தேருந்தி, சிலைவாங்கி, பகழிதூவி, நூழிலாட்டி, ஆர்த்தார் அரசரெனக்கொள்க. நூழிலாட்டாவது-பகைவர் ஓடும்படி தன்மார்பிற் றைத்துக்கிடந்த ஆயுதத்தைப்பிடுங்கியெறிதல். "களங்கழுமியபுடை யிரிய, வுளங்கழித்த வேல்பரித்தோச்சின்று, மொய்யகத்துவேந்தர் முரணினி யென்னுங்கொல், கையகத்துக்கொண்டான் கழல்விடலை, வெய்ய-விடுசுடர்சிந்திவிரையகலம் போழ்ந்த, படுசுடரெஃகம் பறித்துகைவேல், களிற்றொடு போக்கிவருபவன், மெய்வேல்பறியாநகும்" இவற்றாலறிக. (௩௩)

தெண்டிரைப் பரவையேழுஞ் சேறுபட்டொழியத்தெண்ணீர், மொண்டுகொண் டெழுந்தோர் குன்றின் முகிகுழாஞ்சொரிவதேய்ப்பப், புண்டலை வடிவேன்மன்னர் பெறியழற்பகழிமாரி, மண்டமர் கடந்த திண்டோண் மன்னன்மேற் பொழிந்திட்டாரே.

(ப - ரை.) தெண்டிரை - தெளிவுபொருந்திய அலைகளையுடைய,பரவையேழும் - கடல்களேழும், சேறுபட்டொழிய - சேறுபட்டுநீங்க, தெண்ணீர் மொண்டுகொண்டு - தெளிவாகியநீரை மொண்டுகொண்டு, ஓர்குன்றில்-ஒருமலையில், முகிற்குழாம் - மேகக்கூட்டங்கள், சொரிவதேய்ப்ப - பொழிவதையொப்ப, புண்டலை - ஊனைத்தலையிலுடைய, வடிவேன்மன்னர்-

கூறியவேற்படையை யுடையவரசர்கள், பொறியழல் - நெருப்புப்பொறி பறக்கின்ற, பகழிமாரி - பாணமழையை, மண்டு-நெருங்கிய, அமர்கடந்த-யுத்தத்திற்ஜெயித்த, திண்டோள் - வலிமை பொருந்திய புயத்தையுடைய, மன்னன்மேல்-நளமகாராஜன்மேல், பொழிந்திட்டார்-சொரிந்தார், எ - று.

(போ - ரை.) பரவையேழுஞ் சேறுபட்டொழியத் தெண்ணீர்மொண்டுகொண்டு டென்னலால் அரசர்கள் வைப்பாகவைத்திருந்த பாணங்களையும் நளன் மேற் பொழிந்தனரென்பதாயிற்று, (கூஅ)

[இனி இரண்டுபாட்டால் அவ்வரசரை நளனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது]

கொள்ளைகொண்டோரியுண்ணக் குழாங்கொடுகவந்தமாட
வொள்ளழற்றறுகட்கூற்ற முயிருண்டுதெவிட்டிநிற்ப
வெள்ளவெங்குருதிபோர்ப்ப வியன்பணைநிடதங்காக்கும்
வள்ளறன்புருவத்தோடும்வரிசிலைகுனிந்ததன்றே.

(ப - ரை.) கொள்ளைகொண்டு-கொள்ளையாக வாரிக்கொண்டு,ஓரியுண்ண-நரிகளுண்ண, குழாங்கொடு-கூட்டங்கொண்டு, கவந்தமாட-உடற்குறைகள் கூத்தாட, ஒள்ளழல் - ஒளியையுடைய நெருப்புப்பொறி பறக்கின்ற, தறுகண்-அஞ்சாமையையுடைய,கூற்றம்-யமனானவன், உயிருண்டு-உயிரையுண்டு, தெவிட்டிநிற்ப - உமிழ்ந்துநிற்க, வெள்ளவெங்குருதி - வெப்பம்பொருந்திய உதிரவெள்ளமானது, போர்ப்ப - மூடிக்கொள்ள, வியன்-பெரிய, பணை-வயலையுடைய, நிடதங்காக்கும் - நிடதநாட்டைப் புரக்கின்ற, வள்ளறன் - நளனுடைய, புருவத்தோடு-புருவத்துடன், வரிசிலை - அவனதுநெடியவில்லானது, குனிந்தது-வளைந்தது எ - று. அன்று ஏ - இவ்விரண்டும் அசைநிலைகள்.

(போ - ரை.) ஓரியுண்ண, கவந்தமாட கூற்றமுயிருண்டுதெவிட்டிநிற்ப குருதிபோர்ப்ப வள்ளல்சிலை குனிந்ததெனக் கூட்டுக. [புருவத்தோடும் சிலை வளைந்ததெனலால் உடனிகழ்ச்சியணி. (கூகு)

கூன்பிறைக் கோட்டுவல்விற் குழைத்ததுங் குழைத்துத்தெவ்வ, ரூன்சுவைத் துண்ணும்வாளிவிடுத்ததுமொன்னலார்தங், கான்படுதெரியன்மார்பம் போழ்ந்ததுந்தெரியக்காணார், வான்படு பிணக்குன்றோங்கி வயின்வயின்விளங்கக்கண்டார்.

(ப - ரை.) கூன் - வளைவுகொண்ட,பிறை-பிறையையொத்த, கோட்டு வல்வில் - கொம்பினாலாகிய வலியவில்லை, குழைத்ததும் - வளைத்ததையும், குழைத்து - வளைத்து, தெவ்வர - பகைவருடைய, ஊன்சுவைத்து - மாமிசத்தைமென்று, உண்ணும் - உண்ணுகின்ற வாளிவிடுத்ததும் - பாணங்கள் விட்டதையும், ஒன்னலார்தம் - சத்துருக்களுடைய, கான்படு - மணமுண்டாகிய, தெரியல் - மலர்மாலையையணிந்த, மார்பம் - பார்பை, போழ்ந்ததும் - பிளர்ந்ததையும், தெரியக்காணார் - ஒருவருந் தெரியக்கண்டிலர்

(யாதுகண்டனரெனில்) வான்படு-ஆகாயமளாவிய, பிணக்குன்றேங்கி-பிண மலைகளுயர்ந்து, வயின்வயின்-இடங்கடோறும், விளங்க-விளங்குதலை, கண்டார்-பார்த்தார்கள். எ-று,

(பொ-ரை.) புகையினால்நெருப்புண்டென் றறிந்ததுபோல் பிணக்குன்றினால்நளன் பொருதனனென் றறிந்தனரென்க. [பிணக்குன்றேங்கி வயின்வயின்விளங்கக்கண்டாரென்னுங்காரியத்தினால்காரணமாகிய நளனது வில்லாண்மை தோன்றுதலால் புனைவலிப் புகழ்ச்சியணி]. (௬௬)

[இனி நளனோடு தனித்தனி அரசரெதிர்த்துப் பொருதல் சொல்லத்தொடங்கிக் கலிங்கநாட்டரச னெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

பொருசமத்துடன்றவீரர்பொன்றிடநின்றவேந்தர்
வெருவலுற்றிரியுமாறும் வேந்தர்கோன்வலியுநோக்கி
யெரிமணிப்பொன்செயோடை யிளங்களிப்பகடுசூழக்
கரைபொருகடலந்தானைக் கலிங்கர்கோனமரிலேற்றான்.

(ப-ரை.) பொருசமத்து - பொருகின்றபோரில், உடன்றவீரர் - கோபித்தெதிர்த்த வீரர்கள், பொன்றிட - இறந்துவிட, நின்றவேந்தர்-நின்றமற்றையரசர்கள். வெருவலுற்று-பயந்து, இரியுமாறும்-ஓடுந்தன்மையும், வேந்தர்கோன்-நளமகாராஜனுடைய, வலியும்-வலிமையினையும், நோக்கி - பார்த்து, எரிமணி - ஒலிக்கையுடையமணிகள்பதித்த, பொன்செயோடை - பொன்னாற் செய்த முகபடாத்தையுடைய, இளங்களிப் பகடுசூழ - இளமை பொருந்திய களிப்பையுடைய-யானைகள்சூழ்ந்துவர, கரைபொரு-கரையோடுமோதுகின்ற, கடலந்தானை-சேனாசமுத்திரத்தையுடைய, கலிங்கர்கோன்-கலிங்கதேசத்தரசன், அமரில்-யுத்தத்தில், ஏற்றான்-எதிர்த்தான். எ-று.

(பொ-ரை.) எதிர்த்தலையும் ஏிறத்தலையும் மற்றவேந்தரோடுதலையும் நளன்வலிமையையுங் கண்டகலிங்கதேசத்தரசன் அவனோ டேற்றனனென்க சேனையிற் குறைவிலனென்பது தோன்றக் கடலந்தானைக் கலிங்கர்கோனென்றான். (௬௭)

கந்தடுதறுகட்சீற்றக் கடாம்பொழிகளிநல்யானை
மந்தரகிரியாற்றானை வாரிதியுழக்கிவானத்
திந்திரகுமரனென்ன விகல்புரிநிடதர்கோமா
னுந்துமான்றேரின்மேலு மொருகணைதெரிந்துவிட்டான்.

(ப-ரை.) கந்தடு-கட்டுத்தறியை முறிக்கின்ற, தறுகண்-அஞ்சாமையையுடைய, சீற்றம் - கோபத்தையுடைய, கடாம்பொழி - மதம்பொழிகின்ற, களிநல்யானை - களிப்பையுடையநல்லயானையாகிய, மந்தரகிரியால் - மந்தரமலையினால், தானைவாரிதி - சேனாசமுத்திரத்தை, உழக்கி - கலக்கி, வான

த்து-விண்ணுலகத்து, இந்திரகுமரனென்ன-இந்திர குமரனைப்போல், இகல்புரி-போர்செய்கின்ற, நிடதர்கோமான் - நளமகாராசன், உந்து - செலுத்துகின்ற, மான்றேரின்மேலும் - குதிரைகட்டிய தேரின்மேலும், ஒருகணை-ஒருபாணத்தை, தெரிந்து-பார்த்து, விட்டான்-விடுத்தனன். எ-று,

(போ - ரை.) இவன் விடும்பாணங்களுக்கும் வலிமைக்கும் தனது கோலொன்றே நிகரென்பவன்போ லொருபாணம் விடுத்தனனென்க. உம்மை சிறப்பு, [யானையை மந்தரகிரியாகவும் தானையைவாரிதியாகவும் உருவகப்படுத்திச் சொல்லுதலால் உருவகவணி.] (௩௮)

பைம்மலைத்தகன்றவல்குற் பாவையர்க்கனங்கனன்ன
தெம்மலைச்சினவேற்காளை சிலைவளைத்தொருகோலுந்தக்
கைம்மலைக்கோட்டில்வீழ்ந்த கலிங்கர்கோனமரர்மாதர்
வெம்முலைக்கோட்டில்வீழ்ந்து விண்ணிடைவிளங்கினானே.

(ப - ரை.) பைம்மலைத்து-பாம்பின்படத்துடன் பொருது, அகன்ற-விரிந்த, அல்குல்-அல்குலையுடைய, பாவையர்க்கு - மாதர்க்கு, அனங்கனன்ன-மன்மதனையொத்த தேவசத்துருக்களை, மலை-பொருகின்ற, சினவேற்காளை-கோபம்பொருந்திய வேலையுடைய நளனாவன், சிலைவளைத்து-வில்லைவளைத்து, ஒருகோலுந்த - ஒருபாணஞ்செலுத்த, கைம்மலைக்கோட்டில் - யானைக்கொம்பின்மேல், வீழ்ந்த-விழுந்த, கலிங்கர்கோன் - கலிங்கதேசத்தரசனானவன், அமரர்மாதர்-அரம்பையருடைய, வெம்-விருப்பைச்செய்கின்ற, முலைக்கோட்டில் வீழ்ந்து - முலையாகிய யானைக்கொம்பின்மேல் விழுந்து, விண்ணிடை-தெய்வலோகத்தில், விளங்கினான் பிரகாசித்தான். எ-று.

(போ - ரை.) கலிங்கதேசத்தரசன் அனேகபாணங்கள் பிரயோகித்தும் அதனால் நளனிறவாமல் இவன்விட்ட ஒருபாணத்தால் அவன் இறத்தலால் அப்பலவும் இவ்வொன்றை நிகராமை விளக்கி நின்றது நளனுடைய பாணத்தால் அறுபட்டு யானையின்கொம்பில் வீழ்ந்தவளவிலேதானே அரம்பையருடையஸ்தனத்தைப்புல்லி அதனால் சிறப்புற்றுநின்றனனென்க. கைம்மலைக்கோட்டில் வீழ்ந்தது மனிதவுடல்வெம்முலைக்கோட்டில் வீழ்ந்தது அவனது தெய்வவுடலெனக் கொள்க. விரைவுபற்றி அக்கோட்டில் வீழ்ந்து உடனே இக்கோட்டில் வீழ்ந்தனனென்றான். (௩௯)

[இனி மூன்றுபாட்டுக்களாலே மகததேசத்தரசன்
எதிர்த்திறத்தல் சொல்லப்படுகின்றது.]

களத்திடைக்கலிங்கர்கோமான் கவிழ்தலுங்கடைக்கண்சேப்ப
வுளத்திடைவெகுளிபொங்க வூழிவெங்காலினோடி
வளைத்தனன்சேனையோடும் வாசிலைவணக்கிவெம்போர்
விளைத்தனன்கூற்றுமஞ்ச வெந்திறன்மகதர்கோவே.

(ப - ரை.) களத்திடை-யுத்தகளத்திலே, கலிங்கர் கோமான்-கலிங்கதேசத்தரசன், கவிழ்தலும்-இறந்தவளவில், கடைக்கண்சேப்ப-கடைக்கண்கள்

சிவக்க, உளத்திடை-மனத்தில், வெகுளிபொங்க - கோபமிக, ஊழிவெங்காலின் - யகமுடிவிலுண்டாகிய வெவ்விய காற்றுப்போல், ஓடி-ஓடி, வளைத்தனன்-வளைத்தனனாகி, சேனையோடும்-சேனையுடனே, வார்-நெடிய, சிலைவணக்கி-வில்லைவளைத்து, கூற்றுமஞ்ச-யமனுமஞ்சும்படி, வெந்திறல்-வெவ்வியதிறலையுடைய, மகதர்கோ-மகததேசத்தரசன், வெம்போர்-வெவ்வியபோரை, விளைத்தனன்-செய்தனன். எ-று.

(போ - ரை.) மகதர்கோவானவன் கடைக்கண்சேப்பவெகுளிபொங்க ஓடிவளைத்தனனாகி விளைத்தனனெனக் கூட்டுக. (௪௦)

முரிதிரைப்பரவைவேலை முகட்டெழுந்தகல்வான்மேய
விரிகதிர்மதியந்தீண்டும் வெள்ளெயிற்றரவமென்னக்
குருதிகொப்புளிக்கும்வேலான் கொற்றவெண்குடையின்மீது
வரிசிலைகுழைத்துவெய்ய வடிக்கணையொன்றுவிட்டான்.

(ப - ரை.) முரி-வளைந்த, திரை-அலையையுடைய, பரவை - பரப்பையுடைய, வேலைமுகட்டெழுந்து - கடலினுச்சியிலுதித்து, அகல்வான்மேய - அகன்ற ஆகாயத்தின்கணுள்ள,விரிகதிர்மதியம்-விரிகின்றகிரணங்களையுடைய சந்திரனை, தீண்டும்-தொடுகின்ற, வெள்ளெயிற்றரமென்ன-வெள்ளிய பல்லையுடைய சர்ப்பம்போல், குருதி கொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழ்கின்ற, வேலான் - வேற்படையையுடைய நளனானவன், கொற்றம் - சயத்தைத்தருகின்ற, வெண்குடையின்மீது - தவளசத்திரத்தின்மேல், வரிசிலைகுழைத்து-நெடியவில்லைவளைத்து, வெய்ய-கொடிய, வடிக்கணையொன்று - கூறியகணையொன்றை, விட்டான்-விடுத்தனன். எ-று.

(போ - ரை.) மதியந்தீண்டும் வெள்ளெயிற்றரவமென்னல் "கண்டது மன்னுமொருநா ளவர்மன்னுந், திங்களைப் பாம்புகொண்டற்று" இதனாலறிக. [வெண்குடைக்கு மதியையும் பாணத்திற்குச் சர்ப்பத்தையும் ஒப்புச்சொல்லுதலால் உவமையணி.] (௪௧)

சுரும்பிமிர்தும்பைவேய்ந்த சுடர்முடிமகதர்கோமான்
விரும்பலர்செகுக்கும்வேலான் விற்பழுத்துமிழும்வெய்ய
சரம்படவற்றுவீழ்ந்த தன்னுடற்குறைநின்றாட
வரம்பையரோடுநோக்கி யணிமணிமுறுவல்பூத்தான்.

(ப - ரை.) சுரும்பு-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, தும்பைவேய்ந்த-தும்பைமாலைதரித்துவந்த, சுடர்முடி-கிரணங்களை வீசுகின்ற கிரீடத்தையுடைய, மகதர்கோமான்-மகததேசத்தரசனானவன், விரும்பலர்-சத்துருக்களை, செகுக்கும்-கொல்லுகின்ற, வேலான்-வேற்படையையுடைய நளனது, விற்பழுத்து-வில்லானது பழுத்து, உமிழும்-உமிழுகின்ற, வெய்யசரம்பட - வெவ்விய பாணங்கள்பட, (அவைகளால்) அற்றுவீழ்ந்த-துணிந்துவீழ்ந்த, தன்-தன்னுடைய, உடற்குறை-கவந்தமானது, நின்று-நின்று, ஆட-கூத்தாட, அரம்பைய

ரோடு-தெய்வமாதரோடு, நோக்கி-பார்த்து, அணி-அழகிய, மணி - முத்தை யொத்த நகைதோன்ற, முறுவல்பூத்தான்-நகைத்தனன். எ-று.

(போ - ரை.) மகததேசத்தரசன் தெய்வவுருப்பெற்றமையால் அதிற் குறைந்த மனிதவுருவை யிகழ்ந்து நகைத்தனனென்க. தன்னுடற் குறைநின் றுடநோக்கி யென்றலால், தறிப்பட்டவுடலாடி நிலத்தின் விழுமுன்னமே தெய்வவுருப் பெற்றன னென்னும் விரைவுதோன்றியது. நாணமுற்றவர் உடன் சிறித்திடுவதென்பது இயல்பாதலால் தனக்குமாலைசூட்டிய அரம்பை யரோடு நோக்கி யணிமணிமுறுவல் பூத்தானென்றார். (௪௨)

[இதனால் சோழனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது]

அமைப்பருந்தறுகட்சீற்றத்தாளரியேறுபோல்வான்
சமர்த்தலையிகலினேற்ற தரியலர்சென்னிவீழத்
துமித்திடுங்குருதியொள்வாள்சுடரெழவிதிர்ப்பநோக்கி
யிமைத்தலும்வளவர்கோனை வெருவனீயேகுகென்றான்.

(ப - ரை.) அமைப்பரும்-அமைத்தற்கரிய, தறுகண்-அஞ்சாமையையும், சீற்றத்து-கோபத்தையும், ஆள்-ஆளுகின்ற, அரியேறுபோல்வான்-சிங்கவேற் றையொத்த நளனுனவன், சமர்த்தலை-யுத்தகளத்தில், இகலினேற்ற-பகையி னலெதிர்த்த, தரியலர்-சத்துருக்களுடைய, சென்னிவீழ-தலைகள்வீழும்படி, துமித்திடும்-தறித்திடுகின்ற, குருதி-உதிரத்தையுடைய, ஒள்வாள் - ஒள்ளிய வாட்படையை, சுடரெழ-ஒளிதுளும்ப, விதிர்ப்ப-அசைக்க, நோக்கி-அதுக ண்டு, இமைத்தலும்-இமைக்கோட்டுமளவில், வளவர்கோனை-சோழனை, வெ ருவல்-அஞ்சாதே, நீ-நீ, ஏகுகென்றான்-போவென்றான். எ-று,

(போ - ரை.) நளன் வாளசைத்ததக்கண்டுகண்ணிமைக்கோட்டலால் நம்மோடுபொருதற்கு அஞ்சினன். இவனோடு பொருவது தருமமன்றென்று சோழனைப்பார்த்து, அஞ்சாதே நீபோவென்றான். அதுதோல்வியென்பது" விழித்தகண் வேல்கொண்டெறிய வழித்திமைப்பி, னோட்டன்றோ வன்கண வர்க்கு" இதனாலறிக. (௪௩)

[இதனால் சேரமான் எதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைப்புரவிதூண்டிக் கொடுமரங்குழையவாங்கி
வெய்யவெம்பகழிமாரி விண்ணகம்புதைப்பத்தூவி
யையன்மெய்க்கவசமீது மைங்கணைசிதறியார்ததான்
மையறுசிறப்பின்மிக்க வஞ்சியம்பதிக்குவேந்தே.

(ப - ரை.) மையறு - குற்றமற்ற, சிறப்பின்மிக்க - சிறப்பினாலுயர்ந்த, வஞ்சியம்பதிக்கு-வஞ்சியென்னு நகரத்திற்கு, வேந்து-அரசனாகிய சேரமான், கொய்யுளை-கொய்துகட்டிய புறமயிரினையுடைய, புரவி-குதிரையை, தூண்டி-

செலுத்தி, கொடுமரம்-வில்லை,குழையவாங்கி-வளையவளைத்து,வெய்ய-கொடிய, வெம்பகழிமாரி-வெவ்வியபாணமழையை, விண்ணகம்-ஆகாயமுழுவதும், புதைப்ப-மூடும்படி, தூவி-இறைத்து, ஐயன்-நளனுடைய, மெய்க்கவசமீதும்-சிரசின்மேலும், ஐங்கணை தூவி-ஐந்துபாணம் விட்டு, ஆர்த்தான் - கர்ச்சித்தான். எ-று.

(போ - ரை.) நளன்மேல் ஐங்கணைதூவின னெனலால் பகழிமாரி விண்ணகம் புதைப்பத் தூவியென்பதைச சேனைகண்மேலெனக் கொள்க.

சில்லியந்தடந்தேருந்தித் திண்சிலைகுழையவாங்கிக்
கொல்லியவெழுந்தகூற்றிற் கொடியவெம்பகழிதூவி
மல்லடுதோளுமார்பும் வழிபெருங்குருதியோடும்
வில்லவன்வெருவியோட வெஞ்சமமுடற்றினனே.

(ப - ரை.) சில்லி-உருளையையுடைய, தடம்-விசாலம் பொருந்திய,தேருந்தி-தேரைச்செலுத்தி, திண்-வலிமை பொருந்திய, சிலை- வில்லை, குழைய வாங்கி-வளையவளைத்து, கொல்லியவெழுந்த-கொல்ல வெழுந்த, கூற்றில்-யமன்போல், கொடிய-கொடியவாகிய, வெம்பகழி - வெவ்வியபாணங்களை, தூவி-விட்டு, மல்லடு-மற்போர்செய்கின்ற, தோளும்-புயங்களிலும், மார்பும்-மார்பிலும், வழி-வழிகின்ற, பெருங்குருதியோடும்-அதிக உதிரத்தோடும், வில்லவன்-சேரமான், வெருவியோட - அஞ்சியோடும்படி, வெஞ்சமம் - வெவ்விய போரை, உடற்றினன்-செய்தான். எ-று.

(போ - ரை.) வில்லவனாயினும் நளன் வில்லுக்குத் தோற்றோடினமை தோன்றச் சேரமானுக்குப் பலபேரிருக்க வில்லவனென்றார். வில்லவன்-விற்கொடியை யுடையவன். (சுடு)

[இதனால் புட்கரத்தீவரச னெதிர்த்தல்
சொல்லப்படுகின்றது.]

திறங்கிளர்வயிரப்பைம்பூ ணிடதர்கோன்றொடுத்தகோலிற்
கறங்கெனத்திரியும்வெய்ய கலினமான்றடந்தேர்வீழ
மறங்கிளர்பரிதிவேலு மானமுந்துறந்துநாணற்
புறங்கொடுத்திரியல்போனான் புட்கரத்தீவின்வேந்தன்.

(ப - ரை.) புட்கரத்தீவின்வேந்தன்-புட்கரத்தீவையாளுமரசனானவன், திறங்கிளர்-ஒளிவிளங்குகின்ற, வயிரப்பைம்பூண்-வச்சிராபரணத்தையுடைய, நிடதர்கோன்-நளமகாராஜன், தொடுத்த-பிரயோகஞ்செய்த, கோலில் - பாணத்தால், கறங்கெனத்திரியும்-காற்றாடிபோற்றிரிகின்ற, வெய்ய-வெவ்விய, கலினமான்-கடிவாளம்பூண்ட குதிரைகட்டிய, தடம்-விசாலம் பொருந்திய, தேர்வீழ-இரதம்விழ, மறங்கிளர்-மறமிகுந்த, பரிதிவேலும்-சூரியனையொத்த வேற்படையையும், மானமும்-அபிமானத்தையும், துறந்து - விட்டு, நாணல்-

நாணத்தால், புறங்கொடுத்து - முதுகுகாட்டில், இரியல்போனான்-ஓடிப்போனான். எ-று.

(போ - ரை) மானமும் ஒரு ஆபரணம்போலணிபவனாதலில் புட்கரத்தீவில் வேந்தைவேலு மானமுந் துறந்துபோனா னென்றார். "மானவருங் கலனீக்கி,, என்றார்பிறரும். (௪௬)

[இதனால் சாகத்தீவரசன் எதிர்த்தல் சொல்லப் படுகின்றது.]

## கலி விருத்தம்.

பாகடுவெந்திறற் பருமயானைமேல்
வேகவெங்கலினமா வெள்ளஞ்சூழ்வரச்
சாகத்தீவுக்கிறை சமரினூர்ப்பொடு
தோகையர்கண்ணெனப் பகழிதூவினான்.

(ப-ரை.) பாகு-பாகனை, அடு-கொல்லுகின்ற, வெந்திறல்-வெவ்விய திறலையுடைய, பருமயானைமேல்-ஒப்பனைசெய்த யானைமேல், வேகம்-வேகத்தையுடைய, வெங்கலினமா வெள்ளம் - வெள்ளிய கடிவாளம்பூண்ட குதிரைக்கூட்டங்கள், சூழ்வர-தன்னைச்சூழ்ந்துவரும்படி, சாகத்தீவுக்கிறை-சாகத்தீவுக்கரசனானவன், சமரினூர்ப்பொடும் - யுத்தத்திலுாவாரத்துடன், தோகையர் கண்ணென - மாதர்விழிகள்போல், பகழி - பாணங்களை, தூவினான் - சிந்தினான். எ-று.

(போ - ரை.) மாதர்கண்கள் பாணங்களினுங் கொடியனவாதலால் தோகையர் கண்ணெனப் பகழிதூவினானென்றார். பாகுஎன்னும் பண்புப்பெயர்பண்பிக்காயிற்று [இது உவமேயமாகிய கண்களை உவமானமாகிய பாணங்களுக்கு ஒப்புமைசொல்லலால் எதிர்மறையணி.] (௪௭)

துணங்கையிட்டலகைக டுள்ளியார்த்தெழ
வணங்கெயிற்றரவென வழலும்வாளிகள்
வணங்குவிற்கால்வளைத் தெய்துமாற்றினா
னிணங்கமழ்குருதிவே னிடதர்வேந்தனே.

(ப - ரை.) துணங்கையிட்டு - கையைக்கொட்டி, அலகைகள் - பேய்கள், துள்ளி - குதித்து, ஆர்த்து-ஒலித்து, எழ - எழும்ப, அணங்கு-வருத்தத்தைச்செய்கின்ற, எயிற்று - பல்லையுடைய, அரவென - சர்ப்பம்போல், அழலும் - சுடுகின்ற, வாளிகள் -பாணங்களை, வணங்கு-வளைகின்ற, வில்-வில்லை, கால்வளைத்து - காலினூன்றிவளைத்து, எய்து - பிரயோகஞ்செய்து, மாற்றினான் - நீக்கினான், நிணங்கமழ் - கொழுப்புநாறுகின்ற, குருதிவேல் - உதிரந்தோய்ந்த வேற்படையையுடைய, நிடதர்வேந்தன் - நளமகாராசன் எ-று. ஏகாரம் - ஈற்றசை.

(போ - ரை.) இப்போரில் நமக்கு நல்லவுணவு கிடைக்குமென்றுஅதிக மகிழ்ச்சியால் பேய்கள் கர்ச்சித்தலால் துணங்கையிட்டலகைக டுள்ளியார்த்

தெழ வென்றார். அரவைப்பாணத்துக்கும் எயிற்றை அதன் முனைக்கும் உவமை யாகக்கொள்க. (சஅ)

பாற்றினந்தொடர்வது பகைவருன்சுவைத்
தூற்றிருந்திடையறு துதிரங்கால்வது
கூற்றொடுந்தோழமை கொள்வதாயதோர்
மாற்றருங்கொடியவேன் மன்னன்வாங்கினான்.

(ப - ரை.) பாற்றினந்தொடர்வது - பருந்துக்கூட்டங்கள் தொடர்வதும், பகைவர் - சத்துருக்களுடைய, ஊன் - மாமிசத்தை, சுவைத்து - மென்று, ஊற்றிருந்து - ஊற்றாகவிருந்து, இடையறுது - ஒழியாமல், உதிரங்கால்வது - உதிரங்கக்குவதும், கூற்றொடும் - யமனுடன், தோழமை கொள்வதாயது - சிநேகங்கொள்வதாகியதுமாகிய, ஓர்-ஒரு, மாற்றரும்-தடுப்பதற்கரிய, கொடியவேல் - கொடியவேற்படையை, மன்னன்-நளனானவன், வாங்கினான் - கைக்கொண்டான். எ-று.

(போ - ரை.) ஒருவர்மேல்விட்டார் அதன்கொடுமைசொல்லவேண்டுவதில்லை யென்பதுதோன்ற சுபாவத்தில் இம்முக்குணங்களையுமுடைய வேலென்றார். (சகூ)

அயிலெடுத்தெறிதலு மடர்க்குமொன்னலார்
வயிறெறிதவழ்ந்தது வயிரவாட்படை
செயிறரவேந்திய சாகத்தீவிறை
யுயிர்துறந்தந்தக னுலகம்புக்கதே.

(ப - ரை.) அயிலெடுத்தெறிதலும் - வேற்படையை யெடுத்துவீசியவளவில் அடர்க்கும் - பொருகின்ற, ஒன்னலார் - பகைவருடைய, வயிறு-வயிரானது, எரி - நெருப்பினால், தவழ்ந்தது - தவழ்ந்திடப்பட்டது, வயிரவாட்படை - வச்சிரவாளை, செயிரற - குற்றமற, எந்திய - தாங்கப்பெற்ற, சாகத்தீவிறை - சாகத்தீவுக்கரசனுடைய, உயிர் - உயிரானது, துறந்து - உடலைவிட்டு, அந்தகனுலகம் - யமலோகத்தில், புக்கது - புகுந்தது, எ-று.

(போ - ரை.) வயிறெரி தவழ்தலால் அடர்க்குமொன்னல ரென்றது, சாகத்தீவரச னோடுவந்து எதிர்த்தவரை யெனக்கொள்க. நிராயுதனாகியிறந்திலனென்பதுதோன்ற வயிரவாட்படை செயிரற வேந்தியசாகத்தீவிறை யென்றார். (ருo)

இதுமுதல் லேழுபாட்டால் காம்பிலிதேசத்தரசனெதிர்த்தல் சொல்லப் படுகின்றது.

தூம்புடைக்கரமலை யெருத்திற்றோன்றுபு
காம்பிலிக்கரசன் வில்வாங்கிக்காயகணை
தேம்பொதிசெழுமலர் தெரியன்மார்பினன்
வாம்பரித்தேர்மிசை மழையிற்றாவினான்.

(ப - ரை.) தூம்புடை - துவாரத்தை யுடைய, கரமலை-கையையுடைய மலைபோன்ற யானையினது, எருத்தில் - பிடரியின்மேல், தோன்றுப -

தோன்றி, காம்பிலிக்கரசன் - காம்பிலிநாட்டுக் கரசனானவன், வில்வாங்கி - வில்லைவளைத்து, காய்-சொல்லாநின்ற, கணை-பாணங்களை, தேம் - வாசனை, பொதி-நெருங்கிய, செழுமலர்-செழுமையுள்ள மலராற்றொடுத்த, தெரியல்-மாலையையணிந்த, மார்பினன்-நளனது, வாம்-தாவுகின்ற, பரி-குதிரைகட்டிய, தேர்மிசை-தேரின்மேல், மழையில்-மேகம்போல், தூவினன் - பிரயோகித்தான். எ-று.

(போ - ரை.) துதிக்கை யொன்றுதவிர மற்றையுடல் மலைபோலிருத்தலால் யானையைக் கரமலையென்றார், காம்பிலிதேசத்தரசன் நளன்தேரின் மேற்பாணந் தூவினனெனக்கூட்டுக. (௯௧)

சிலையுயிர்த் துயிர்ப்பலி கவருந் திண்கணை
கொலைவடிவேலினன் றுரப்பக் குஞ்சர
மலையெனக்கவிழ்தனு மடங்கலேறெனப்
புலவுவாளொடுமவன் புவியிற்பாய்ந்தனன்.

(ப - ரை.) சிலையுயிர்த்து - வில்லால் விடப்பட்டு, உயிர்ப்பலி கவரும்-உயிராகிய வுணவை யுண்கின்ற, திண்கணை - வலிமைபெற்ற பாணங்களை, கொலைவடிவேலினன்-நளனானவன், துரப்ப-செலுத்த, குஞ்சரம்-(எதிர்வந்தவன்) யானையானது, மலையெனக்கவிழ்தலும்-மலைபோற்கவிழ்ந்து வீழ்ந்தவளவில், மடங்கலேறென-சிங்கவேற்றைப்போல், புலவு-புலானாற்றத்தையுடைய, வாளொடும்-வாட்படையுடன், அவன்-அவ்வரசனானவன், புவியில்-பூமியிலே, பாய்ந்தனன்-குதித்தனன். எ-று.

(போ - ரை.) தன்னைவிட்டுத் தன் தேரின்மேற் பாணம்விடுத்தலால் நளனும் அவ்வரசனேறிவந்த யானைமேற் பாணம்விடுத்து அதைக் கொன்றானென்க. [மலையெனவெனலா லுவமையணி.] (௯௨)

வான்மயிர்க்கேடகம் பற்றிவாள்விதிர்த்
தூர்சினக்களிற்றணி யுழக்கியொய்யெனப்
போர்முகத்துரறிவெம் புலியின்போத்தெனச்
சாரிகைதிரிந்தனன் றறுகணாளனே.

(ப - ரை.) வார்-நெடிய, மயிர்க்கேடகம் - மயிரையுடைய தோற்கேடகத்தை, பற்றி-பிடித்து, வாள்விதிர்த்து- வாளையசைத்து, ஊர் - நடக்கின்ற, சினம்-கோபத்தையுடைய, களிற்றணி-யானைவகுப்பை, உழக்கி-கலக்கி, ஒய்யென-விரைவில், போர்முகத்து-யுத்தமுகத்தில், உரறி-கர்ச்சித்து, வெம்புலியின்போத்தென-வெய்யபுலிப்போத்துப்போல், சாரிகை திரிந்தனன்-வட்டமாகத் திரிந்தான், தறுகணாளன் - அஞ்சத்தக்கவைகட்கு அஞ்சாத காம்பிலிதேசத் தரசனானவன். எ-று.

(போ - ரை.) பாணங்கள் தைப்பினும் அழிவிலாதிருத்தற்கு மயிருள்ள தோலினாற் செய்வதுபற்றி மயிர்க்கேடகமென்றார். ஒருகுற்றஞ் செய்த

(ப - ரை.) மையகூந்தல்-கறுத்த கூந்தலையுடைய, ஓர்மங்கை-ஒரு மங்கையானவள், அசோகினியில்-அசோகமரத்தினிடத்தில், எய்துறுது-அடையக்கூடாமல், உயர்-உயரத்திலுள்ள, போதினை - புஷ்பத்தை, எறபு - எறி, கொய்துமென்று-பறிப்போமென்று, குறித்து - நினைத்து, அடிவைத்தலும்-பாதத்தை வைத்தமாத்திரத்தில், செய்ய-சிவந்த, போது-புஷ்பங்கள், சினைதொறும்-கிளைகள்தோறும், பூத்த-மலர்ந்தன. எ-று. (ரு)

கோத்தமேகலைக் கோதையர் நோக்கலிற்
பூத்தசொசிந்த திலகமென்போதினிற்
றேத்துளிக்கமர் தெள்விளிவண்டினம்
பாத்தகண்ணிழல் பாய்ந்தனபோலுமே.

(ப - ரை.) கோத்த-கோவையிட்ட, மேகலை-மேகலாபரணத்தையுடைய, கோதையர்-மங்கையர்கள், நோக்கலின்-பார்த்தவளவில், பூத்து - மலர்ந்து, ஒசிந்த-வளைந்த, திலகம்-மஞ்சாடிமரத்தினுடைய, மெல் - மிருதுவாகிய, போதினில்-புஷ்பத்தில், தேத்துளிக்கு-தேனினதுதுளிக்கு, அமர் - பொருந்திய, தெள்விளி-தெள்விளிராகத்தைப்பாடுகின்ற, வண்டினம் - வண்டுக்கூட்டங்கள், பார்த்த-பார்த்ததாகிய, கண்-கண்களினுடைய, நிழல்-சாயல்கள், பாய்ந்தனபோலும்-பரவினபோலும். எ - று. (சு)

காசுலாமுலைக் கன்னியர்புல்லலும்
பாசிலைக்குர வீன்றபைம்போதினின்
மூசுவண்டின மொய்த்ததுவெம்முலைப்
பூசுநானம் பொறித்ததுபோலுமால்

(ப - ரை.) காசுலாம்-ரத்நாபரணங்கள் தங்கிய, முலை - ஸ்தனங்களையுடைய, கன்னியர்-மங்கையர்கள், புல்லலும்-தழுவினவளவில், பாசிலை-பசுமை பொருந்திய இலைகளையுடைய, குரவு-குராமரமானது, ஈன்ற-பெற்ற, பைம்போதினில்-பசியபுஷ்பத்தில், மூசு-நெருங்கிய, வண்டினம் - வண்டுக்கூட்டமானது, மொய்த்தது-மொய்த்துக்கொண்டது, வெம்-விருப்பத்தைக்கொடுக்கின்ற, முலை-ஸ்தனங்களில், பூசு-பூசபட்ட, நானம் - கஸ்தூரி, பொறித்தது போலும்-பூசியதுபோலும். எ-று. (எ)

வஞ்சிநுண்ணிடை மாதர்மிதித்தலிற்
செஞ்சவேதளி ரீன்றசெயலைக
ளஞ்செஞ்சீறடி தோய்ந்துவரக்கெறி
பஞ்சியுண்டொளிர் பான்மைகடுக்குமே.

(ப - ரை.) வஞ்சி-கொடியையொத்த, நுண்-நுட்பமாகிய, இடை-மருங்கையுடைய, மாதர்-மடவார், மித்தலில்-மிதித்தலினால், செஞ்சவே-செம்மை

யாக, தளிர்-தளிர்களை, ஈன்ற-தந்த, செயலைகள்-அசோகவிருக்ஷங்கள், அம்-அழகிய, செம்-சிவந்த, சீறடி-அம்மடவார் சிற்றடியில், தோய்ந்த-பூசிய, அரக்கெறி-செந்நிறத்தை வீசாநின்ற, பஞ்சி-செம்பஞ்சியை, உண்டு-தம்மிடத்திற்கொண்டு, ஒளிர்-பிரகாசிக்கிற, பான்மை-தன்மையை, கடுக்கும்-ஒக்கும், எ-று. (அ)

அரவமேகலையாயிழையார்க்குயர்
குரவம்பாவைகொடுத்தகொழுதிமென்
முருகுலாமளிமொய்த்தகடம்பினம்
பரிவினுடவெண் பந்துகொடுத்தவே.

(ப - ரை.) அரவம்-சத்தியாநின்ற, மேகலை-மேகலாபரணத்தையுடைய, ஆயிழையார்க்கு-மாதருக்கு, உயர்-உயர்ந்த, குரவம்-குராவிருக்ஷம், பாவை-காயாகிய பதுமைகளை, கொடுத்த-கொடுத்தன, கொழுதி-கோதி, மெல்-மிருதிபொருந்திய, முருகு-தேனினிடத்தில், உலாம்-உலாவுகின்ற, அளி-வண்டுகள், மொய்த்த-நெருங்கிய, கடம்பினம்-கடப்பவிருக்ஷங்கள், பரிவின்-விருப்பத்துடனே, ஆட-ஆட, வெள்-வெண்மையாகிய, பந்து-காயாகியபந்தை, கொடுத்த-கொடுத்தன. எ-று. (கூ)

மாங்குயிற்குரல் கேட்டுமலருறுக்
கொங்கமாதர் குதலையைக்கேட்டலுங்
தேங்கொள்போது சினைதொறும்பூத்தலா
லாங்கதற்கிணை யோகுயிலார்ப்பதே.

(ப - ரை.) மா-மாமரத்திலிருக்கிற, குயிற்குறல்-குயிலின்குரலை, கேட்டு-கேட்டு, மலருறு-மலராத, கோங்கம்-கோங்கவிருக்ஷமானது, மாதர்-மடவாருடைய, குதலையை-குதலைச் சொல்லை, கேட்டலும்-கேட்டவளவில், தேங்கொள-தேனைக்கொண்ட, போது-புஷ்பங்களை, சினைதொறும்-சினைகள்தோறும், பூத்தலால்-புஷ்பித்தலால், ஆங்கு-அவ்விடத்தில், அதற்கு-அம்மடவார் சொல்லுக்கு, குயிலார்ப்பது-குயில்கூவுவது, இணையோ-ஒப்பாகுமோ [ஆகாது.] எ-று. (கo)

காவிலன்புடைக்காளை யோர்தார்குழற்
பூவைகண்ணுறு பூந்துகள்மாற்றலு
மாவியென்ன வருகுறைமாற்றவள்
காவியங்கட் கடைகள்சிவந்தவே.

(ப - ரை.) காவில்-பூஞ்சோலையில், அன்புடை-ஆசையையுடைய, காளை-புருஷனானவன், ஓர்-ஒரு, தார்-மாலையணிந்த, குழல்-கூந்தலையுடைய, பூவை-மனையாளது, கண்ணுறு-கண்ணிலேபடிந்த, பூந்துகள்-மகரந்தப்பொடியை, மாற்றலும்-துடைத்தமாத்திரத்தில், ஆவியென்ன-தன்னுயிரைப்

போல, அருகுறை-பக்கத்திலிருந்த,மாற்றவள்-சக்களத்தியினுடைய, காவி-நீலோற்பலத்தை யொத்த, அம்-அழகிய, கடகடைகள்-கடைக்கண்கள், சிவந்த-சிவந்தன. எ-று.

(போ - ரை.) தன்கணவன் சக்களத்தியிடத்தி னன்பினன் என்றறிந்து கோபித்தாளென்க-[பூந்துகண்மாற்றலாகிய காரணமோரிடத்தும் கண்சிவத்தலாகிய காரியம் மற்றோரிடத்தும், கூறலால் தொடர்பின்மையணி.]

வாங்குவிற்கை வரைபுரைதோளினன்
றேங்கொள்வண்டு திளைப்பவடுவுறுங்
கோங்கரும்பினைநோக்கியோர்கோல்வளை
வீங்குவெம்முலை நோக்கலும்வெள்கினள்.

(ப - ரை.) வாங்குவில்-வளைந்தவில்லை, கை-கையிலேயுடைய, வரைபுரை-மலையையொத்த, தோளினன்-தோளையுடைய ஒருபுருஷன்,தேங்கொள்-தேனையுண்ணுகிற, வண்டு-வண்டுகள், திளைப்ப-பொருந்த, வடுவுறும்-வடுவுண்ட, கோங்கு-கோங்குமரத்தினது, அரும்பினை-அரும்பை, நோக்கி-பார்த்து, ஓர்-ஒரு, கோல்வளை-மடந்தையினது, வீங்கு-பருத்த, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலை-ஸ்தனங்களை, நோக்கலும்-பார்க்குமளவில், வெள்கினள்-அவள் வெட்கப்பட்டாள். எ - று.

(போ - ரை.) வடுவுண்ட கோங்கரும்பையும் நகக்குறியுண்ட ஸ்தனங்களையும் ஒப்பாக்கிப் பார்க்குமளவில் அதுகண்டு நாணினளென்க. (௧௨)

கோதைமார்பனோர் கோள்வளைகாதினில்
மாதர்நீலம் புனைதலுமாற்றவள்
ணோதகும்படி நோக்கியநோக்கவள்
காதிலும்புனைகாவிநிகர்த்தவே.

(ப - ரை.) கோதை-மாலையணிந்த, மார்பன்-மார்பையுடையவன், ஓர்-ஒரு, கோல்வளை-மாதினது, காதினில்-காதிலே, மாதர் - அழகிய, நீலம் - நீலோற்பலத்தை, புனைதலும்-சூட்டியவளவில், மாற்றவள்-சக்களத்தி, நோதகும்படி-நோகும்படி, நோக்கிய-பார்த்த, நோக்கு-பார்வையானவை, அவள்-அச்சக்களத்தியினது, காதிலும்-காதிலேயும், புனை-சூடிய, காவி-நீலோற்பலத்தை, நிகர்த்த-ஒத்திருந்தன. எ-று. (௧௩)

கோலநாண்மலர் கொய்பவலங்கையி
லோவிடுஞ்சுரும் போச்சவும்போகில
மாலுழுந்து மறிந்துவிழுவன
நீலவொண்கழுங் காடனிகர்க்குமால்.

(ப - ரை.) கோலம்-அழகுபொருந்திய, நாண்மலர்-புதியபுஷ்பங்களை, கொய்பவள்-பறிக்கின்றவளது, அங்கையில்-உள்ளங்கையில், ஒலிடும்-சத்திக்கின்ற, சுரும்பு-வண்டுகள், ஓச்சவும்-ஓட்டவும், போகில-போகின்றிலவாய், மாலுழந்து-மயக்கமுற்று, மறிந்து-மறியட்டுமெறிபட்டு, விழுவன - அக்கையில் விழுகின்றனவாகி, நீலம்-கறுத்த, ஒள் - பிரகாசம்பொருந்திய, கழங்காடல்-அம்மனை ஆடலை, நிகர்க்கும்-ஒக்கும். எ-று. (௧௪)

போதுகொய்படலம்-முற்றிற்று.

ஆ செய்யுள் - ௬௧௭

# புனல்விளையாட்டுப் படலம்.

[இப்படலத்தால் போதுகொய்தவர்கள் பின்பு அக் காலத்துக்கேற்பப் புனலில் விளையாடல் சொல்லப்படுகின்றது.

கலிவிருத்தம்.

இணரவிழ்பொதும்பரி னிளைஞர்யாவரும்
புணர்முலைமகளிரும் போதுகொய்தபின்
றுணையொடுமடவன மிரியத்தூநிற
மணிதெளித்தனையநீர் வாவியெய்தினர்.

(ப - ரை.) இணர்-பூங்கொத்துகள், அவிழ்-விரியாநின்ற, பொதும்பரின்-சோலையில், இளைஞர்யாவரும் - யௌவன புருஷர்களெவர்களும், புணர்-நெருங்கிய, முலை-ஸ்தனங்களையுடைய, மகளிரும்-மாதர்களும், போது - புட்பங்களை, கொய்தபின்-பறித்தபின்பு, துணையொடும்-பெட்டையுடனே, மடவனம்-இளவன்னங்கள், இரிய-ஓட, தூ-வெண்மையாகிய, நிறம் - நிறத்தையுடைய, மணி-முத்தை, தெளித்தனைய-பரப்பியதையொத்த, நீர் - சலத்தையுடைய, வாவி-தடாகத்தை, எய்தினர்-அடைந்தார்கள். எ-று. (௧)

வாணெடுங்கண்ணியர் வாவியெய்தலுஞ்
சேணிடைநேமியம் புட்கள்செல்லுதல்
யாணர்மென்கோங்கரும் பிடையவீங்கிய
பூண்முலைக்குடைந்தயல் போதல்போன்றதே.

(ப - ரை.) வாள்-வாளையொத்த, நெடுங்கண்ணியர் - நீண்டகண்களையுடைய மாதர்கள், வாவி-தடாகத்தில், எய்தலும்-அடையவும், சேணிடை-ஆகாயத்தின்கண், நேமியம்புட்கள்-சக்கரவாகப்பக்ஷிகள், செல்லுதல் - போத

லானது, யாணர்-புதுமைபொருந்திய, மெல் - மிருதுவாகிய, கோங்கரும்பு-கோங்கரும்புகள், இடைய-தோற்றுப்போக, வீங்கிய-பருத்த, பூண்-ஆபரணத்தை யணிந்த, முலைக்கு-ஸ்தனங்களுக்கு, உடைந்து-தோற்று, அயல்-புறத்தே, போதல்-போய்விடுதலை, போன்றது-ஒத்திருந்தது, எ-று. (உ)

மங்கையர்செறிதலு மல்குநீரிடைப்
பங்கயச்செழுமலர் தாழ்தல்பாவையர்
திங்கள்வாண்முகத்தெழிற் குடைந்துதேங்கமழ்
பொங்குதண்புனலிடை யொளித்தல்போலுமால்.

(ப - ரை.) மங்கையர்-மாதர்கள், செறிதலும்-அடைதலும், மல்கு-நிறைந்த, நீரிடை-சலத்தினிடத்தில், பங்கயம்-தாமரையினது, செழுமலர்-செழித்தபுஷ்பங்கள், தாழல்-மூழ்குதல், பாவையர்-மாதர்களுடைய, திங்கள்-சந்திரனையொத்த, வாள்-பிரகாசம்பொருந்திய, முகத்தெழிற்கு-முகத்தினது அழகிற்கு, உடைந்து-தோற்று, தேம்-வாசனை, கமழ்-பரிமளியாநின்ற, பொங்கு-மிகுந்த, தண்புனலிடை-குளிர்ந்த நீரினிடத்தில், ஒளித்தல்போலும் - ஒளித்துக்கொள்ளுதலையொக்கும். எ-று. (ங)

வடுவகிர்நெடுங்கணார் வார்கொள்வெம்முலை
குடைபுனல்வாவியுட் குளித்தலிந்திரன்
படர்சிறையரிவதற் கஞ்சிப்பாய்திரைக்
கடலிடைமால்வரை யொளித்தல்காட்டுமால்.

(ப - ரை.) வடுவகிர்-மாவடுவினது பிளப்பையொத்த, நெடுங்கணார்-நெடியகண்களையுடைய மாதர்களது, வார்கொள்-கச்சையணிந்த, வெம்-விருப்பத்தைத்தரும், முலை-ஸ்தனங்கள், குடை-ஆடாநின்ற, புனல்-சலத்தையுடைய, வாவியுள்-தடாகத்தினுள், குளித்தல்-மூழ்குதல், இந்திரன்-தேவேந்திரன் படர்-விரிந்த, சிறை-இறகை, அரிவதற்கு-அறுத்தற்கு, அஞ்சி-பயந்து, பாய்-பாயாநின்ற, திரை-அலையையுடைய, கடலிடை - சமுத்திரத்தினிடத்தில், மால்வரை-உயர்ந்தமலைகள், ஒளித்தல்-ஒளித்துக்கொள்ளுதலை, காட்டும் - காண்பிக்கும். எ-று. ஆல்-அசை. (ச)

விரைகமழ்சுண்ணமெய் திமிர்ந்துமென்குழற்
றெரியலின்வீக்குபு தெய்வச்சாந்தணி
வரியமுலைதோன்றிட மகளிர்நீந்துத
னிரைமணிக்குடத்தினு ணீந்தல்போலுமால்.

(ப - ரை.) விரைகமழ்-வாசனைபரிமளியாநின்ற, சுண்ணம்-கந்தப்பொடிகளை, மெய்திமிர்ந்து-சாரத்திற்பூசிக்கொண்டு, மென்குழல்-மிருதுவாகியகூந்தலை, தெரியலின்வீக்குபு-மாலையினாலேகட்டி, தெய்வம்-தெய்வீகமாகிய, சா

தணி-சந்தனத்தையணிந்த, வரி-கோலத்தையுடைய, முலை-ஸ்தனங்கள், தோன்றிட-தோற்ற, மகளிர் - மாதர்கள், நீந்துதல் - நீந்தலானது, நிரை - வரிசையாகிய, மணிகுடத்தினுல் - ரத்நகும்பத்தினுல், நீந்தல்போலும்-நீந்துதலையொக்கும், எ-று. (௫)

படவரவல்குலார் முலையிற்பாய்புன
லுடைதிரைக்கரத்தினுற் பொருதலொண்டிறற்
குடமுனிகருங்கடல்குடித்தவாற்றினுற்
புடைதிரண்மணிக்குடம் புடைத்தல்போன்றதே.

(ப - ரை.) படவரவல்குலார் - பாம்பின்படத்தையொத்த நிதம்பத்தையுடையமாதரது, முலையில் - ஸ்தனகளின்மீது, பாய் - பாயாநின்ற, புனல்-சலமானது, உடை - உடையாநின்ற, திரைக்கரத்தினுல் - அலையாகியகையினுல், பொருதல் - மோதுதல், ஒண்டிறல்-பிரகாசமாகியவன்மையையுடைய, குடமுனி - அகஸ்தியர், கருங்கடல் - கருங்கடலை, குடித்தவாற்றினுல் - பானம்பண்ணியநெறியினுல், புடை - பக்கங்களில், திரள் - திரண்ட, மணிக்குடம் - ரத்தினக்குடத்தை, புடைத்தல்போன்றதே - அடித்தலையொத்திருந்தது, எ-று. (௬)

சிற்றிடையொருத்திதன் றிலகவாண்முகத்
தெற்றுநீர்காதல ணிறைப்பக்காண்டலு
மற்றதுபொறுக்கலா துயிர்த்துமாழ்கிய
முற்றிழைமழைக்கணீர் முகனிறைந்தவே.

(ப - ரை.) சிற்றிடைய - சிறிய இடையையுடைய, ஒருத்திதன் - ஒருமாதினது, திலகம் - திலதமணிந்த, வாண்முகத்து - பிரகாசம்பொருந்தியமுகத்தினிடத்தில், எற்று - மோதுகின்ற, நீர்-ஜலத்தை, காதலன்-புருஷன், இறைப்ப - இறைக்க, காண்டலும் - பார்த்தவளவில், அது - அதை, பொறுக்கலாது - பொறுக்கமாட்டாமல், உயிர்த்து - பெருமூச்சிவிட்டு, மாழ்கிய-மயங்கிய, முற்றிழை - சக்களத்தியினது, மழைக்கணீர் - குளிர்ச்சிபொருந்திய கண்ணீரானது, முகம் - முகத்தில், நிறைந்த - நிறம்பின, எ-று. மற்று ஏ அசைகள். (௭)

நாள்விழவயர்ந்தவ ணாணிக்காதலன்
றோளணிசாந்தநீர் தோய்ந்துநீக்கலும்
வாளுகிருழுதமெய் வடுககண்டேங்குரு
மீளவுமுளநனி வெள்கினுளரோ.

(ப - ரை.) நாள் - புதிதாக, விழவயர்ந்தவன் - கலியாணம்பண்ணப்பட்டவள், நாணி - வெட்கப்பட்டு, காதலன் - புருஷனது, தோளணி - தோள்களினின்றுமணந்த, சாந்தம் - சந்தனத்தை, நீர்தோய்ந்து - நீரிற்குளிர்ந்து, நீக்கலும் - போக்கியவளவில், வாள் - போன்ற, உகிர்-நகங்கள், உழுத-கிழி

த்த, மெய் - சரீரத்தில், வடுக்கண்டு - குறிகளைப்பார்த்து, எங்குறு - இறங்கி, மீளவும் - மறுபடியும், உளம் - மதில், கனி - மிகவும், வெள்கினாள் - வெட்க முற்றாள், எ-று. அரோ - அசை. (அ)

இன்னணமாடுத னோக்கியெய்திய
மன்னவர்மன்னனு மருங்குதேய்த்துயர்
பொன்னவிரிளமுலைப் பூவைதன்னொடுந்
துன்னுநீர்ப்போர்த்தொழி றொடங்கினனரோ.

(ப - ரை.) இன்னணம் - இத்தன்மையாக, ஆடுதல்-விளையாடுதலை,நோக்கி - பார்த்து, எய்திய - அத்தடாகத்தி னிடத்திலேவந்த, மன்னவர்மன்னனும் - அரசர்க்கரசனாகிய நளமகாராசனும், மருங்குதேய்த்து - இடையைத் தேய்த்து, உயர் - உயர்ந்த, பொன்னவிர்-தேமல்பிரகாசியாநின்ற, இள-இளமைபொருந்திய, முலை-ஸ்தனங்களையுடைய, பூவைதன்னொடும் - தமயந்தியினோடும், துன்னு - நெருங்கிய, நீர்ப்போர்த்தொழில் - சலக்கிரீடையை, தொடங்கினன் - ஆரம்பித்தான், எ-று. அரோ - அசை. (கூ)

சுண்ணமென்சிவிறிநீர் தூரக்குமெந்திர
மெண்ணிலதாங்கிவே ளனையவேந்தலைப்
பெண்ணலங்கனிந்தொளிர் பேதைதன்னொடு
மண்ணியமணியனார் வளைந்திட்டாரரோ.

(ப - ரை.) சுண்ணம் - கந்தப்பொடிகளையும், மெல் - மிருதுவாகிய சிவிறி - துருத்தியையும், நீர்தூரக்குமெந்திரம்-நீரிறைக்குங்குழல்களையும்,எண்ணில - அளவில்லாமல், தாங்கி - எடுத்துக்கொண்டு, வேளனைய - மன்மதனையொத்த, ஏந்தலை - நளமகாராஜனை, பெண்ணலம் - பெண்தன்மை, கனிந்து - பழுத்து, ஒளிர் - பிரகாசியாநின்ற, பேதைதன்னொடும் - தமயந்தியோடுகூட, மண்ணிய - கழுவிய, மணியனார் - ரத்நத்தையொத்தபெண்கள், வளைந்திட்டார் - வளைந்துகொண்டார்கள், எ-று. (கo)

துன்னிருங்கூந்தலார் தூறந்ததாரைகண்
மன்னவன்றோள்களிற் பாய்தல்வானிடை
மின்னினங்காரோடு மிடைந்துமென்புனல்
பொன்னெடுங்குன்றின்மேற் பொழிதல்போன்றதே.

(ப - ரை.) துன்னு - நெருங்கிய, இரு - பெருமைபொருந்திய, கூந்தலார் - கூந்தலையுடையமாதர்கள், தூரந்த - தூவிய, தாரைகள் - சலதாரைகள், மன்னவன்-நளமகாராசனுடைய, தோள்களில் - புசங்களில், பாய்தல்-வீழ்தலானது, வானிடை - ஆகாசத்தினிடத்தில், மின்னினம் - மின்னற்கூட்டம், காரொடும் - மேகத்துடனே, மிடைந்து - நெருங்கி, மெல் - மிருவா

இயசலத்தை, பொன்னெடுங்குன்றின்மேல் - நெடிய மகாமேருவின்மீது, பொழிதல்போன்றது - பொழிதலையொத்திருந்தது, எ-று. (கக)

அரசர்கோன்குலிகநீர்த் தாரையாயிரஞ்
சுரிகுழன்மடந்தையர் முகத்திற்றாவுதன்
முருகவிழ்தாமரை மலரின்மோட்டிளம்
பரிதிசெங்கதிர்க்குழாம் பாய்தல்போன்றதே.

(ப - ரை.) அரசர்கோன் - இராசர்திராசனாகிய நளமகாராசன், குலிகநீர் - இங்குலிகநீரானது, தாரையாயிரம் - ஆயிரந்தாரைகளை, சுரி - சுழித்த, குழல் - கூந்தலையுடைய, மடந்தயர்-மாதருடைய, முகத்தில்- முகங்களில் தாவுதல் - இறைத்தலானது, முருகு - தேன், அவிழ் - விரியாநின்ற, தாமரைமலரின் - தாமரைபுஷ்பத்தினிடத்தில், மோட்டிளம் - மிகுந்த இளமை பொருந்திய, பரிதி - சூரியனுடைய, செங்கதிர்க்குழாம் - சிவந்தகிரணக்கூட்டங்கள், பாய்தல் - வீழ்தலை, போன்றது - ஒத்திருந்தது, எ-று.

ஏ-ஈற்றசை. (கஉ)

விரைகமழ்சுண்ணமும் வீசுசாந்தமு
மரசனாண்டெறியலு மாற்றலாமையாற்
குரைகடல்குளித்திடு மின்னிற்கோதைய
ருரவுநீர்வாவியி லொளித்திட்டாரரோ.

(ப - ரை.) விரை - வாசனை, கமழ் - பரிமளியாநின்ற, சுண்ணமும்- கந்தப்பொடிகளையும், வீசு - வாசனையை வீசாநின்ற, சாந்தமும் - சந்தனத்தையும், அரசன் - நளமகாராஜன், ஆண்டு - அவ்விடத்தில், எறிதலும்-வீசவும், ஆற்றலாமையால் - பொறுக்கமாட்டாமையினால், குரை-சத்தியாநின்ற, கடல் - சமுத்திரத்தில், குளித்திடும் - மூழ்குகின்ற, மின்னியில் - மின்னலைப்போல், கோதையர் - மாதர்கள், உரவு - விரிந்த, நீர் - சலத்தையுடைய, வாவியில் - தடாகத்தில், ஒளித்திட்டார் - ஒளித்துக்கொண்டார்கள், எ-று.

அரோ - அசை. (கங)

வாமமேகலையினார் வளர்ந்தவெம்முலை
நேமியம்புள்ளென நீருட்காட்டுவார்
காமர்வாண்முகத்தினைக் கமலஞ்சேர்த்தித்தண்
டாமரையென மணித் தடத்தின் மூழ்குவார்.

(ப - ரை.) வாமம் - அழகுபொருந்திய, மேகலையினார் - மேகலாபரணத்தையுடைய மாதர்கள், வளர்ந்த - வளர்ந்த, வெம் - விருப்பத்தைத் தராநின்ற, முலை - ஸ்தனங்களை, நேமியம்புள்ளென - சக்கரவபக்ஷியென்று, நீருட்காட்டுவார் - சலத்துக்கொள்ளே காட்டுவார்கள், காமர்-அழகிய, வாள்-பிரகாசம்பொருந்திய, முகத்தினை - முகத்தை, கமலஞ்சேர்த்தி - தாமரைபுஷ்பத்துடனேசேர்த்து, தண் - குளிர்ச்சிபொருந்திய, தாமரையென - தாமரைப்பூவென்றுசொல்ல, மணி - மூத்தையுடைய, தடத்தின் - தடாகத்தில், மூழ்குவார் - மூழ்குவார்கள், எ-று. (கச)

தோற்றதன்பெரும்படை துளங்கினுமினி
யாற்றலமெனமல ரடியிற்சேர்தலுங்
கோற்றொடியலங்கலங் குன்றன்னானொடு
மேற்றனளெரிமணிச் சிவிறியேந்தியே.

(ப - ரை.) தோற்ற - தோற்றுப்போன, தன் - தன்னுடைய, பெரும் படை-பெரியசேனைகள், துளங்கினும் - நடுங்கினோம், இனி - இனிமேல், ஆற்றலமென - பொறுக்கமாட்டோமென்று, மலரடியில் - தாமரைமலரினை யொத்த பாதத்தில், சேர்தலும் - அடையுமளவில், கோற்றொடி - தமயந்தி யானவள், அலங்கல் மாலையையணிந்த, அம் - அழகிய, குன்றன்னானொடும்- மலையையொத்த நளமகாராசனுடனே, எரி - பிரகாசியாநின்ற, மணி - ரத்நத் தாற்செய்த, சிவிறி - நீர்தூற்றுந் துருத்தியை, ஏந்தி - தாங்கி, ஏற்றனள்- எதிர்த்தாள், எ-று. (கரு)

ஓவியரெழுதரு முருவப்பூங்கொடிக்
கோவைவார்மணிவடக் கொம்மைவெம்முலைத்
தூவினோமுறுமெனச்சுடர்செய்பூணினா
னாவியந்துகில்கரந் தமையத்தூவினான்.

(ப - ரை.) ஓவியர் - சித்திரக்காரராலே, எழுதரு - எழுதுதற்கரிய, உருவம் - வடிவத்தையுடைய, பூங்கொடி - தமயந்தினது, கோவை - கோத் திருக்கிற, வார் - நீண்ட, மணிவடம் - முத்துமாலையணிந்த, கொம்மை-இள மைபொருந்திய, வெம்-விருப்பத்தைத்தருகின்ற, முலை - ஸ்தனங்களில், தூவி ல்-நீரைத்தூவில், நோமுறுமென - வருந்துவளென்று, சுடர்செய் - பிரகாசிக் கின்ற, பூணினான் - ஆபரணத்தையுடைய நளமகாராசன், ஆவி - பாலாவி யையொத்த, அம் - அழகிய, துகில் - வஸ்திரமானது, கரந்தமைய - மறை யும்படி, தூவினான் - இறைத்தான், எ-று. (கசு)

அந்துகினனைதலி னல்குறேன்றுதல்
கந்தடுகளிற்றினான் காணவெள்குறுச்
சுந்தரச்சுண்ணநீர் முகத்திற்றாயவன்
சந்தணிதடம்புயந் தழுவினாளரோ.

(ப - ரை.) அந்துகில் - அழகியவஸ்திரம், நனைதலில் - நனைந்தவள வில், அல்குல் - நிதம்பமானது, தோன்றுதல் - தோன்றுதலை, கந்தடு - கட்டு த்தறியைமுறிக்காநின்ற, களிற்றினான் - யானையையுடையநளன், காண-பார் க்க, வெள்குறு - வெட்கமுற்று, சுந்திரம் - அழகிய, சுண்ணநீர்-கந்தப்பொடி கலந்தநீரை, முகத்திற்றாய் - முகத்திலே யிறைத்து, அவன் - அவ்வரசனு டைய, சந்தணி - சந்தனமணிந்த, தடம்புயம் - பருத்ததோள்களை, தழுவி னார் - தழுவிக்கொண்டாள், எ-று.

(போ - ரை.) தன்னுடைய அவயவங்களை நளன் பார்க்குமளவில் அது கண்டு நாணிய தமயந்தி அவன் பாராமைக்கு அவன் முகத்தில் நீர்தூவியதுமன்றி மடமையால் தழுவினளென்க. (கஎ)

இனியிரண்டுபாட்டால் சலக்கிரீடைசெய்தபின் தமயந்தி யலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.

அலர்முலையம்மருங் ககறுநாமெனுக்
கலுழ்வபோற்றண்டுளி காலுமேகலை
நிலவுமிழ்பூணினு ணீக்கியேர்பெற
விலகிவில்லுமிழ்கலை வீக்கினளரோ.

(ப - ரை.) அலர்முலை-தமயந்தியினது, அம்மருங்கு-அழகியஇடையை, அகறும்-நீங்குவோம், நாமெனு-நாமென்று, கலுழ்வபோல்-அழுகின்றதுபோல், தண்டுளி-தண்ணிய துளிகளை, காலும்-சொரியும், மேகலை-மேகலாபரணத்தை, நிலவு-பிரகாசத்தை, உமிழ்-உமிழாநின்ற, பூணினுள் - ஆபரணத்தையுடை தமயந்தி, நீக்கி-கள்ளி, ஏர்பெற-அழகுபெற, விலகி-விட்டுவிட்டு, வில்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, கலை-ஆடையை, வீக்கினள் - கட்டிக்கொண்டாள். எ-று. பூணினுல் மேகலைநீக்கி கலைவீக்கினுளெனக்கூட்டுக,

நகைநிலாத்தவழ்ந்தென நானங்கோட்டிய
முகிழ்முலைமுன்றிலின் முத்தந்தாங்கினு
ளகினறுந்தூமமென் குழலிலம்மலர்ச்
சிகழிகைவேய்ந்தன டிலகந்தீட்டினள்.

(ப - ரை.) நகை-ஒளியையுடைய, நிலா-சந்திரிகை, தவழ்ந்தென-தவழ்ந்ததுபோல, நானங்கோட்டிய-கஸ்தூரியப்பிய, முகிழ்-அரும்பையொத்த, முலைமுன்றிவில்-ஸ்தனப்பிரதேசத்தில், முத்தம்-முத்துவடத்தை, தாக்கினுள்-தரித்தாள், அகில்-அகிலினுடைய, நறுந்தூமம்-நறியபுகையூட்டிய, மென்குழலில்-மெல்லியகூந்தலில், அம்-அழகிய, மலர்ச்சிகழிகை - மலர்மாலையை, வேந்தனள்-தரித்தாள், திலகம்-பொட்டை, தீட்டினுள்-எழுதினுள். எ-று.

களிர்ச்சுரும்பரற்றுதார்க் காளைகாமநோய்
தளிர்த்தெழமடமயிற் சாயறன்னெடுந்
துளிப்புபல்கண்படு சோலைநாப்பணுேர்
பளிக்குமேனிலைமலர்ப் பள்ளிமேவினன்.

(ப - ரை.) களி-களிப்பையுடைய, சுரும்பு-வண்டுகள், அரற்றுதார்-சத்தியாநின்ற மாலையையுடைய, காளை-நளமகாராசனுனவன், காமநோய்-விரகநோயானது, தளிர்த்தெழ-அதிகரிக்க, மடமயிற்சாயறன்னெடும்-தமயந்தியு

டனே, துளிப்புயல்-துளியையுடைய மேகங்கள், கண்படு - நித்திரைசெய்யா நின்ற, சோலைநாப்பண்-சோலைக்கு மத்தியத்தில், ஓர் பளிக்குமேனிலை - ஒரு பளிங்கினாற்செய்த மேலுப்பரிகையில், மலர்ப்பள்ளி-புட்பசயனத்தில்,மேவினன்-சேர்ந்தான். எ-று.

அரிக்குரற்கிண்கிணி சிலம்பொடார்த்தன
புரிக்குழன்மலர்மழை பொழிந்துபொங்கிய
வரிச்சிறைத்தும்பிபாட் டயர்ந்தமங்கைதன்
றிருக்கிளர்முலைநலஞ் செம்மலுண்ணவே.

(ப - ரை.) மங்கைதன் - தமயந்தியினது, திருக்கிளர் - அழகுமிகுந்த, முலைநலம்-ஸ்தனத்தின் இன்பத்தை, செம்மல்-நளமகாராசன், உண்ண-அனுபவியாநிற்க, அரி-தவளையினது, குரல்-குரலையொத்த, கிண்கிணி - சதங்கைகள், சிலம்பொடு-சிலம்புடனே, ஆர்த்தன-ஆரவாரித்தன, புரி-கட்டுப்பட்ட, குழல்-கூந்தல், மலர்மழை-புஷ்பவருஷத்தை, பொழிந்து-சொரிந்து, பொங்கிய-மிகுந்தன, வரி-நீண்ட, சிறை-இறகையுடைய, தும்பி-வண்டுகள், பாட்டயர்ந்த-பாட்டைப்பாடின. எ-று. (௨௧)

ஏந்திளவனமுலை சாடவீர்நறுஞ்
சாந்துதிர்ந்தெதிரெழி றவழுமார்பினன்
பூந்துணர்பொதுளிய பொதும்பர்நாப்பணோர்
வாய்ந்தபூங்கொடியொடு மணந்துவைகினன்.

(ப - ரை.) ஏந்து-ஏந்திய, இள - இளமையாகிய, வனமுலை - அழகிய ஸ்தனங்கள், சாட-மோத, ஈர்-குளிர்ச்சியும், நறு - வாசனையும்பொருந்திய, சாந்துதிர்ந்து-சந்தனமழிந்து, எதிர்-நேராக, எழில்தவழும்-அழகுபொருந்திய, மார்பினன்-மார்பையுடையநளன், பூந்துணர்-பூங்கொத்துகள், பொதுளிய-நெருங்கிய, பொதும்பர்-சோலையினுடைய, நாப்பண்-மத்தியத்தில், ஓர்-ஒப்பற்ற, வாய்ந்த-தனக்குக் கிடைத்த, பூங்கொடியொடு-தமயந்தியினுடனே மணந்து-கூடி, வைகினன்-இருந்தான். எ-று. (௨௨)

புனல்விளையாட்டுப்படலம்-முற்றிற்று.

ஆக செய்யுள்-௬௯௯



கடவுள் துணை.

# சூதாடு படலம்.

[இப்படலத்தால் குறைவின்றியசெல்வத்தை யனுபவிக்
கும்நளன் விதிவழியால் அளவிறந்ததுன்ப மனுப
வித்தற்குக் காரணமாகிய சூதாடல்
சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

வாம்பரித்தேரினானு மாழையொண்கண்ணினாளு
மேம்பலோடினிதுபுல்லி யிடைவிடாதொழுகுநாளி
லாம்பலம்போதுகாட்டு மணிதிகழ்பவளச்செவ்வாய்க்
காம்புறழ்தோளினாட்குக் கருப்பம்வந்துற்றதன்றே.

(ப - ரை.) வாழ்-தாவாநின்ற, பரித்தேரினானும் - குதிரைகட்டிய தேரையுடைய நளமகாராசனும், மாழை-மாவடுவையொத்த, ஒள்-பிரகாசம்பொருந்திய, கண்ணினாளும்-கண்ணையுடைதமயந்தியும், ஏம்பலோடு-அகமலர்ச்சியுடனே, இனிதுபுல்லி-இனிமையாகப்புல்லி, இடைவிடாது-நீங்காது, ஒழுகுநாளில்-நடக்குநாளிலே, ஆம்பலம்போது-செவ்வல்லிமலரை, காட்டும்-காட்டுகின்ற, அணிதிகழ்-அழகுபிரகாசியாநின்ற, பவளம்-பவளத்தையொத்த, செவ்வாய்-சிவந்தவாயையும், காம்பு-மூங்கிலை, உறழ்-ஒத்த, தோளினாட்கு-தோளையுமுடைய தமயந்திக்கு, கருப்பம்வந்துற்றது-கர்ப்பமுண்டாயிற்று. எ-று.

[இதனால் தமயந்தியின்கருப்பக்குறிகள் சொல்லப்படுகின்றன.]

மெலியுநுண்மருங்குதோன்ற வேயிளந்தோள்கடேம்ப
நலனுறுசெய்யமேனி பாசொளிநரம்புகாட்ட
வளர்சுணங்கணிந்துவீங்கி யழகுவீற்றிருந்தபொம்மன்
முலைமுகங்கருகிச்செவ்வி முகமதிவிளர்த்ததன்றே.

(ப - ரை.) மெலியும்-வாடாநின்ற, நுண்-நுட்பமான, மருங்கு-இடையானது, தோன்ற-காண, வேய்-மூங்கிலையொத்த, இள-இளமையாகிய,தோள்கள்-தோள்கள், தேம்ப-வாட, நலனுறு-நன்மைபொருந்திய,செய்யமேனி-சிவந்தவுடம்பு, பாசொளி-பசியவொளியையுடைய, நரம்புகாட்ட-நரம்புகளைத்தோற்றுவிக்க, அலர்-பரந்த, சுணங்கு-தேமலை, அணிந்து-தரித்து, வீங்கி -

பருத்து. அழகுவீற் றிருந்த-அழகானது தங்கியிருந்த, பொம்மல் - பொலிவு பொருந்திய, முலைமுகம்-ஸ்தனங்களின் முகங்கள், கருகி - கறுத்து, செவ்வி அழகையுடைய, முகமதி-முகமாகியசந்திரன், விளர்த்தது-வெண்மையடைந்தது, எ-று. அன்று-ஏ-அசைகள். (உ)

குழைமுகங்கிழித்துநீண்ட கொழுங்கடைமழைக்கட்பேதை
பொழிகதிர்திங்கள்காட்டும் வலம்புரிவருந்திப்பொங்கி
யொழுகொளிநிலவுகாலு நித்திலமுயிர்த்ததென்ன
மழகளிறனையதோற்ற மாணிளங்குழவியீன்றாள்.

(ப - ரை.) குழைமுகம்-காதின்முகத்தை, கிழித்து - கிழித்து, நீண்ட-நீண்டிருக்கிற, செழு-செழுமையாகிய, கடை-கடையையுடைய, மழைக்கண்-குளிர்ச்சிபொருந்திய கண்ணையுடைய, பேதை - தமயந்தியானவள், பொழி-சொரியாநின்ற, கதிர் - கிரணங்களையுடைய, திங்கள் - சந்திரனை, காட்டும்-தோற்றுவிக்கும், வலம்புரி-வலம்புரிச்சங்கமானது, வருந்தி - வருத்தமுற்று, பொங்கி-பிரகாசித்து, ஒழுகு-மிகுந்த, ஒளி-காந்தியையுடைய, நிலவு-சந்திரிகையை, காலும்-கக்காநின்ற, நித்திலம்-முத்தை, உயிர்த்ததென்ன-பெற்றதுபோல, மழ-இளமைபொருந்திய, களிறனைய-யானையையொத்த, தோற்றம்-காட்சியையுடைய, மாண்-மாட்சிமையாகிய, இளங்குழவி - இளங்குழந்தையை, ஈன்றாள்-பெற்றாள். எ-று. (ங)

மழகளிறனையநம்பி பிறையெனவளருநாளிற்
கழைபுரைதோளிபின்னோர் கன்னியையுயிர்த்தாண்மக்கள்
குழலினுங்கனிந்தவந்தீங் குதலைகேட்டுருகிவெய்ய
முழைபுகுசீயமன்ன னுவகையன்மூழ்கினானே.

(ப - ரை.) மழ-இளமைபொருந்திய, களிறனைய - யானையையொத்த, நம்பி-பிள்ளையானவன், பிறையென - மூன்றாம்பிறைபோல, வளருநாளில்-வளர்ந்து வருங்காலத்தில், கழைபுரை-மூங்கிலையொத்த, தோளி - தோளையுடைய தமயந்தி, பின்-பின்பு, ஓர்கன்னியை-ஒருபெண்ணை, உயிர்த்தாள்-பெற்றாள், மக்கள்-இரண்டுகுழந்தைகளுடைய, குழலினும் - வேய்ங்குழலினும், கனிந்த-கனிவாகிய, அம்-அழகிய, தீங்குதலை-தித்திப்புப்பொருந்திய மழலைச்சொல்லை, கேட்டுருகி-கேட்டுள்ளுருகி, வெய்ய-வெவ்விதாகிய, முழை-குகையில், புகும்-நுழையாநின்ற, சீயமன்னன்-சிங்கத்தையொத்த நளமகாராஜன், உவகையில்-சந்தோஷத்தில், மூழ்கினான்-அழுந்தினான். எ-று. (ச)

நிழலுமிழ்ந்துதிரங்காலும் வயிரவாணிடைதர்கோமா
னெழுபுவிவேந்தர்யாரு மிடுதிறைகொணர்ந்தேந்தொன்றுந்
தொழுதெனவேத்திநிற்பத் தொடுகடலுடுத்தஞால
முழுவதுமொருகோலோச்சி முறைவழாதளித்தானன்றே.

(ப - ரை.) நிழல் பிரகாசத்தை, உமிழ்ந்து-சொரிந்து, உதிரங்காலும்-ரத்தத்தைக்கக்கும், வயிரவாள்-கூரியவாளையுடைய,நிடதர்கோமான்-நளமகாராசன், எழுபுவி-சப்ததீவிலுமுள்ள, வேந்தர்யாரும் - அரசரெல்லாரும், இடு திறை-இடாநின்ற கப்பங்களை, கொணர்ந்து கொண்டுவந்து, என்ஞான்றும்-எந்தநாளும், தொழுதனர்-வணங்கினவராய், ஏத்தி - துதித்து, நிற்ப - நிற்க, தொடு-தோண்டிய, கடலுடுத்த-சமுத்திரஞ்சூழ்ந்த, ஞாலமுழுவதும் - உலக முழுமையும், ஒருகோலோச்சி - ஒருசெங்கோலைச்செலுத்தி, முறைவழாது-கிரமந்தப்பாது, அளித்தான்-ரட்சித்துக்கொண்டு வந்தான், எ-று.

கோவடுகுருதிவேலான் கொழுஞ்சுடர்பட்டகாலைச்
சேவடிகழுவலின்றிச் செய்கடன்கழித்தநோக்கிக்
காவலற்சேருங்காலங் கருதுபுபன்னிராண்டு
மேவருதான்றியுற்ற வெங்கலிமேயினனே.

(ப - ரை.) கோ-(சத்துருக்களாகிய) ராஜாக்களை,அடு-கொல்லாநின்ற, குருதி - ரத்தந்தோய்ந்த, வேலான் - வேலாயுதத்தையுடையநளன், கொழு செழித்த, சுடர்-சூரியன், பட்டகாலை - அஸ்தமித்தபொழுது, சேவடி சிவந்த பாதங்களை, கழுவலின்றி-கழுவாமல், செய்கடன் - செய்பத்தக்கநித்திய கருமத்தை, கழித்தனோக்கி - செய்துமுடித்தலைப்பார்த்து, காவலன்-அரசனை, சேருங்காலம் - அடையுங்காலம், (எதுவென்று) கருதுபு - நினைத்து, பன்னிராண்டு பன்னிரண்டுவருஷம், மேவரும்-அடைதற்கரிய, தான்றியுற்ற-தான்றிமரத்தின்கண்ணிருந்த, வெங்கலி - வெவ்வியகலியன், மேயினன் - சேர்ந்தான், எ-று.

கலிவிருத்தம்.

விட்புலத்தரசரு மேனைவேந்தரும்
வட்கவிம்மன்னவன் மல்லல்மார்பகம்
பெட்புறுமடந்தையைப் பிரிப்பன்யானென
புட்கரன்பாற்கலி போயினனரோ.

(ப - ரை.) விட்புலத்து-தெய்வலோகத்திலிருக்கும், அரசரும் - இந்திராதிதேவரும், ஏனைவேந்தரும்-பூலோகத்தரசரும் வட்க- நாணமடைய, இம் மன்னவன்-இந்த நளனுடைய, மல்லல்-வலிமைபொருந்திய, மார்பகம்-மார்பினிடத்தை, பெட்புறும்-விரும்பும், மடந்தையை-தமயந்தியை, பிரிப்பன்-பிரித்துவிடுவேன், யானென - நானென்று, புட்கரன்பால் - புட்கராஜனிடத்தில்,கலி கலிபுருஷன், போயினன்-போனான், எ று. அரோ-அசை. (எ)

வருகலிபுட்கரன் வதனநோக்குருக்
குரைசழனைவனெனுங் கொற்றவேந்தனே

யொருகுடைநீழலி னுலகங்காத்திட
விருநிலக்கிழமைமநீ யிழந்ததென்கொலோ.

(ப - ரை.) வருகலி - வந்தகலியனானவன், புட்கான் - புட்கராஜனது, வதனம் - முகத்தை, நோக்குறு-பார்த்து, குரைகழல்-சத்தியாநின்ற வீரக்கழலையணிந்த, நளனெனும்-நளனென்று சொல்லப்பட்ட, கொற்றம்-வெற்றியையுடைய, வேந்தனே - அரசனே, ஒருகுடைநீழலின் - ஏகச்சத்திராதிபதியாய், உலகங்காத்திட - இவ்வுலகத்தைரட்சிக்க, இரு-பெருமைபொருந்திய, நிலக்கிழமை-அரசாட்சியை, நீ-நீ. இழந்தது - கைவிட்டது, என்கொலோ - யாதுகாரணமோ. எ-று. (அ)

வாட்டிறல்வேந்தனை மடந்தைதன்னொடுங்
காட்டிடைப்புகுத்திமண் காக்குமன்னருன்
றாட்டுணைதொழநறுந் தாமநீண்முடி
சூட்டுவனினக்கெனச் சொல்லினனரோ.

(ப - ரை.) வாட்டிறல் - வாட்போரில்வெற்றியையுடைய, வேந்தனை - அரசனை, மடந்தைதன்னொடும் - மனைவியுடனே, காட்டிடைப்புகுத்தி-காட்டினிடத்தில்போகச்செய்து, மண் - உலகத்தை, காக்கும் - ரட்சிக்காநின்ற, மன்னர் அரசர்கள், உன்-உன்னுடைய, தாட்டுணை-உபயபாதங்களை. தொழ வணங்க, நறு - வாசனைபொருந்திய, தாமம் - மாலையணிந்த. நீண்முடி-நீண்ட இரீடத்தை, நினக்கு-உனக்கு, சூட்டுவன்-தரிப்பேன், என-என்று, சொல்லினன்-சொன்னான், எ-று. (கூ)

சொல்லலுங்களிமகிழ் தூங்கிப்புட்கரன்
கொல்லியவருதிறற் கூற்றுமஞ்சுறு
மல்லடுதிண்புய மன்னர்மன்னனை
வெல்லுமாறெங்ஙனம் விளம்புவாயென்றான்.

(ப - ரை.) சொல்லலும் - இப்படிசொன்னவளவில், களிமகிழ்தூங்கி - மிகுந்த மகிழ்ச்சியையடைந்து, புட்கரன் - புட்கராஜன், கொல்லிய - கொல்ல, வரும் - வராநின்ற, திறல் - வெற்றியையுடைய, கூற்றம் - யமனும், அஞ்சுறும் - பயப்படும்படியாகிய, மல்லடு - மற்போர் செய்கின்ற, திண்புயம்-திண்ணியபுயத்தையுடைய, மன்னர்மன்னனை - நளனை. வெல்லுமாறு - வெல்லுநெறி, எங்ஙனம் - எவ்விதம், விளம்புவாயென்றான் - சொல்லென்று சொன்னான். எ-று.

எண்ணலையாதுநா னிழைத்தலஞ்சனை
விண்ணவராயினும் விலக்கற்பாலரோ
வண்ணலைச்சூதினுர் படுப்பலஞ்சனீ
கண்ணுறும்யான்கொடு கலியென்றனரோ.

(ப - ரை.) யாதும் எண்ணலை-எவ்வளவும் ஆலோசிக்கவேண்டாம், நாளிழைத்த - நான்செய்த, வஞ்சனை-கபடத்தை, விண்ணவராயினும் - தேவர்களானாலும், விலக்கற்பாலரோ - நீக்குந்தன்மையையுடையர்களோ? அண்ணலை-நளனை, சூதினுற்படுப்பன் - சூதினுற்செயிப்பேன், நீ அஞ்சல் - நீ பயப்படவேண்டாம், கண்ணுறும் - எதிரேவந்த, யான்-நானும், கொடு - கொடிய, வெங்கலியென்றான் - வெவ்வியகலியனென்று சொன்னான், எ-று. (கக)

முழையுறைகொடுவரி யனையமொய்ம்பின
னுழையினிற்போதுமென றுரைத்துவெங்கலி
மழவிடையுருக்கொடு நிற்பவண்சுட
ரிழைதவழ்மார்பின னிவர்ந்துபோயினன்.

(ப - ரை.) முழை-குகையினிடத்தில், உறை இருக்கா நின்ற, கொடுவரி அனைய - புலியையொத்த, மொய்ம்பினன் - வலியையுடைய நளமகாராசனது, உழையினில்-இடத்தில், போதுமென்று-போவோமென்று,உரைத்து-சொல்லி, வெங்கலி - வெவ்வியகலியானவன், மழவிடை-இளவேற்றின், உருக்கொடு - உருவத்தைக்கொண்டு, நிற்ப-நிற்க, வள்-வளப்பமாகிய, சுடர்-காந்தியையுடைய, இழைதவழ் - ஆபரணமசையாநின்ற, மார்பினன் - மார்பையுடைய புஷ்கரராஜன், இவர்ந்து - ஏறிக்கொண்டு, போயினன் - சென்றான்,

உரவுநீர்க்கருங்கட லுலகுகாவலன்
குரைகழல்பணிந்துதங் குறைகள்சாற்றுவா
னரசர்கண்டுயிலமை முகிலினார்ப்புறு
முரசுகண்டுயில்கிலா வாயின்முன்னினன்.

(ப - ரை.) உரவுநீர்-விரிந்தநீரினையுடைய, கருங்கடல் - கரியகடலாற் சூழப்பட்ட, உலகுகாவலன் - உலகுக்கரசனாகிய நளனது, குரைகழல் பணிந்து - சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த [பாதத்தைவணங்கி, தங்குறைகள்சாற்றுவான் - தமதுகுறைகளைச்சொல்வதற்கு, அரசர் - அரசர்கள், கண்டுயில்-(சமயங்கிடையாமல்) நித்திரைபண்ண, மைமுகிலின் - கறுத்தமேகத்தைப் போல, ஆர்ப்புறும் - சத்திக்காநின்ற, முரசு-பேரிகையானது, கண்டுயில்கிலா - நித்திரைசெய்யாத, வாயில்-அரண்மனை வாசலில், முன்னினன்-அடைந்தான், (புஷ்கரராசன்) எ-று. (கஉ)

மன்னவற்கெம்வர வுரைத்திவாயிலோ
யென்னலுமாங்கவ னெய்திக்கூறலுங்
கொன்னயில்வேலினன் கொணர்கவென்றன
னன்னவன்வருகென வவையினெய்தினன்.

(ப - ரை.) வாயிலோய்-வாயிற்காவலாளனே! மன்னவற்கு - நளமகாராஜனுக்கு, எம்வரவுரைத்தி -எமதுவரவைச்சொல்லு; என்னலும் - என்று

சொல்லலும், ஆங்கவன் - அக்காவலன், எய்திக்கூறலும்-போய்ச் சொன்ன வளவில், கொன்னவில் - கொல்லுதலைச்செய்யாநின்ற, வேலினன்-வேலையுடையவரசன், கொணர்கவென்றனன் - அழைத்துவா வென்றுசொன்னன், அன்னவன்வருகென - அக்காவலாளன் வாவென்றுசொல்ல, அவையினெய்தினன் - சபையில் வந்தான் (புஷ்கரராஜன்,) எ-று. (கச)

களைகணதாகியோர் கவிகைநீழலில்
வளைகடலுலகெலாம் புரக்குமன்னவன்
றளையவிழ்தாமரைத் தாளில்வீழ்ந்தெழு
மிளவலோடளவளா யிருக்குமேல்வையில்.

(ப - ரை.) களைகணதாகி-ஆதாரமாகி, ஓர்-ஒரு, கவிகை-வெண்கொற்றக்குடையினது, நிழலில்-நீழலிலிருந்து, வளைகடல் - சமுத்திரஞ்சூழ்ந்த, உலகெலாம் - பூவுலகமுழுவதும், புரக்கும்-காப்பாற்றுகின்ற, மன்னவன் - நளமகாராசனுடைய, தளையவிழ்-முறுக்குகள்விரிந்த, தாமரை-தாமரைப்பூவையொத்த, தாளில்-பாதத்தில், வீழ்ந்து-வணங்கி, எழும்-எழுகின்ற, இளவலோடு-இளையோனாகிய புஷ்கரராஜனுடனே, அளவளாய் - ஒருவர்க்கொருவர் கலந்துபேசிக்கொண்டு, இருக்குமேல்வையில்-இருக்குஞ்சமயத்தில், எ-று.

கொல்சினவாகைவேற் குரிசின்மல்லலேற்
றெல்லுமிழ்மணிக்கொடி யுயர்த்ததென்னென
வல்லடுசூதினி லேற்றமன்னரை
வெல்கொடியீதென விளம்பினனரோ.

(ப - ரை.) கொல்-கொல்லுகின்ற, சினம் கோபத்தையுடைய, வாகை--வெற்றிபொருந்திய, வேல்-வேலாயுதத்தையுடைய, குரிசில்-நளமகாராசனனவன், மல்லல்-பலம்பொருந்திய, ஏற்று ரிஷபத்தின்மேல்,எல்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, மணிக்கொடி - அழகியகொடியை. உயர்த்தது பிடித்தது, என்னென-என்னவென்றுகேட்க, வல்-சொக்கட்டானல், அடு-பொருகின்ற சூதினில், சூதாட்டத்தில், ஏற்றமன்னரை - எதிர்த்தவேந்தரை, வெல்-செயிக்கின்ற, கொடி-துவசம், ஈதென-ஈதென்று, விளம்பினன்-சொன்னன். ()

சொல்லியவவ்வுரை கேட்டுத்தூமணிக்
கல்லெனப்பணைத்துயர் கலவைத்தோளினன்
வெல்கொடியுயரிய விடலைசூதினீ
வல்லையேலாடுதும் வருகென்றோதினன்.

(ப - ரை.) சொல்லிய-சொன்ன, அவ்வுரை-அந்தவார்த்தையை, கேட்டு-செவியிற்கேட்டு,தூ-பரிசுத்தமாகிய, மணி-இரத்நங்களையுடைய,கல்லென-மலையைப்போல, பணைத்து-பருத்து, உயர்-உயர்ந்த, கலவை-சந்தனமணிந்த

தோளினன் - தோள்களையுடையவன், வெல்கொடி யுயரிய-வெல்லாநின்ற கொடியைப்பிடித்த, விடலை - புஷ்கரனே, சூதில் - சூதாட்டத்தில், நீவல்லை யேல் - நீ வல்லமை யுடையவனானால், ஆடுதும் - ஆடுவோம், வருகென்றோதி னன்-வாவென்று சொன்னான். எ-று. (கஎ)

நஞ்சினிற்கொடியவன் புணர்ப்பினம்மிறை
வஞ்சகச்சூதினின் மனம்வைத்தானென
வஞ்சினரமைச்சரவ் வரசர்கோமகன்
செஞ்சரண்டொழுதிவை செப்பன்மேயினர்.

(ப - ரை.) நஞ்சினில்-விஷத்தைப்பார்க்கிலும், கொடியவன்-பொல்லா தவனாகிய புஷ்கரனது, புணர்ப்பின்-சம்பந்தத்தினால், நம்மிறை-நம்முடைய வரசன், வஞ்சகம்-கபடமாகிய,சூதினில்-சூதில், மனம்வைத்தானென - சிந் தைவைத்தானென்று, அஞ்சினர்-பயந்தவராய், அமைச்சர்-மந்திரிகள், அவ்வ ரசர் கோமகன்-அந்த நளமகாராஜனது, செஞ்சரண்தொழுது-சிவந்தபாதங் களை வணங்கி, இவை செப்பனமேயினர்-இவைசொல்லத்தொடங்கினார்கள்.

சீலநற்றருமமெய் சிதைக்குந்தெண்டிரை
வேலைமுற்றிருநிலக் கிழமைவீழ்த்திடும்
மாலுறுத்திடுங்கவ ருடன்மன்னகேள்
கோலிழுக்கரசர்தங் கொள்கைத்தென்பவே.

(ப - ரை.) மன்னகேள்-அரசனேகேளு, கவருடல் - சூதாடலானது, சீலம்-ஒழுக்கத்தையும், நற்றருமம்-நல்லதருமத்தையும்,மெய்-சத்தியத்தையும், சிதைக்கும்-கெடுக்கும், தெள்திரை-தெள்ளிய அலைகளையுடைய,வேலைமுற்று- கடலினால்சூழப்பட்ட, இரு-பெருமைபொருந்திய, நிலக்கிழமை - அரசாக்ஷி யை, வீழ்த்திடும்-தள்ளிவிடும், மாலுறுத்திடும்-மயக்கஞ்செய்விக்கும், கோலி ழுக்கரசர்தம் - கொடுங்கோலைச் செலுத்துகிற அரசர்களது, கொள்கைத்தெ ன்ப-கோட்பாட்டையுடையதென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள்.

கள்ளுணவிரும்புதல் கழகஞ்சேர்தல்மா
லுள்ளுறப்பிறர்மனை நயத்தலொன்னலர்க்
கெள்ளருஞாட்பினு ளிரியல்செய்திடல்
வள்ளியோயறநெறி வழுக்குமென்பவே.

(ப - ரை.) கள்ளுணவிரும்புதல்-மதுவைக்குடிக்க இச்சித்தலும், கழகஞ் சேர்தல்-சூதாடுமிடத்தைச் சேர்தலும், மாலுள்ளுற - உள்ளேமயக்கமடைய, பிறர்மனைநயத்தல்-பிறர்மனையாளை விரும்புதலும், ஒன்னலர்க்கு-சத்துருக்க ளுக்கு, எள்ளரு-இகழ்ச்சியில்லாத, ஞாட்பினுள் - அமர்க்களத்தில், இரியல்

செய்திடல்-பின்னிட்டோடலும் (ஆகிய இவைகளால்,) வள்ளியோய்-வரையாது கொடுக்குமரசனே, அரநெறி-அறத்தின்வழி, வழுக்குமென்ப - பிறழுமென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள். எ-று. (உ0)

ஐயநீயாடுதற் கமைந்தசூதுமற்
றெய்துநல்குரவினுக் கியைந்ததூதுவெம்
பொய்யினுக்கருந்துணை புன்மைக்கீன்றதாய்
மெய்யினுக்குறுபகை யென்பர்மேலையோர்.

(ப - ரை.) ஐய-ஐயனே, நீயாடுதற்கு-நீயாடுகிறதற்கு, அமைந்த-சம்மதித்த, சூது-சூதாட்டமானது, எய்துநல்குரவினுக்கு-தானேவருதற்குரிய தரித்திரத்துக்கு, இயைந்ததூது-நல்லதூதாகும், வெம்பொய்யினுக்கு - வெவ்விய பொய்க்கு, அருந்துணை-நல்லசகோதரமாகும், புன்மைக்கு-கீழ்த்தொழிலுக்கு ஈன்றதாய்-பெற்றதாயாகும், மெய்யினுக்கு-சத்தியத்துக்கு, உறுபகையென்பர்-மிகுந்தபகையென்று சொல்லுவார்கள், மேலையோர்-பெரியோர்கள்.

எள்ளுகசூதினை யிகலிவென்றதூஉங்
கள்ளமேற்கொடுவலை கரந்துவேட்டுவ
ருள்ளுறவமைத்திடு முண்மையோர்கிலாப்
புள்ளினமருந்தின போலுமென்பவே.

(ப - ரை.) எள்ளுக-இகழக்கடவாய், சூதினை - சூதாட்டத்தை, இகலி-பகைத்து, வென்றதூஉம்-செயித்ததும், கள்ளம்-கபடத்தை, மேற்கொடு-மேற்கொண்டு, வலைகரந்து-வலையைமறைத்து, வேட்டுவர்-வேடர்கள், உள்ளுறவமைத்திடுமுணவை-உள்ளேவைத்திருக்கிற இரையை, ஓர்கிலா - அறியாத, புள்ளினம்-பறவைக் கூட்டங்கள், அருந்தின-உண்டவை, போலும் -ஒக்கும், என்ப-என்றுசொல்லுவார்கள். எ-று. (உஉ)

கலைக்கடல்கடந்துளார் கழறுங்கட்டுரை
சிலைத்தழும்பிருந்ததோட் செம்மல்கேட்டுயி
ருலப்பினுமறுக்கிலே னுரைத்தவாய்மைநீர்
விலக்குவதென்னென விளம்பினனரோ.

(ப - ரை.) கலைக்கடல் - அறுபத்து நாலுகலைகளாகிய சமுத்திரத்தை, கடந்துளார்-ஆராய்ந்தமந்திரிகள், கழறும்-சொல்லுகிற, கட்டுரை சொல்லை, சிலைத்தழும்பிருந்த தோட்செம்மல் - சிலையின்தழும்புபொருந்திய புசத்தையுடைய நளமகாராசன், கேட்டு-கேட்டு, உயிருலப்பினும்-உயிரிறந்துவிட்டாலும், உரைத்தவாய்மை-யான்சொன்னசொல்லை, மறுக்கிலன்-தடுக்கமாட்டேன், நீர்விலக்குவதென்னென - நீங்கள் விலக்குகிறதென்னென்று, விளம்பினன்-சொன்னான். எ-று. (உரு)

மன்னவனியைந்தவை மறுக்கலானென
வின்னலுற்றமைச்சராண் டிருப்பவெங்கலி
துன்னியதானுமூழ் துரத்தவாற்றினு
முன்னருஞ்சூதினின் முயல்கின்ருனரோ.

(ப - ரை.) மன்னவன்-அரசன், இயைந்தவை - சம்மதித்தவை, மறுக்கலானென-தடுக்கமாட்டானென்று, இன்னலுற்று-வருத்தமடைந்து, அமைச்சராண்டிருப்ப-மந்திரிகளவ்விடத்தில் பேசாதிருக்க, வெங்கலிதுன்னியதானும்-வெவ்வியகலி சேர்ந்ததினுலேயும், ஊழ்-ஊழ்வினையானது, துரந்தவாற்றினும்-செலுத்துதலினுலும், முன்னருஞ் சூதினில்-நினைத்தற்கரிய சூதாட்டத்தில், முயல்கின்ருன்-முயற்சிபடுகின்ருன். எ-று. (உ௪)

நிழலுமிழ்வயிரவா ணிடதர்கோமக
னெழுகொளிப்பூணின வொட்டம்யாதென
மழவிடையதனேயான் வைப்பனீயுமு
னெழுகடன்ஞாலமு மியைகவென்றனன்.

(ப - ரை.) நிழல்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, வயிரவாள்-கூரிய வாளையுடைய, நிடதர்கோமகன்-நளமகாராசனுனவன், ஒழுகொளிப்பூணினய்-மிகுந்த பிரகாசம்பொருந்திய ஆபரணத்தையுடைய புஷ்கரனே, ஒட்டம் யாதென-பந்தயம்யாதென்றுகேட்க, மழவிடையதனே-என்னுடைய இளவேற்றை, யான்-நான், வைப்பன்-பந்தயமாக வைப்பேன், நீயும்-நீயும், உன்னெழுகடல் ஞாலமும்-உனது எழுசமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையும், இயைக-வைத்தற்குச்சம்மதி, என்றனன்-புஷ்கரன் சொன்னுன். எ - று. (உ௫)

சூழ்வினைப்புணர்ப்பினுற் சொன்னவாறியைந்
தாழ்கடற்புவிதொழு மரசனுடவெங்
காழ்மனக்கொடுங்கலி கவற்றின்வண்ணமாய்
வீழ்தலும்புட்கரன் வென்றிட்டானரோ.

(ப - ரை.) சூழ்-சூழ்ந்த, வினை-ஊழ்வினையின், புணர்ப்பினுல்-சம்பந்தத்தினுல், சொன்னவாறியைந்து-அவன்சொன்னபடி சம்மதித்து, ஆழ் - ஆழ்ந்த, கடற்புவிதொழும்-கடலாற் சூழப்பட்ட வுலகம் வணங்கும், அரசன்-நளமகாராசன், ஆட-சூதாட, வெம்-வெவ்விய, காழ்-வயிரம்பொருந்திய, மனம்-மனத்தையடைய, கொடுங்கலி-கொடியகலியானவன், கவற்றின்வண்ணமாய் சூதின்வடிவமாய், வீழ்தலும்-புரளவும், புட்கரன் - புட்கராசன், வென்றிட்டான்-செயித்தான். எ-று. (உ௬)

கழைசுளிபுகர்முகக் களிறுதேர்பரி
யிழைதவழிளமுலே மகளிரீட்டிய
விழுநிதிக்குப்பைகள் வேலேசூழ்புவி
முழுவதுந்தோற்றனன் முழவுத்தோளினுன்.

(ப - ரை.) கழைசுளி-கருப்பைமுறிக்கின்ற, புகர்முகம்-புள்ளிபொருந்திய முகத்தையுடைய, களிறு-யானையும், தேர்-இரதமும், பரி - குதிரையும், இழை-ஆபரணமானது, தவழ்-அசையாநின்ற, இள - இளமைதங்கிய, முலை-ஸ்தனங்களையுடைய, மகளிர்-மாதர்களும், ஈட்டிய-சம்பாதித்த, விழு-மேன்மையாகிய, நிதிக்குப்பைகள்-திரவியக்கும்பலும், வேலைசூழ்-சமுத்திரஞ்சூழ்ந்த, பூவி-பூமியும், முழுவதும்-ஆகியவனைத்தையும், முழவுத்தோளினன்-மத்தளத்தையொத்த தோளையுடைய நளமகாராசன், தோற்றனன்-தோற்றுவிட்டான். எ-று. (உஎ)

அனைத்தையுந்தோற்றனை யருவிபாய்கவுட்
சினக்களிமால்களி றனையசீற்றத்தோய்
மனத்திடைநினைக்குவ தென்னைவல்லைநின்
புனக்கொடிக்கிசைந்தினிப் பொருதும்யாமென்றான்.

(ப - ரை.) அனைத்தையும்-முழுமையும், தோற்றனை-தோற்றுவிட்டாய், அருவி-மதசலவருவியானது, பாய்-பாயாநின்ற, கவுள்-கபோலத்தையுடைய, சினம்-கோபம்பொருந்திய, களி-செருக்கையுடைய, மால்-பெருமைபொருந்திய, களிறனைய-யானையையொத்த, சீற்றத்தோய் - கோபத்தையுடையநளனே, மனத்திடை-மனதினிடத்தில், நினைக்குவதென்னை - ஆலோசிப்பதென்னை, வல்லை-சீக்கிரத்தில், நின்-உன்னுடைய, புனக்கொடிக்கு-மனையாளுக்கு, இசைந்து-பந்தயத்துக்கிசைந்து, நாம்-நாம்இருவரும், இனிப்பொருதும்-இனிஆடுவோம், என்றான்-என்றுசொன்னான். எ-று. (உஅ)

சூதாடுபடலம்-முற்றிற்று.

ஆ-செய்யுள்-கூகூஎ.

---

# நகர்நீங்குபடலம்.

---

[இப்படலத்தாற் சூதிற் றோல்வியடைந்த நளன்தான் பழகிய அந்நகரத்தி லுள்ளாரோடும் வறியனாய்க் கூடியிருப்பதில் விழையாமல் அந்நகரைவிட்டு நீங்கள் சொல்லப்படுகின்றது.

கலிவிருத்தம்.

என்றலுமுறுவலித் திசைக்கலாதன
வொன்றுநீயுரைத்திட லுலங்கொடோளினாய்
வென்றநின்னகர்வயின் மேவலேனெனாத்
துன்றுகானகஞ்செலத் துணிதன்மேயினான்.

(ப - ரை.) என்றலும்-என்று சொன்னவளவில், முறுவலித்து-சிரித்து, இசைக்கலாதன-சொல்லப்படாதவைகளை, நீ யொன்றுமுரைத்திடல்-நீயொன்றுஞ்சொல்லாதே, உலங்கொடோளினய்-திரண்டகல்லையொத்ததோளையுடையபுட்கரனே, வென்ற-செயித்த, நின்னகர்வயின் - உன்னூரினிடத்து மேவலேனென்று-இருக்கமாட்டேனென்று, துன்று-நெருங்கிய, கானகஞ்செல-காட்டினிடத்திலேபோக, துணிதன்மையினன் - நளமகாராசனிச்சயித்தான். எ-று. (க)

வாட்டிறன்மன்னவன் கமலவாண்முக
மீட்டருமரசிய லிழந்தபோதினும்
பாட்டளிக்கூந்தல்வேந் தவையிற்பைந்தொடை
சூட்டியஞான்றினுந் துலங்குகின்றதே.

(ப - ரை.) வாள்-வாட்போரில், திறல்-வல்லமையுடைய, மன்னவன்-நளமகாராசனது, கமலம்-தாமரைப்பூவையொத்த, வாள் - ஒளிபொருந்திய, முகம்-முகமானது, ஈட்டரும்-சம்பாதித்தற்கரிய, அரசியல்-அரசாட்சியை, இழந்தபோதினும் - இழந்தகாலத்திலும், பாட்டு - இராகங்கள்பாடாநின்ற, அளி-வண்டுகள் மொய்க்கின்ற, கூந்தல்-அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், வேந்தவையில்-இராசசபையிலே, பைந்தொடை - பசியபூமாலையை, சூட்டிய ஞான்றினும்-சூட்டின நாளிற்பார்க்கிலும், துலங்குகின்றது - பிரகாசிக்கின்றது. எ-று. (உ)

சாமரையிரட்டுந ரடைப்பைதாங்குநர்
தீமுகத்துமிழும்வா ளேந்திச்செல்குந
ரேமுறயாரையும் விலக்கியேந்தருன்
கோமகளினிதுறை கோயிலெய்தினன்.

(ப - ரை.) சாமரையிரட்டுநர்-சாமரை வீசுகிறவர்களையும், அடைப்பைதாங்குநர்-தாம்பூலப்பையை யேந்தப்பட்டவர்களையும், தீ-அக்கினியை, முகத்து-தன்முகத்தில், உமிழும்-கக்குகின்ற, வாள்-கத்தியை, ஏந்தி-தாங்கி, செல்குநர்-வருகின்றவர்களையும், ஏமுற-மயக்கமுற, யாரையும்-மற்றவர்களையும், விலக்கி-நீக்கி, ஏந்தருன்-நளமகாராசன், கோமகள்-தமயந்தி, இனிது-இனிமையாக, உறை-வாசம்பண்ணுகிற, கோயில்-அரமனையை, எய்தினன்-சேர்ந்தான். எ-று. (ங)

கற்றையங்கவரியுங் கால்செய்வட்டமுங்
கொற்றவெண்கவிகையு மின்றிக்கோதைவேல்
மற்றடத்தோளினன் வருதல்காண்டலு
முற்றதையென்கொலென் றுள்ளத்தெண்ணினள்.

(ப - ரை.) கற்றை-தொகுதியாயிராநின்ற, அம்-அழகிய, கவரியும்-சாமரையும், கால்செய்வட்டமும்-சாந்தாற்றியும், கொற்றவெண்கவிகையும்-வெ

ண்கொற்றக்குடையும் இன்றி இல்லாமல், கோதைவேல்-மாலையணிந்தவேலை யுடைய, மல்-வலிமைபொருந்திய, தடம்-பருத்த, தோளினன்-தோளையுடைய நளமகாராசன், வருதல்காண்டலும்-வருதலைப்பார்த்தவளவில், உற்றதை-இப்படிக்கு இவன்வருவதை, என்கொல்-என்னகாரணமென்று, உள்ளத்தெண்ணினள்-மனத்தில் ஆலோசித்தாள். எ-று. (ச)

எண்ணிவந்திறைஞ்சிய வெழிற்கொம்பன்னவண்
மண்ணியமதிநிகர் வதனநோக்குறாப்
புண்ணுழைவேலெனப் புகுந்தயாவையும்
நண்ணலர்கடந்தவே னம்பிகூறினன்.

(ப - ரை.) எண்ணிவந்து-இப்படியாலோசித்தெதிர்வந்து, இறைஞ்சிய-வணங்கிய, எழில்-அழகுபொருந்திய, கொம்பன்னவள்-பூங்கொம்பையொத்ததமயந்தியினது, மன்னிய - கழுவிய, மதிநிகர்-சந்திரனையொத்த, வதனம் முகத்தை, நோக்குறா-பார்த்து, புண்-புண்ணினிடத்தில், நுழை-நுழைகின்ற வேலென-வேலைப்போல, புகுந்தயாவையும்-தானடைந்தவைகளையெல்லாம், நண்ணலர்-சத்துருக்களை, கடந்த-செயித்த, வேல்-வேலையுடைய, நம்பி - நள மகாராசன், கூறினன்-சொன்னன். எ-று. (ரு)

தாழ்தடக்கையின னின்னசாற்றலும்
வீழிவாய்மடமயில் வெய்துயிர்ப்பொடு
மாழ்கினன்வருதினள் மழைக்கணீருகுத்
தாழ்வலியிதுவென வுள்ளந்தேறினள்.

(ப - ரை.) தாழ்-முழங்கால்மட்டுநீண்ட, தடம் - விசாலமாகிய, கையினன்-கைகளையுடைய நளமகாராசன், இன்ன-இவைகளை, சாற்றலும்-சொன்னவளவில், வீழி-வீழிக்கனியையொத்த, வாய்-அதரத்தையுடைய, மடமயில் தமயந்தியானவள், வெய்துயிர்ப்பொடும்-வெவ்வியபெருமூச்சுடனே, மாழ்கினள்-மயங்கினள், வருந்தினள்-வருத்தமுற்றாள், மழைக்கண் - குளிர்ந்தகண்ணினின்றும், நீருகுத்து-நீரைச்சொரிந்து, ஊழ்-ஊழ்வினையினது, வலி-வன்மை, இதுவென-இதுவென்று, உள்ளந்தேறினள்-மனந்தெளிந்தாள். எ-று.

இந்திரசேனனென் றிசைக்கும்பேருடை
மைந்தனுமழலைவாய்க் கொடியுமாழ்குறா
துய்ந்திடக்கொண்டுபே ரோசைபோயநின்
றந்தைதன்வளநகர் சார்கவென்றனன்.

(ப - ரை.) இந்திரசேனனென்று-இந்திரசேனனென்று, இசைக்கும்-சொல்லுகின்ற, பேருடை-நாமத்தையுடைய, மைந்தனும்-பிள்ளையும், மழலை மழலைச்சொல்லையுடைய, வாய்-வாயையுடைய, கொடியும்-புதல்வியும், மாழ்குறாது-வருத்தமுறாது, உய்ந்திட-பிழைத்திருக்க, கொண்டு-உடன்கொண்டு,

பேரோசைபோய்-பெருங்கீர்த்தியையுடைய, நின் உன்னுடைய, தந்தைதன் தகப்பனுடைய, வளம்-வளம்பொருந்திய, நகர்-பட்டணத்தை, சார்கவென்றனன் அடையக்கடவையென்று (நளமகாராசன்) சொன்னான். எ-று.

உயிர்நிகர்மக்களோ டுலங்கொடோளினன்
செயிரறுதந்தைபாற் செல்கென்றோதலும்
புயனறுங்கூந்தலாட் புண்ணினூடெரி
யயினுழைந்தாலென வலமந்தேங்கினாள்.

(ப - ரை.) உயிர்நிகர்-உயிரையொத்த, மக்களோடு-பிள்ளைகளுடனே, உலங்கொள்-திரண்டகல்லின ழகைக்கொண்ட, தோளினன் - தோள்களையுடைய நளமகாராஜன், செயிரறு-குற்றமற்ற, தந்தைபால்-தகப்பனிடத்தில் செல்கென்றோதலும்-போகவென்றுசொல்லலும், புயல்-மேகத்தையொத்த, நறு-வாசனைபொருந்திய, கூந்தலாள்-அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், புண்ணினூடு - புண்ணினுள், எரி - எரியாநின்ற, அயில் - வேலானது, நுழைந்தாலென-நுழைந்ததுபோல, அலமந்து - மனங்கலங்கி, ஏங்கினாள்-அழுதாள். எ-று. (அ)

நெடுபடுகானிடைத் தமியைநீங்கிப்போய்ப்
படுபரலமளிமேற் பள்ளிகொள்ளவெங்
கடிநகரடைந்துமெல் லணையிற்கண்படி
லடியனேற்கிதனினு மறனுண்டாங்கொலோ.

(ப - ரை.) நெடிபடு-சிள்வண்டுகளையுடைய, கானிடை - காட்டினிடத்தில், தமியை-தனியாகியவென்னை, நீங்கிப்போய்-விட்டுநீங்கிப்போய், படு-உறுத்தாநின்ற, பரல்-பரற்கல்லுகளாகிய, அமளிமேல்-அணையின்மீது, பள்ளிகொள்ள-நீர்நித்திரைசெய்ய, வெம்-குரூரமாகிய, கடி-காவலையுடைய, நகர் பட்டணத்தை, அடைந்து-சேர்ந்து, மெல்-மிருதுவாகிய, அணையில்-சயனித்தில், கண்படில்-நான் நித்திரைசெய்யில், அடியனேற்கு-அடியேனுக்கு, இதனினும்-இதைப்பார்க்கிலும், அறனுண்டாங்கொல்-தருமமுண்டோ, எ-று.

என்றவளுரைத்தலு மடங்கலேறனான்
மென்றளிர்கவற்றுநின்மெல்லென்சீரடி
கன்றவெம்பரல்படு கானினேகுதற்
கென்றமேலெனதுயி ருய்யுமோவென்றான்.

(ப - ரை.) என்று - இப்படியென்று, அவள் - அத்தமயந்தியானவள், உரைத்தலும்-சொன்னவளவில், மடங்கலேறனான் - ஆண்சிங்கத்தையொத்த நளமகாராஜன், மென்றளிர்-மெல்லியதளிரை, கவற்றும் - வருந்தச்செய்யும், நின்-உன்னுடைய, மெல்லென்-மிருதுவாகிய, சீரடி-சிற்றடிகள், கன்ற-கன்றிப்போக, வெம்-குரூரமான, படுபரல்-மணியாம்பருக்கைக் கல்லுண்டாகிய,

கானின்-காட்டில், ஏகுதற்கு-போதற்கு, ஒன்றிமேல்-பொருந்துமாகில், எனதுயிர்-என்னுடைய பிராணன், எ-று. (௧0)

பொற்பினுக்குறையுளாம் பொன்னங்கொம்பனு
யற்பினிற்பயந்தநம் மக்களாயிடை
யெற்பிரிந்துறைகுந ரேனுமெங்ஙன
நிற்பிரிந்தாற்றுவர் நிகழ்த்துவாயென்றான்

(ப - ரை.) பொற்பினுக்கு - அழகிற்கு, உறையுளாம்-இருப்பிடமாகிய, பொன்னற்கொம்பனாய்-அழகுபொருந்திய, பொற்கொம்பையொத்த-தமயந்தியே! அற்பினில் - ஆசையினாலே, பயந்த - பெற்ற, நம்மக்கள் - நம்முடையபிள்ளைகள், ஆயிடை - அந்தபீமன்வீட்டில், எற்பிரிந்து - என்னைவிட்டுநீங்கி, உறைகுநரேனும் - இருப்பாராயினும், எங்ஙனம் - எத்தன்மையாய், நிற்பிரிந்து - உன்னைவிட்டுநீங்கி, ஆற்றுவர் - பொறுத்திருப்பார்கள், நிகழ்த்துவாயென்றான் - சொல்லென்று சொன்னான், எ-று. மக்கட்குத் தந்தையினுந்தாயரதிகரென்பதாம். (௧௧)

கூற்றுறழ்குருதிவேற் குரிசின்மக்களா
மாற்றினுமாற்றலா தனுரின்மூழ்கினு
மற்றருங்கற்பினர் மகிழ்நர்கான்செல
வேற்றுநாடுறைவது விழுமிதோவென்றாள்.

(ப - ரை.) கூற்றுறழ் - யமனையொத்த, குருதி - உதிரந்தோய்ந்த, வேல்-வேலாயுதத்தையுடைய, குருசில்-அரசனே, மக்கள்தாம்-பிள்ளைகள், ஆற்றினும்-பொறுத்தாலும், ஆற்றலாது-பொறுக்காமல், அனுரில்-துக்கத்தில் மூழ்கினும்-மூழ்கினாலும், மாற்றரும்-பிறராற்கெடுத்தற்கரிய, கற்பினர்-பதிவிரதாதருமத்தையுடைய ஸ்திரீகள், மகிழ்நர்-புருஷர்கள், கான்செல - காட்டிற்போக, வேற்றுநாடுறைவது-வேறுதேசத்திற்போயிருப்பது, விழுமிதோவென்றாள்-மேன்மையுடையதோவென்று (தமயந்தி) சொன்னாள். எ-று.

விரிகடமிழ்தமும் வேலைஞாலமுஞ்
செருமுகத்தழலுமிழ் சிறுகண்யானையு
மெரிமணிக்குப்பையு மெளிதினெய்தலா
மருமகப்பெறுதன்மற் றரியதென்பவே.

(ப - ரை.) விரி-பரந்த, கடல்-திருப்பாற்கடலி லுண்டாகிய, அமிழ்தமும்-தேவாமிர்தத்தையும், வேலை-சமுத்திரஞ்சூழ்ந்த, ஞாலமும்-பூமியையும், செருமுகத்து-யுத்தத்தினிடத்திலே, அழலுமிழ்-நெருப்பையுமிழ்கின்ற, சிறுகண்யானையும்-சிறியகண்களையுடைய யானைகளையும், எரி - பிரகாசிக்கின்ற, மணிக்குப்பையும்-இரத்தினக்குப்பைகளையும், எளிதி னெய்தலாம்-எளிதிலேயடையலாம், அருமகப்பெறுதல்-அரிய பிள்ளைகளைப் பெறுதல், அரியதென்ப-அரியதென்று சொல்வார் (பெரியோர்கள்,) எ-று. மற்று-ஏ-அசைகள். ()

விம்மிமின் னுழைமருங் கொசியவீங்கிய
கொம்மைவெம்முலையினுய் குதலைமென்மொழிச்
செம்மையவருமகப் பெறுநதீமையோர்க்
கிம்மையுமறுமையு மின்பமில்லையால்.

(ப - ரை.) விம்மி-பருத்து, மின்-மின்னலையொத்த, நுழை - நுட்பமாகிய, மருங்கு-இடையானது, ஒசிய - ஒடிந்துபோகும்படி, வீங்கிய - பூரித்த, கொம்மை-இளமைபொருந்திய, வெம்-விருப்பத்தைச்செய்கின்ற, முலையினுய்-ஸ்தனங்களையுடைய தமயந்தியே குதலை-மழலையாகிய, மென்மொழி-மிருதுவாகிய சொல்லையுடைய், செம்மைய-நல்ல குணத்தையுடைய, அருமக-அரியபிள்ளைகளை, பெறுத-பெற்றுக்கொள்ளாத, தீமையோர்க்கு - குற்றத்தையுடையோர்க்கு, இம்மையும்-இப்பிறப்பிலும், மறுமையும்-மறுபிறப்பிலும், இன்பமில்லை-சுகமில்லை, எ-று, ஆல்-அசை. (கச)

என்னலும்வணரி நங் கூந்தலேந்திழை
மன்னவமழலைவாய் மக்கடம்மொடு
மின்னுபரிதிவேல் வீமன்மாநகர்
துன்னுதும்யாமெனச் சொல்லினுளரோ.

(ப - ரை.) என்னலும்-இப்படியென்று அரசன் சொல்லவும், வணர்-வளைந்த, இரு பெரிதாகிய, கூந்தல்-அளகபாரத்தையுடைய, ஏந்திழை-தமயந்தியானவள், மன்னவ-அரசனே, நம்-நம்முடைய, மழலைவாய்-மழலைச்சொல்லைப்பொருந்திய வாயையுடைய, மக்கடம்மொடும்-பிள்ளைகளுடனே, யாம்-நாமிருவரும், மின்னு-மின்னலைப்பழிக்கின்ற, பரிதி - சூரியனையொத்த, வேல்-வேலாயுதத்தையுடைய, வீமன் - வீமராசனுடைய, மாநகர் பெரியநகரில், துன்னுதும்-சேர்வோம், யாம்-நாம், என-என்று, சொல்லினுள்-சொன்னுள். எ-று. (கரு)

கோற்றொடிசெல்வர்பாற் குறையிரந்துநின்
றேற்றயின் றுயிர்சுமந் திருத்தலீறிலா
வாற்றலுமானமு மறிவுங்கல்வியு
மாற்றருஞ்சீர்த்தியு மாற்றுமென்பவே.

(ப - ரை.) கோற்றொடி-தமயந்தியே, செல்வர்பால்-செல்வத்தையுடையவர்களிடத்தில் குறையிரந்து, நின்று - குறையைசசொல்லி யிரந்துநின்று, ஏற்று-வாங்கி, அயின்று-உண்டு, உயிர்சுமந்திருத்தல்-உயிரைத்தாங்கி யிருத்தலானது, ஈறிலா-முடிவில்லாத, ஆற்றலும்-வலியையும், மானமும்-அபிமானத்தையும், அறிவு-அறிவையும், கல்வியும்-வித்தையையும், மாற்றரும் - நீக்கப்படாத, சீர்த்தியும்-கீர்த்தியையும், மாற்றுமென்ப போக்குமென்று (பெரியோர்) சொல்வார்கள், எ-று. (கசு)

மிக்கவெஞ்சமத்திடை வெருவியோடின
ரொக்கறுன்புறத்தனி யுலகில்வாழுநர்

புக்குவேட்டகத்தினி லுண்ணும்புன்மையோர்
மக்களுட்பதடியென் றுரைக்கும்வையமே.

(ப - ரை.) மிக்க-அதிகரித்த, வெஞ்சமத்திடை-வெவ்வியயுத்தத்தினிடத்தில், வெருவியோடினர்-பயந்தோடினவர்களும், ஒக்கல்-சுற்றத்தார், துன்புற-வருத்தமடைய, தனி-தனித்திருந்து, உலகில்-உலகத்தில், வாழுநர்-செல்வத்துடன் வாழ்கின்றவர்களும், புக்கு-போய், வேட்டகத்தினில் - மாமனார் வீட்டில், உண்ணும்-புசிக்கின்ற, புன்மையோர்-கீழ்மக்களும், மக்களுள்-மனிதருக்குள், பதடியென்று-பதரென்று, வையம்-உலகத்தார், உரைக்கும்-சொல்லுவார். எ-று. (கஎ)

என்றலுந்திருவுள மின்னதாகுமேன்
மன்றலந்தெரியலாம் மக்கடம்மைநம்
மின்றிகழ்மானவேல் விதர்ப்பன்மாநகர்
சென்றிடப்பணித்தரு ளென்றுசெப்பினள்.

(ப - ரை.) என்றலும்-இப்படியென்று அரசன் சொன்னவளவில், திருவுளம்-உம்முடையசித்தம், இன்னதாகுமேல்-இத்தன்மையதாகுமானால், மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, தெரியலாய்-மாலையையுடைய அரசனே, மக்கடம்மை-பிள்ளைகளை, நம்-நம்முடைய, மின்றிகழ்-மின்னலைப்போலும் பிரகாசிக்கின்ற, மானம்-பெருமைபொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, விதர்ப்பன்-வீமராசனுடைய, மாநகர்-பெரியநகரத்தில், சென்றிட போக, பணித்தருள்-உத்தரவுகொடு, என்று-என்று, செப்பினள் - தமயந்தி சொன்னாள். எ-று. (கஅ)

தண்டலில்பாகனை நோக்கித்தாதுசேர்
வண்டிமிர்தெரியலாண் வருந்திமக்களை
விண்டொடுபுரிசைசூழ் விதர்ப்பன்றன்னுழை
கொண்டனைபோகெனக் கூறினனரோ.

(ப - ரை.) தண்டலில்-நீங்குதலில்லாத, பாகனை-தேர்ப்பாகனை, நோக்கி-பார்த்து, தாதுசேர்-மகரந்தஞ்சேர்ந்த, வண்டிமிர் - வண்டுகள் சப்தியாநின்ற, தெரியலான்-மாலையையணிந்த நளமகாராசன், வருந்தி-வருத்தமுற்று மக்களை-பிள்ளைகளை, விண்டொடு-மேகத்தை யளாவாநின்ற, புரிசைசூழ் - மதில்சூழ்ந்த, விதர்ப்பன்றன்னுழை - வீமராசனிடத்தில், கொண்டனைபோகென-கொண்டுபோவென்று, கூறினன்-உத்தரவு கொடுத்தான். எ-று.
அரோ-அசை. (கசு)

தழுவியதாதைதன் முகமுந்தாயர்த
முழுமதியனையவாண் முகமுநோக்குறு
விழிவழிநீருக விம்மிவிம்மிநின்
றழுதனர்கண்டுளோ ரளக்கணெய்தவே.

(ப - ரை.) தழுவிய-தங்களைத்தழுவிக்கொண்ட, தாதைதன்முகமும்-தகப்பனுடைய முகத்தையும், தாயார்தம்-தாயாரினுடைய, முழுமதியனைய-பூர்ண சந்திரனையொத்த, வாண்முகமும்-ஒளிபொருந்திய முகத்தையும்,நோக்குறு-பார்த்து, விழிவழி-கண்ணின்வழியிலே, நீருக-நீர்சிந்த, விம்மிவிம்மி நின்று-தேம்பித்தேம்பிநின்று, கண்டுளோர்-பார்த்தவர்கள், அலக்கணெய்த-துன்பமுறும்படி, அழுதனர்-அழுதார்கள். எ-று. (உ0)

அலமருமக்கட னாகமெங்கணு
முலைவழியொழுகுபா னனைப்பமோந்துவாய்
புலர்தரப்பற்பல்காற் புல்லிக்கொண்டுகண்
கலுழ்தருபுனலினாற் கழுவினாளரோ.

(ப - ரை.) அலமரு-மனங்கலங்குகின்ற, மக்கள்தம்-பிள்ளைகளுடைய, ஆகமெங்கணும்-சரீரமுழுமையும், முலைவழி-முலையின்வழியால்,ஒழுகு-ஒழுகாநின்ற, பால்-பாலானது, நனைப்ப-நனைக்கும்படி, மோந்து-உச்சிமோந்து, வாய்ப்புலர்தர-வாயுலர, பற்பல்கால்-அனந்தந்தரம், புல்லிக்கொண்டு - தழுவிக்கொண்டு, கண்கலுழ்தரு-கண்ணினின்றுமொழுகாநின்ற, புனலினால்-சலத்தினால், கழுவினாள்-கழுவினாள், எ-று. அரோ-அசை. (உக)

மடவரறன்னையு மதுகைவேந்தையும்
படுதுயரொழிகென வாற்றிப்பாகனுங்
குடலுயிர்பிரித்தென வுவகைமக்களைக்
கொடுநெடுந்தேர்மிசைக் கொண்டுபோயினான்.

(ப - ரை.) மடவரல்தன்னையும்-தமயந்தியையும், மதுகை - வலியையுடைய, வேந்தையும்-நளனையும், படு-உண்டாகின்ற, துயரொழிகென-துக்கநீங்கக்கடவீரென்று, ஆற்றி-தணித்து, பாகன்-தேர்ப்பாகன், ஆங்கு-அவ்விடத்தினின்று, உடலுயிர் பிரித்தென-உடலையு முயிரையும்வேறுபிரித்ததுபோல், உவகைமக்களை-சந்தோஷத்தைச் செய்யும் பிள்ளைகளை, கொடி - கொடியையுடைய, நெடுந்தேர்மிசை-நெடியதேரின்மீது,கொண்டு-ஏற்றிக்கொண்டு, போயினான்-சென்றான், எ-று. (உஉ)

மிகைப்படுதுன்பமும் விழையுமின்பமு
மகத்திடைநிகரென நோக்குமையனுந்
தகைப்பருந்துயரொடு தளர்ந்துசாம்புமேன்
மகப்பிரிவினுந்துயர் வலிதியாவதே.

(ப - ரை.) மிகைப்படு-அதிகரித்த, துன்பமும்-துயரத்தையும், விழையும்-இச்சிக்கபட்ட, இன்பமும்-இன்பத்தையும், அகத்திடை-மனதில்,நிகரென-ஒப்பாக, நோக்கும்-பாற்கின்ற, ஐயனும்-நளனும், தகைப்பரும்-தடுத்தற்கரிய, துயரொடு-துன்பத்துடன்,தளர்ந்து-வருந்தி,சாம்புமே-சோர்வானேய

னால், மகப்பிரிவினும்-மக்கட்பிரிவிலும், துயர்-துயரில், வலிது - வலிமையு டையது, யாவது, (ஒன்றுமில்லை)எ-று. (உரு)

சிலதியர்பரப்பிய தேங்கொண்மெல்லிதழ்
மலர்மிசைமிதிப்பினும் வருந்துசீறடி
நிலமிசைப்படுபர லுறைப்பநேரிழை
பலவுவேற்காளைபின் றொடர்ந்துபோயினள்

(ப் - ரை.) சிலதியர்-தோழிகள், பரப்பிய-பரவச்செய்த, தேங்கொள்-வாசனைகொண்ட, மெல்லிதழ்-மெல்லியவிதழையுடைய, மலர்மிசை-புஷ்பத்தின்மீது, மிதிப்பினும்-அடிவைத்தாலும், வருந்து-வருந்துகின்ற,சீறடி-சிறிய பாதங்களில், நிலமிசை - பூமியின்மீது, படு-உண்டாகிய, பரல்-பருக்கைகள், உரைப்ப-உருத்தும்படி, நேரிழை-தமயந்தியானவள், புலவுவேல்-புலானாற்றத்தையுடைய வேலையேந்திய, காளை-நளனது,பின்றொடர்ந்து-பின்னேதொடர்ந்து, போயினள்-சென்றாள், எ று. (உசு)

இதுமுதல் நாலுபாட்டால் நளனையிழந்தவர் செய்கை சொல்லப்படுகின்றது,

மடவரறன்னொடு மதுகைவேந்தனைக்
கடிமுரசருதகோ மறுகிற்காண்டலு
மிடியுறுமரவென வேங்கியேங்கிநின்
றுடல்வெறுத்துயிருக வுழல்கின்றார்சிலர்

(ப - ரை.) மடவரறன்னொடு-தமயந்தியுடன், மதுகைவேந்தனை - வலிமையுடையநளனை, கடி-சிறந்த, முரசு-பேரிகையினொலி, அருத - நீங்காத, கோமறுகில்-அரசர்வீதியில், காண்டலும்-பார்த்தவளவில், இடியுறு - மேகத்தினொலியைக்கேட்ட, அரவென-சர்ப்பத்தைப் போல, ஏங்கியேங்கி-மிகவு மேக்கமுற்று, நின்று-(திகைத்து) நின்று, உடல்வெறுத்து - தேகத்தைவெறுத்து, உயிருக-உயிர்நீங்கும்படி, சிலருழல்கின்றார்-சிலருழல்கின்றனர். எ-று.

மண்ணியமணிவரை யனையமார்பினன்
பெண்ணலங்கனிந்தவிப் பேதைதன்னொடு
நண்ணருங்கானிடை நடத்தல்காணவோ
கண்ணிணைபடைத்தனன் கமலத்தோனென்பார்.

(ப - ரை.) மண்ணிய-கழுவிய, மணிவரை-ரத்நமலையை, அனைய-ஒத்த, மார்பினன்-மார்பினையுடைய நளமகாராஜன், பெண்ணலங்கனிந்த - பெண்டன்மைமுதிர்ந்த, இப்பேதை தன்னொடும்-இத்தமயந்தியுடனே, நண்ணரு-போகப்படாத, கானிடை-காட்டினிடத்தில், நடத்தல்காணவோ-போதலைப் பார்க்கவோ, கமலத்தோன்-பிரமன், கண்ணிணை - இரண்டுநேத்திரங்களை, படைத்தனன்-(எங்களுக்கு) அமைத்தனன், என்பார்-என்று (சிலர்) சொல்லுவார்கள்; எ-று. (உசு)

மல்லடு திணிபுய மன்னர் மன்னவ
னெல்லையி றுயருழந் தேகக்காண்டலு
மொல்லையில் வெடித்துயி ரொழிந்ததில்லையாற்
கல்லினும்வலியதோ கலுழுநெஞ்சென்பார்.

(ப - ரை.) மல்-மல்லர்களை, அடு-கொல்லாநின்ற, திணி-பலம்பொருந்திய, புயம்-புசத்தையுடைய, மன்னர்மன்னவன்-அரசர்க்கரசனாகிய நளன், எல்லையில்-அளவில்லாத, துயருழந்து-துன்பமுற்று, ஏக-போக, காண்டலும்-பார்க்கவும், ஒல்லையில்-சீக்கிரத்தில், வெடித்து-மார்புவெடித்து, உயிர்-பிராணனானது, ஒழிந்ததில்லை-நீங்கியதில்லை, (ஆதலால்) கல்லினும்-கல்லைப்பார்க்கிலும், வலியதோ-வலிமையுடையதா, கலுழும்-துன்பப்படும், நெஞ்சு-மனமானது, என்பார்-என்று சொல்லுவார்கள். எ-று. (உஎ)

தாயினுமருள்புரி தரணிமன்னவன்
போயினன்கானிடை யென்றபோழ்தினின்
மாய்வுறப்பெற்றிலெ மன்னர்மன்னன்பா
லேயபேரன்பினரெம்மில்யாரென்பார்.

(ப - ரை.) தாயினும்-தாயைப்பார்க்கிலும், அருள்புரி-உயிர்களிடத்தில் கிருபையைச்செய்கின்ற, தரணிமன்னவன் - உலகத்தையாளுநளன், கானிடை-காட்டினிடத்தில், போயினன்-சென்றான், என்றபோதினில் - என்று சொன்னபொழுதிலே, மாய்வுறப்பெற்றிலேம் - இறக்கப்பெறவில்லை, (ஆதலால்) மன்னர்மன்னன்பால்-ராசாதிராசனாகிய நளனிடத்தில், ஏய-பொருந்திய, பேரன்பினர்-பேரன்பையுடையவர்கள், எம்மில் - எங்களைப்பார்கிலும், யார்-யாவர், (உளர்) என்பார்-என்று (சிலர்) சொல்வார்கள். எ-று. (உஅ)

[இப்பாட்டால் மந்திரி முதலாயினோர் வருந்துதல் சொல்லப்படுகின்றது.]

அடிதொழுமரசரு மமைச்சர்வெள்ளமு
மடவியரனைவரு மைந்தரீட்டமுங்
கொடிநெடுவீதிவாய்க் குறுகியெங்கணுங்
கடன்மடைதிறந்தெனக் கலுழ்ந்திட்டாரரோ.

(ப - ரை.) அடிதொழும்-பாதத்தை வணங்காநின்ற, அரசரும்-இராசர்களும், அமைச்சர்வெள்ளமும் - மந்திரிகூட்டங்களும், மடவியரனைவரும்-மாதர்கூட்டங்களும், மைந்தரீட்டமும்-புருஷர்களீட்டமும், கொடி-கொடிகளையுடைய, நெடுவீதிவாய்-நீண்ட வீதியினிடத்தில், குறுகி - வந்து, எங்கணும்-எவ்விடத்தும், கடன்மடைதிறந்தென-கடல்மடைதிறந்ததுபோல, கலுழ்ந்திட்டார்-அழுதார்கள். எ-று. (உகு)

[இப்பாட்டால் அரசனைத்தடுத்தற்கு அவன்கோட்பாட்டிழிவுகூறப்படுகின்றது.]

பொய்யுறுதீமொழி புகல்கிலேனெனு
மையநீயெம்மையின் கருளில்வேந்துதன்

கையகப்படுத்தினே கானிலேகிடின்
மெய்யினும்பொய்மையே விழுமிதாமென்பார்.

(ப - ரை.) பொய்யுறு-பொய்யாகிய, தீமொழி-தீயசொல்லே, புகல்கிலே னெறு-சொல்லமாட்டேனென்று, ஐய-ஐயனே, நீ-நீ, எம்மை-எங்களை, இங்கு-இப்பட்டணத்தில், அருளில்-கிருபையில்லாத, வேந்துதன்-அரசனுடைய, கையகப்படுத்தினே-கையிற்சேர்ததவனுய்கானிலேகின்-காட்டினிடத்துக்குப் போனல், நின்-உன்னுடைய, மெய்யினும்-சத்தியத்தைப்பார்க்கிலும், பொய்மையே-பொய்யுரையே, விழுமிதாம்-மேன்மையுடையதாம், என்பார்-என்று சொல்லுவார்கள். எ று. (கூ0)

[இப்பாட்டால் இச்சூதில் பொய்யுரைப்பினும் வழு வல்லவெனக் கூறப்படுகின்றது.]

இன்னுயிருய்யுமிங் கென்றபோழ்தினும்
பொன்னவிர்முலேயினர் புலர்ந்தகாலேயு
முன்னருஞ்சூதினும் பொய்மைமூரிவேற்
கன்னவிறேளினுய் கழறலாமென்பார்.

(ப - ரை.) இங்கு-இவ்விடத்தில், இன்னுயிர் - இனியவுயிரானது, உய்யும்-பிழைக்கும், என்றபோழ்தினும்-என்று சொல்லியகாலத்திலும், பொன்-தேமல், அவிர்-பிரகாசிக்கிற, முலேயினர்-முலேயையுடைய மடவார், புலர்ந்த காலேயும்-பிணங்கினகாலத்திலும், முன்னரும் - நினேக்கப்படாத, சூதினும்-சூதாட்டத்திலும், பொய்மை-பொய்யுரையை, மூரி-பலம்பொருந்திய, வேல்-வேலாயுதத்தை யேந்திய, கன்னவில்-மலேபோன்ற, தோளினுய் - தோளேயுடைய அரசனே, கழறலாம்-சொல்லலாம், என்பார்-என்றுசொல்லுவார்கள்.

[இப்பாட்டால் தங்களுரையை நளன் கொள்ளாதுகண்டு மந்திரி முதலாயினேர் வருத்தமடைந்தா ரெனப்படுகின்றது.]

எண்டிசைத்தலேவரு மெழில்கண்டேமுறத்
தொண்டைவாய்மடமயின் மாலேசூட்டுநாள்
புண்டருகோட்டுவெங் களிற்றிற்போதரல்
கண்டகனிவற்றையுங் காணுமோவென்பார்.

(ப - ரை.) எண்டிசைத் தலேவரும்-அஷ்டதிக்குப் பாலகரும், எழில்கண்டு-இந்நள னழகைப்பார்த்து, எமுற-(இவ்வள்வழகு நமக்கில்லேயென்று) மயக்கமுறுநிற்க, தொண்டைவாய் - கோவைக்கனியையொத்த அதரத்தையுடைய, மடமயில் - தமயந்தியானவள், மாலேசூட்டுநாள் - சுயம்வரமாலேயைச்

சூட்டியதினத்தில், புண்டரு-மாமிசம்பொருந்திய, கோட்டு - தந்தங்களையு டைய, வெம்-குரூரமான, களிற்று-யானையின்மீது,போதால் - (நீவிருவருக) கோலம்வருதலை, கண்டகண்-பார்த்தகண்கள், இவற்றையும் - இக்கொடிய செய்கைகளையும், காணுமோவென்பார்-பார்க்குமோவென்று சொல்லுவார் கள், எ-று. (௬௨)

இப்பாட்டால் நளனிடத் தன்புள்ளவராய்ப் புலம்புகின்ற அனைவர்க்கும் புஷ்கரன் பொறாமையால் கொடியவாக்கினை விதித்தானெனப் படுகின்றது.

மன்னவனேகுதற் கிரங்கிமாழ்குனர்
துன்னருங்கானிடைத் தொடர்ந்துசெல்குன
ரின்னுயிர்செகுப்பலென் றிசையில்புன்மையோ
னந்நகரிடைமுரச றைவித்தானரோ.

(ப - ரை.) மன்னவன்-நளமகாராசன்,ஏகுதற்கு-காட்டிற்போவதற்கு, இரங்கி-அழுது, மாழ்குனர்-துன்பப்படுகின்றவர்களையும், துன்னரும்-போக க்கூடாத, கானிடை-காட்டினிடத்தில், தொடர்ந்து - பின்னேதொடர்ந்து, செல்குனர்-போகின்றவர்களையும், இன்னுயிர் - இனியவுயிர்களை, செகுப்ப லென்று-கொல்லுவேனென்று, இசையில்-புகழில்லாத, புன்மையோன்-அற் பனாகிய புஷ்கரன், அந்நகரிடை-அந்நகரத்தினிடத்தில், முரசு-பேரிகையை, அறைவித்தான்-அடிப்பித்தான், எ-று, (௬௩)

வசைபடுமன்னவன் வாய்மையாலறை
விசிமுழவொலிசெவி வெதும்பக்கேட்டலு
மிசைபடுமன்னவற் கிரங்கினோரெலா
மசுணமென்புள்ளென வலமந்தேங்கினார்.

(ப - ரை.) வசைபடு-அபகீர்த்தியையுடைய, மன்னவன் - புஷ்கரராச னது, வாய்மையால்-ஆக்கினையால், அறை-அடிக்கப்பெற்ற,விசி-வாரினாலிறு க்கிய, முரசொலி-முரசினுடையசத்தத்தை, செவிவெதும்ப-காதுகள்வெப்ப முற, கேட்டலும்-கேட்டவளவில், இசைபடுமன்னவற்கு-புகழையுடைய நள மகாராசனுக்கு, இரங்கினோரெலாம்-அழுதவர்களெல்லாரும், அசுணமென் புள்ளென-அசுணமென்னும் பக்ஷியைப்போல, அலமந்து - மனஞ்சுழன்று, ஏங்கினார்-துன்பப்பட்டார்கள் எ-று.

(பொ - ரை.) கொடிய ஒலிகேட்கில் இறப்பது அசுணம்பறவைக்கியல் பாதலின் அதுபற்றி அது இவர்க்கு உவமானமாய்க் கூறப்பட்டது; (௬௪)

இதுமுத லிரண்டுபாட்டால் நளன் மந்திரி முதலானோர்க்கு விடைகொடுத்தல் சொல்லப்படுகின்றது,

வருந்திமுன்போதரு மமைச்சர்வாண்முகம்
புரிந்தனனோக்கிய பொருவில்வாய்மையான்

விரிந்தநூற்கேள்வியீ ரறத்தைவேரொடு
மரிந்தனிரெற்பிரிந் தாற்றலாமையால்.

(ப - ரை.) வருந்தி-வருத்தமுற்று, முன்போதரும்-முன்னேபோகும், அமைச்சர்-மந்திரிகளுடைய, வாண்முகம்-ஒளிபொருந்தியமுகத்தை, புரிந்தனன்-விரும்பினவனாய், நோக்கிய-பார்த்த, பொருவில்-ஒப்பில்லாத, வா மையான-சத்தியத்தையுடைய நளமகாராசன், விரிந்த-பரந்த, நூற்கேள்வி-சாஸ்திரவிசாரணை யுடையவர்களே, எற்பிரிந்து - என்னைப்பிரிந்து, ஆற்றலாமையால்-பொறுக்கமாட்டாமையினால், அறத்தை - தருமத்தை, வேரொடும்-வேருடனே, அரிந்தனிர்-அறுத்துவிட்டீர்கள், எ-று.

(பொ - ரை.) வாய்மையானென்னு மெழுவாய் மேல்வரும்பாட்டில் என்றானென்னும் பயனிலைகொண்டது. (௩௫)

மேவருஞ்சூதினிற் றோற்றமேதினி
யாவதும்வென்றல தாளவெண்ணுதல்
கோவில்பன்றவ னாணைமேற்கொடு
நீவிரென்வாய்மையை நிறுத்துவீரென்றான்

(ப - ரை.) மேவரும்-பொருந்துதற்கரிய, சூதினில்-சூதாட்டத்தினாலே, தோற்ற-தோற்றுப்போன, மேதினியாவதும்-உலகமெல்லாவற்றையும், வென்றலது-(நான்) வெற்றி கொண்டல்லாமல், ஆள-ஆளுகிறதற்கு, எண்ணுதல்-நினைத்தல், கோ-அரசர்களுக்கு, இயல்பன்று-தருமமன்று, (ஆதலால்) அவன்-அந்தபுஸ்கரனுடைய, ஆணை-ஆக்கினையை, மேற்கொடு-ஏற்றுக்கொண்டு, நீவிர்-நீங்கள், என்-என்னுடைய, வாய்மையை-சத்தியத்தை, நிறுத்துவீர்-நிலைநிறுத்துங்கள், என்றான்-என்றுசொல்லினான். எ-று, (௩௬)

முளரியால்வெந்தவெங் கானின்மொய்துக
ளளியொடுபுலம்பின ரழுதகட்கடைத்
துளியினிலவித்தனர் தொடரவெந்திறற்
களிமதக்களிற்றினான் கானிலேகினான்.

(ப - ரை.) முளரியால்-அக்கினியினால், வெந்த-நீறுபட்ட, வெங்கானில்-வெவ்வியகாட்டினிடத்து, மொய்-நிறைந்த, துகள்-தூள்களை, அளியொடு-இரக்கத்துடன், புலம்பினர்-புலம்பினவராய், அழுத-அழுத, கட்டை - கண்ணின்கடையிலிருந்து வராநின்ற, துளியினின்-நீர்த்துளியினால், அவித்தனர்-அவித்தவர்களாய், தொடர-பின்றொடர, வெந்திறல்-குரூரமானவலிமையையும், களி-தெருக்கையும், மதம்-மும்மதத்தையுமுடைய. களிற்றினான்-யானையையுடைய நளமகாராஜன், கானில்-காட்டினிடத்தில், ஏகினான் - சென்றான்.

திருகுவெஞ்சினக்கலி செல்வன்பின்றொடர்
பரிசனம்யாவுமெய் பதைத்துமீடர

முருகுறழ்பொற்பினுன் முன்னரேகிய
வருநெறிதெரிவுறு வஞ்சமாற்றினுன்.

(ப - ரை.) திருகு-மாறுபாட்டையும், வெம்-வெவ்விய, சினம்-கோபத்தையுமுடைய, கலி-கலிபுருஷனுனவன், செல்வன்-நளனுடைய, பின்றொடர்-பின்னே போகின்ற, பரிசனம் யாவும்-ஏவல் செய்வோரெல்லோரும், மெய்பதைத்து-சரீரந் துடித்து, மீமர-திரும்பும்படி, முருகுறழ் - சுப்பிரமண்ணியனையொத்த, பொற்பினுன்-அழகையுடைய நளமகாராசன், முன்னரேகிய-முன்னேபோன, அருநெறி-அரிய வழியானது, தெரிவுறு - தெரியாத, வஞ்சம்-மாயையை, ஆற்றினுன்-செய்தான். எ-று. (ருஅ)

ஆற்றுவஞ்சனையினு லழகுவாய்ந்தபொற்
கோற்றொடிதன்னெடுங் கொற்றமன்னவன்
றேற்றுதல்காண்கிலார் துயரமெய்திநின்
றூற்றெழுகண்ணின ருள்ளமாழ்கினுர்.

(ப - ரை.) ஆற்று-கலிசெய்த, வஞ்சனையினுல் - மாயையினுல், அழகுவாய்ந்த-அழகுபொருந்திய, பொற்கோற்றொடி-தன்னெடு தமயந்தியோடும், கொற்றமன்னவன்-வெற்றிபொருந்திய நளமகாராஜன், தோற்றுதல் - தெரிதலை, காண்கிலர்-பார்க்காதவர்களாய், துயரம்-துக்கத்தை, எய்தி-அடைந்து, நின்று-நின்று, ஊற்று-சுரப்பானது, எழு-தோன்றுகின்ற, கண்ணினர்-கண்களையுடைய பரிசனங்கள், உள்ளமாழ்கினுர்-உள்ளத்தில் மயங்கினுர்கள். எ-று.

ஆயினுமினிதருள் புரியுமெம்பிரான்
றாயமென்மலரடிச் சுவடுகாண்கிலேம்
போயினன்யாண்டெவர் புணர்ப்பினுயதிம்
மாயமென்றருநெறி மருங்கிற்றேடுவார்.

(ப - ரை.) ஆயினும்-தாயைக்காட்டினும், இனிது-இனிதாக, அருள்-கிருபையை, புரியும்-செய்கின்ற, எம்பிரான் - எங்களரசனுகிய நளமகாராசனது, தூய-பரிசுத்தமாகிய, மெல்-மெல்லிய, மலர் - தாமரைமலர்போன்ற, அடிச்சுவடு-அடிக்குறியை, காண்கிலேம்-நாங்கள் காணவில்லை, யாண்டு-எவ்விடத்தில், போயினன்-போயினுன், இம்மாயம்-இந்தவஞ்சனையானது, எவர் புணர்ப்பினுனது-யார்சம்பத்தத்தினு லுண்டாகியது, என்று - என்றுபேசிக்கொண்டு, அருநெறி-அரியவழியை, மருங்கில்-பக்கங்களில், தேடுவார்-தேடுவார்கள், எ-று. (சு0)

தேடினர்புகுமிடந் தெரியலாமையில்
வாடினரருநெறி மருங்கினேர்வழி
கூடினரின்னுயிர் கூற்றங்கைக்கொள
வீடினராமெனவீழ்ந்துவிம்மினுர்.

(ப - ரை.) தேடினர்-தேடினவர்கள், புகுமிடம்-அரசன்போனவிடம், தெரிகிலாமையில்-அறியாதபடியால், வாடினர்-வாடினுர்கள். அருநெறி-அரிய

வழியினது, மருங்கில்-பக்கத்தில், ஓர்வழி-ஒருவழியை, கூடினர்-அடைந்தார்கள், இன்னுயிர்-இனியவுயிரை, கூற்றங்கைக்கொள் - யமன்கொண்டுபோக வீடினராமென-இறந்தவர்போல, வீழ்ந்து-நிலத்திலேவிழுந்து, விம்மினார்-அழுதார்கள், எ-று. (௬௧)

கொன்னுனையலங்கல்வேற் குலவுத்தோளினான்
சென்னெறிகண்களிற் றெரியக்காண்கில
ரின்னலுற்றழுதழு தேங்கியேங்கியத்
தொன்னகரடைந்தனர் தொடர்ந்துளோரெலாம்.

(ப - ரை.) கொல்-கொல்லாநின்ற, நுனை-கூர்மையுடைய, அலங்கல்-வெற்றிமாலையணிந்த, வேல்-வேலையுடைய, குலவுத்தோளினான் - திரண்ட தோளையுடைய நளமகாராசன், செல்நெறி-போனவழியை, கண்களில்-நேத்திரங்களில், தெரிய-அறிய, காண்கிலார்-காணாதவர்களாய், இன்னலுற்று-துன்பமுற்று, அழுதழுது-புலம்பிப்புலம்பி, ஏங்கியேங்கி-மிகவு மேக்கமுற்று, தொடர்ந்துளோரெலாம்-பின்றொடர்ந்துபோனவர்களெல்லாரும், அத்தொன்னகர்-தங்கள் பழையநகரை, அடைந்தனர்-சேர்ந்தார்கள், எ-று. (௬௨)

இதுமுதல் எழுபாட்டால் நளன்சென்றபின் அத்தேசத்தி
லுண்டாகிய செய்கை சொல்லப்படுகின்றது.

பறவைகள்குடம்பையுட் பார்ப்பருத்தில
கறவைகள்புனிற்றிளங் கன்றுக்கூட்டில
நறவுயிர்த்தலர்கில மலர்களுமவே
லிறைவனேகினன்வனத் தென்றபின்னரே.

(ப - ரை.) நாமம்-அச்சத்தைத் தருகின்ற, வேல்-வேலையுடைய, இறைவன்-நளமகாராஜன், வனத்து - காட்டினிடத்தில், ஏகினனென்றபின்னர்-போயினானென்றபின்பு, பறவைகள்-பக்ஷிகள், குடம்பையுள் - கூண்டுக்குள்ளே, பார்ப்பு-தங்குஞ்சுகளை, அருத்தில-இரையூட்டவில்லை, கறவைகள் - பசுக்கள், புனிற்றிளங்கன்றுக்கு-மிகுந்த விளங்கன்றுகளுக்கு, ஊட்டில-பாலூட்டக்கொடுத்தில, மலர்கள்-புஷ்பங்கள், நறவுயிர்த்து-தேனைத்தந்து, அலர்கில-மலரவில்லை, எ-று. (௬௩)

வான்மறந்தனதுளி வழங்கலின்னிசைத்
தேன்மறந்தனமட மகளிர்தேங்குழல்
பான்மறந்தனமசுங் குழவிபாய்கவுட்
கான்மதமறந்தன களிநல்யானையே.

(ப - ரை.) வான்-மேகங்கள், துளிவழங்கல்-மழைபெய்தலை, மறந்தன-மறந்துவிட்டன, இன்னிசை-இனிய இசையையுடைய, தேன்-வண்டுகள், மடமகளிர்-இளமைபொருந்திய ஸ்திரீகளுடைய, தேங்குழல் - வாசனைபொருந்திய அளகத்தை, மறந்தன-மறந்துவிட்டன, பசுங்குழவி-இளங்குழந்தைகள், பாலுண்ணலை, மறந்தன-மறந்துவிட்டன, களி-செருக்கையுடைய, நல்-நல்ல,

யானை-யானைகள், பாய்-பெருகாநின்ற, கவுள்-கன்னத்தி லுண்டாகிய, கான் மதம்-வாசனைபொருந்திய மதவருஷத்தை, மறந்தன-மறந்துவிட்டன, எ-று. ஏ-அசை, (சச)

மலர்ப்பசுந்தாழ்குழன் மகளிர்கேள்வர்பாற்
புலத்தலுங்கலத்தலும் பொருந்துறாமையா
லலத்தகமிழந்தன குஞ்சியந்நலார்
முலைச்சுவடிழந்தன முழவுத்தோள்களே.

(ப - ரை.) மலர்-புட்பங்களையணிந்த, பசு-பசுமையாகிய, தாழ்-நீண்ட, குழல்-கூந்தலையுடைய, மகளிர்-மாதர்கள், கேள்வர்பால்-கணவரிடத்தில், புலத்தலும்-பிணக்கத்தையும், கலத்தலும்-புணர்ச்சியையும், பொருந்துறாமை-அடையாமையால், குஞ்சி-குடுமிகள், அலத்தகம்-செம்பஞ்சுக்குழம்பை, இழந்தன-நீங்கிவிட்டன, அந்நலார்-அந்த மாதருடைய, முலைச்சுவடு - ஸ்தனத்தின் குறியை, முழவு - மத்தளம்போன்ற, தோள்கள்-புசங்கள், இழந்தன-நீங்கின, எ-று.

(போ-ரை.) ஊடில் அது தீர்வதற்குத் தலைவி பாதத்தில் தலைவன் வணங்கில் அப்பொழுது அவள்பாதத்துச் செம்பஞ்சு அவன்குடுமியிற்படும், புணர்ச்சியுண்டானல் அவர் ஸ்தனத்தில் எழுதிய சந்தனக்கோல மடவர்புயத்தில் பதியும், இவை துன்பத்தினல் யின்மையால் இழந்தனவென்றார். (சரு)

அள்ளிலைவேற்கணா ரங்கைமீதுவைத்
தெள்ளருமென்மொழி பயிற்றலின்மையால்
வள்ளவாயாரமு துண்ணும்வண்சிறைக்
கிள்ளையுந்தேன்மொழி கிளக்கலற்றவே.

(ப - ரை.) அள்-கூர்மைபொருந்திய, இலை-இலைபோன்ற, வேல்-வேலாயுதத்தை யொத்த, கணார்-கண்களையுடைய ஸ்திரீகள், அங்கைமீது-அழகிய கையின்மீது, வைத்து-வைத்துக்கொண்டு, எள்ளரு-இகழ்ச்சியில்லாத, மென்-மிருதுவான, மொழி-சொற்களை, பயிற்றலின்மையால்-கற்பிக்காதபடியால், வள்ளவாய்-கிண்ணத்தினிடத்தில், ஆர்-நிறைந்த, அமுது-பாலை, உண்ணும்-குடிக்கும், வள்-வளப்பம்பொருந்திய, சிறை-இறகையுடைய, கிள்ளையும்-கிளிப்பிள்ளையும், தேன்-மதுரமாகிய, மொழி-சொற்களை, கிளக்கலற்ற - பேசுதலொழிந்தன எ-று. (சசு)

வாம்பரியிழந்தன வாவுமைங்கதி
யேம்பலின்விழவணி யிழந்தகோமறு
காம்பல்வாயிழந்தன முறுவலாரகிற்
றீம்புகையிழந்தன செம்பொன்மாடமே.

(ப - ரை.) வாம்-தாவுகின்ற, பரி-குதிரைகள், வாவும்-தாவாநின்ற, ஐங்கதி-ஐவகை நடையினையும், இழந்தன-நீங்கிவிட்டன, ஏம்பலின்-வருத்தத்துடன், விழவணி-உற்சவாலங்காரத்தை, கோமறுகு-ராஜவீதிகள், இழந்த-நீங்கிவிட்ட, ஆம்பல்-செவ்வல்லிமலர்போன்ற, வாய்-ஸ்திரீகளுடைய வாய்கள்,

முறுவல்-புன்சிரிப்பை, இழந்தன-நீங்கிவிட்டன, ஆர்-நிறைந்த, அகில்-அகிற் கட்டையினது, தீ-இனிமையாகிய, புகை-புகையை, செம்பொன்-சிவந்தபொன்னாற்செய்த, மாடம்-உபரிகைகள், இழந்தன-நீங்கின, எ-று. ஏ-அசை.

பாவலரிழந்தனர் பரிசிலுண்பலி
தேவருமிழந்தனர் கலியின்றீமையாற்
காவலனெடிபடு கானிலேகலால்
யாவருமிழந்தன ரின்பமென்பவே.

(ப - ரை.) பாவலர்-புலவர்கள், பரிசில்-தியாகத்தை, இழந்தனர்-நீங்கினார்கள், உண்-உண்ணப்பட்ட, பலி-அவியை, தேவரும்-தேவர்களும், இழந்தனர்-இழந்துவிட்டார்கள், கலியின்-கலிபுருஷனுடைய, தீமையால் - பொல்லாங்கினால், காவலன்-நளமகாராசன், நெடிபடு-சிள்வண்டையுடைய, கானில்-காட்டில், ஏகலால்-போதலினால், யாவரும்-எல்லோரும், இன்பமென்பனவற்றை, இழந்தனர்-நீங்கினார்கள், எ-று. (சஅ)

அறந்தலைமயங்கின பொய்ம்மையார்ந்தன
மறந்தலையெடுத்தன தீமைமல்கின
திறம்பினமனுநெறி தவங்கடீர்ந்தன
நிறைந்தனவஞ்சனை நேமியெங்குமே.

(ப - ரை.) நேமியெங்கும்-உலகமெங்கும், அறம்-தருமம், தலைமயங்கின-தலைதடுமாறின, பொய்மை-அசத்தியம், ஆர்ந்தன-நிறைந்தன, மறம் - பாவங்கள், தலையெடுத்தன-வளர்ந்தன, தீமை-துர்நடத்தைகள், மல்கின - நெருங்கின, மனுநெறி-இராஜதருமம், திரும்பின-கெட்டன, தவங்கள்-தவசுகள், தீர்ந்தன-நீங்கின, வஞ்சனை-வஞ்சனைகள், நிறைந்தன-நிறைம்பின, எ-று.

நகர்நீங்கு படலம்-முற்றிற்று.
ஆ. செய்யுள் கoகசு.

---

## கான்புகு படலம்.

இப்படலத்தால் தென்னகரைவிட்டு நீங்கிய நளமகாராசன் பிறர் நகரில் தன்னிலைதப்பிச் செல்வதில் விருப்பமின்றிக் கானகம் புகுதல் சொல்லப்படுகின்றது.

கலி விருத்தம்.

[இதுமுதல் மூன்றுபாட்டால் நளன்சென்றவிடத்துண்டாகிய சிறப்புச்சொல்லப்படுகின்றது.]

களிமயில்குனித்திடக் காலமன்றியுந்
துளிமுகில்பிளிற்றின துணர்த்தபூங்கொடி.
முளிசினைதளிர்த்தன முகைத்தபைந்தரு
நளிகடற்றனையானடந்தகானமே.

(ப - ரை.) நளிர்-குளிர்ச்சிபொருந்திய, கடல்-சமுத்திரத்தையொத்த, தானையான்-சேனையையுடைய நளமகாராஜன், நடந்த-சென்ற, கானம்-காட்டினில், களி-களிப்பையுடைய, மயில்-மயில்கள், குனித்திட-கூத்தாட, காலமன்றியும்-கார்காலமல்லாமலும், துளி-நீர்த்துளிகளை, முகில் - மேகங்கள், பிலிற்றின-பெய்தன, பூ-பொலிவுபொருந்திய, கொடி-கொடிகள், துணர்த்த-பூங்கொத்துகளைச் செய்தன, முளிசினை-உலர்ந்தகிளைகள், தளிர்த்தன-துளிர்த்தன, பைந்தரு-பசுமையாகிய விருக்ஷங்கள், முகைத்த-அரும்பின, எ-று.

விள்ளருமதரிடை வெதும்புவெம்பரல்
கள்ளவிழ்மலரெனக் குழைந்துகட்டின
வொள்ளழற்கதிர்சுட வுலரும்வெஞ்சுரம்
வள்ளவாய்மலர்விரி மருதம்போன்றதே.

(ப - ரை.) விள்ளரு-சொல்லுதற்கரிய, அதரிடை-வழியிலே, வெதும்பு-சுடாநின்ற, வெம்-வெப்பமான, பரல்-மணியாம்பருக்கைகள், கள்-தேனுடன் அவிழ்-விரியாநின்ற, மலரென-புஷ்பம்போல, குழைந்து-மிருதுவாய், காட்டின-காண்பித்தன, ஒள்-பிரகாசம்பொருந்திய, அழல்-அழற்றுநின்ற, கதிர்-சூரியகிரணங்கள், சுட-தகிக்க, உலர்-காய்ந்த, வெம் - வெப்பமாகிய, சுரம்-பாலைநிலமானது, வள்ளம்-கிண்ணம்போல, வாய் - முகத்தையுடைய, மலர்-புட்பங்கள், அவிழ்-விரியாநின்ற, மருதம்-மருதநிலத்தை, போன்றது-ஒத்திருந்தது. எ-று. ஏ-அசை. (உ)

ஊறுசெய்தூண்சுவைத் துடம்புவீக்கிய
வாறலைகள்வரு ளளியராயினர்
வேறினியுரைப்பதென் வெருவுமாவொடு
மாறுகொளுழுவையு மாற்றந்தீர்ந்தவே

(ப - ரை.) ஊறுசெய்து-கொலைசெய்து, ஊன்-மாமிசத்தை, சுவைத்து-புசித்து, உடம்பு-சரீரத்தை, வீக்கிய-பருக்கச் செய்த, ஆறலை-வழியினிடத்திற் பறிக்கின்ற, கள்வரும்-திருடரும், அளியராயினர்-கிருபையுடையராயினர்கள் வேறு-வேறாக, இனி-மேல், உரைப்பதென்-சொல்லுவதென்னை, வெருவும்-அஞ்சாநின்ற, ஆவொடு-பசுக்களுடனே, மாறுகொள் - பகைகொண்ட, உழுவையும்-புலியும், மாற்றம்-பகையை, தீர்ந்த-நீங்கின, எ-று. (ங)

ஆயிடையுயிர்நிகரணங்கனுளொடு
மேயதன்னகர்வயின் விசும்புபோழ்ந்துலாங்
காய்கதிர்நுழைகலாக் காவினுடல்போற்
போயினனழலுமிழ் புலவுவேலினன்.

(ப - ரை.) ஆயிடை - அந்தப்பாலைநிலத்தில், உயிர்நிகர் - தன்னுயிரை யொத்த அணங்கனாளொடும் - தெய்வப்பெண்ணையொத்த தமயந்தியுடன், மேய-பொருந்திய, தன்-தன்னுடைய, நகர்வயின்-பட்டணத்தின் கண், விசும்பு-மேகங்களை, போழ்ந்து-பிளந்துகொண்டு, உலாம்-உலாவுகின்ற, காய்-காயாநின்ற, கதிர்-சூரியகிரணமானது, நுழைகலா-நுழையக்கூடாத, காவின்-சோலையில், ஆடல்போல்-விளையாடல்போல், அழல் - அக்கினியை, உமிழ்-கக்காநின்ற, புலவு-புலால்நாற்றம் பொருந்திய, வேலினன் - வேலையுடைய நளமகாராசன், போயினன்-நடந்தான். எ-று. (௪)

அள்ளிலைப்பூணினா னேகுமாற்றிடைக்
கொள்ளைவண்டினமிழி நறவுகூட்டுணும்
வள்ளவாய்மலரவிழ்வாவியங்கரைப்
புள்ளுருக்கொடுகலி போயினானரோ.

(ப - ரை.) அள்-நெருங்கிய, இலை-இலைபோன்ற, பூணினான்-ஆபரணங்களையணிந்த நளமகாராசன், ஏகும்-போகாநின்ற, ஆற்றிடை - காட்டுவழியிலே, கொள்ளை-மிகுதியாகிய, வண்டினம்-சுரும்புக்கூட்டங்கள், இழி-பெருகாநின்ற, நறவு-தேனை, கூட்டுணும்-கொள்ளைகொள்ளும்படியிருக்கின்ற, வள்ளம்-கிண்ணம்போன்ற, வாய்-முகத்தையுடைய, மலர்-புஷ்பங்கள், அவிழ்-விரியாநின்ற, வாவி-தடாகத்தினது, அம்-அழகிய, கரை - கரையினிடத்து, புள்ளுருக்கொடு-அன்னத்தினுருவைக்கொண்டு, கலி - கலியன், போயினான்-சென்றான், எ-று. (௫)

வாவியின்மருங்குநன் மணிகள்கோத்தெனத்
தூவியம்பொற்சிறை மென்புட்டோன்றலு
மோவியரெழுதரு முருவப்பைங்கொடி
காவியங்கண்ணிணை களிப்பநோக்கினாள்.

(ப - ரை.) வாவியின்-தடாகத்தினது, மருங்கு-பக்கத்தில், நல் - நல்ல, மணிகள்-முத்துக்களை, கோத்தென-கோவையிட்டதுபோல, தூவி-தூவியெனப்பட்ட, அம்-அழகிய, பொன்-பொற்பிரகாசம்பொருந்திய, சிறை-இறகையுடைய, மெல்-மிருதுவாகிய, புள்-அன்னப்புள்ளானது, தோன்றலும்-காணலும், ஓவியர்-சித்திரக்காரர்கள், எழுதரு-எழுதற்கரிய, உருவம்-வடிவத்தையுடைய, பைங்கொடி-பசுமையாகிய கொடிபோன்ற தமயந்தியானவள், காவி-நீலோற்பலத்தையொத்த, அம்-அழகிய, கண்ணிணை - இரண்டுநேத்திரமும், களிப்ப-சந்தோஷிக்கும்படி, நோக்கினாள்-பார்த்தாள். எ-று. (௬)

பன்மலர்ஞெலிய பணிகொள்வாவியிற்
பொன்னவிர்கொடுஞ்சிறைப் புள்ளைநோக்குறூ

மன்னம்மணநிலை முடித்தவண்சிறை
யன்னனமென்புள்ளினீ தழகுவாய்ந்ததே.

(ப - ரை.) பல் எாஞவிதமான, மலர்-புஷ்பங்கள், கஞலிய-நெருங்கிய, பனிகொள்-குளிர்ச்சியாநின்ற, கொடுஞ்சிறை-கொடுமையான இறகையுடைய, புள்ளை-அன்னத்தை, நோக்குரு-பார்த்து, மன்ன-அரசனேநம்முடைய, மண நிலை-விவாகத்தை, முடித்த-நிறைவேற்றின, வண்சிறை - வளப்பமாகிய இற கையுடைய, அன்னமென்புள்ளின்-தெய்வ அன்னத்தைக்காட்டினும், ஈது-இப்பறவை, அழகு-அழகை, வாய்ந்தது-பொருந்தியது. எ-று. (எ)

மற்றுமோருயிரென வளர்த்தபூவையுஞ்
சொற்றருகிள்ளையு மறப்பத்தூமணிப்
பொற்றடந்தோளினய் பொன்னம்புள்ளினைப்
பற்றிநீதரிகெனப் பணிந்துகூறினள்.

(ப - ரை.) மற்றுமோர்-மற்றொரு, உயிரென - உயிர்போல, வளர்த்த-வளர்த்த, பூவையும்-நாகணவாய்ப்புள்ளையும், சொல்-மொழிகளை, தரு-சொல் லாநின்ற, கிள்ளையும்-கிளிப்பிள்ளையும், மறப்ப-மறக்கும்படி, தூ-பரிசுத்தமா கிய, மணி ரத்நவடமணிந்த, பொன்-அழகிய, தடம் - விசாலமாகிய, தோளி னய்-புயத்தையுடைய அரசனே, பொன் - பொன்போன்ற, அம் - அழகிய, புள்ளினை-அன்னத்தை, பற்றி-பிடித்து, நீதருகென-நீகொடுப்பாயாகவென்று பணிந்து-வணங்கி, கூறினள்-சொன்னள். எ-று. (அ)

ஓர்துகிலிருவரு முடுத்துமற்றையோர்
காரகிற்றீம்புகை கமழுநீவிகொண்
டேர்குடியிருந்தன விலைகொள்பூணினய்
வார்சிறைப்புள்ளினை வளைத்துமென்றனள்.

(ப - ரை.) ஓர்துகில்-ஓராடையை, இருவரும்-நாமிரண்டுபேரும், உடுத் து-தரித்துக்கொண்டு, மற்றையோர்-மற்றொரு, கார்-கறுத்த, அகில்-அகிற்க ட்டையினது, தீ-இனிமையாகிய, புகை-தூமம், கமழும் - பரிமளியாநின்ற, நீவிகொண்டு-ஆடையைக்கொண்டு, ஏர்-அழகு குடியிருந்தது, அன்ன-வாசஞ் செய்வதையொத்த, இலைகொள்-தழைதலைக்கொண்ட, பூணினய்-ஆபரணங் களையுடைய அரசனே, வார்சிறை-நீண்டஇறகையுடைய, புள்ளினை-அன்னத் தை, வளைத்துமென்றனள்-பிடிப்போமென்று சொன்னள். எ-று. (க)

கருந்தடங்கண்ணிதன் னுள்ளங்காமுறத்
திருந்துவேற்றடக்கையான் றுகிலிற்சேர்த்தலும்
பொருந்தியதுகிலொடும் வஞ்சம்பூண்டெதி
ரிருந்தபுள்ளந்தரத்தெழுந்துபோயதே.

(ப - ரை.) கரு-கறுத்த, தடம்-விசாலமாகிய, கண்ணிதன்-கண்களையுடைய தமயந்தியினது, உள்ளம்-மனது, காமுற-இச்சிக்க, திருந்து - திருத்தமாகிய, வேல்-வேலையேந்திய, தடம்-பருத்த, கையான்-கையையுடையஅரசன், துகிலில்-ஆடையில், சேர்த்தலும்-சேர்த்தவளவில், பொருந்திய-தன்மேற்சேர்ந்த, துகிலொடும்-ஆடையோடும், வஞ்சகம்-கபடத்தை, பூண்டு - கொண்டு, எதிரிருந்த, புள்-அன்னம், பொருஅர்தரத்து - ஆகாசத்தில், எழுந்து-எழும்பி, போயது-போயிற்று, எ-று. (௪0)

புனைதுகில்கவர்ந்துபைம் பொன்னிறத்தபுள்
பனியிருவிசும்பினிற் பறத்தல்காண்டலு
மனிவிதனருந்துயர் நோக்கிமாழ்கினான்
வினைவலியிதுவென மெலிவுநீக்கினான்.

(ப - ரை) புனை-தரித்திருந்த, துகில்-ஆடையை, கவர்ந்து - கிரகித்துக்கொண்டு, பைம்பொன்-பசுமையாகிய பொன்போன்ற, நிறத்த - நிறத்தையுடைய, புள்-அன்னமானது, பனி - குளிர்ந்த, இரு - பெருமைபொருந்திய விசும்பினில்-ஆகாசத்தினில், பறத்தல்-பறந்துபோதலை, காண்டலும்-கண்டவளவில், மனைவிதன்-மனையாளது, அருந்துயர்-அரிதான துக்கத்தை, நோக்கி-பார்த்து, மாழ்கினான்-வருந்தினான், வினை-ஊழ்வினையினது, வலி-உறுதி, இதுவென-ஈதென்று, மெலிவு-துன்பத்தை நீக்கினான்-போக்கினான். எ-று.

கல்லதர்நடந்துபூங் கமலம்வாட்டிய
மெல்லடிசிவப்புறல் வீழிவாய்மயிற்
கொல்லுமேயென்மன முருகியுந்தையூர்
செல்லுநீணெறியிது வென்றுசெப்பினான்.

(ப - ரை.) கல்லதர்-மலைவழியில், நடந்து-நடந்து, பூ-அழகிய, கமலம்-தாமரைமலரை, வாட்டிய-கெடுத்த, மெல்லடி-மிருதுவான பாதமானது, சிவப்புறல் வீழி-வீழிப்பழம்போன்ற, வாய்-அதரத்தையுடைய, மயிற்கு - மயில்போன்ற தமயந்திக்கு, ஒல்லுமேயென-கூடுமோவென்று, மனம்-மனது, உருகி-இளகி, உந்தை-உன்தகப்பனது, ஊர் - குண்டினபுரத்துக்கு, செல்லும்-போகாநின்ற, நீள-நீண்ட, நெறி-மார்க்கம், இதுவென்று-இதுவென்று, செப்பினான்-சொன்னான். எ-று. (௪௨)

ஆங்கதுகேட்டலு மழுதுமால்கிநொந்
தீங்குநின்னடியனேன் பிழைத்ததியாதகொல்
பூங்கழற்குரிசிலோய் பொறியிலேன்றனை
நீங்கவோவிவ்வுரை நிகழ்த்தினாயென்றாள்.

(ப - ரை.) ஆங்கு-அவ்விடத்தில், அது-அந்தச் சொல்லை, கேட்டலும்-கேட்டவளவில், அழுது-புலம்பி, மாழ்கி-வருந்தி, நொந்து-மனநொந்து, ஈங்கு - இவ்விடத்தில், நின் - உனக்கு, அடியேனன்-அடிமைத்திறம் பூண்ட,யா

ன், பிழைத்தது-செய்தகுற்றம், யாது-எது, பூ-அழகிய, கழல் - வீரக்கழலை யணிந்த, குரிசிலோய்-அரசனே! பொறியிலேன்றனை-யறிவில்லாத என்னை, நீங்கவோ-பிரியவோ, இவ்வுரை-இந்த வசனத்தை, நிகழ்த்தினாய்-சொன்னாய், என்றாள்-என்று (தமயந்தி) சொல்லினாள், எ-று. (௧௩)

செயிராறுமதிமுகம் பசிப்பசிந்தைநொந்
தயர்வெடுகண்பனித் தவலங்கோடலை
மயிலியற்போதைநிற் பிரிந்துவாழ்வெனே
யுயிர்பிரிந்தலுடலுய்யுமோவென்றான்,

(ப - ரை.) செயிராறு-குற்றமற்ற, மதி-சந்திரன்போன்ற, முகம்-வதனமானது, பசப்ப-பசந்துபோக, சிந்தைநொந்து - மனநொந்து, அயர்வொடு-சோர்வுடனே, கண்பனித்து-கண்ணீர்விட்டு, அவலங்கோடலை துன்பத்தைக்கொள்ளாதே, மயில்-மயில்போலும், இயல்-சாயலையுடைய, பேதை-தமயந்தியே! நிற்பிரிந்து-உன்னைப்பிரிந்து, வாழ்வெனே-வாழ்வேனா உயிர்பிரிந்தால்-உயிர்நீங்கினால், உடல்-தேகம், உய்யுமோ-பிழைக்குமோ, என்றான் - என்று (நளமகாராசன்.) சொன்னான், (௧௪)

முருகுயிர்த்தளியின மூசுபூங்குழற்
கருதருபெருந்துயர் காண்கிலேனெனாப்
பரிநெடுந்தேரொடும் பரிதிவானவ
னுரவுநீர்க்கருங்கட லொளித்திட்டானரோ.

(ப - ரை.) முருகு-தேனை, உயிர்த்து-பெற்று, அளியினம்-வண்டுக்கூட்டங்கள், மூசு-மொய்க்கின்ற, பூ-பூவையணிந்த, குழல்-கூந்தலையுடைய தமயந்தியினது. கருதரு-நினைத்தற்கரிய, பெருந்துயர்-பெரிதாகிய, துன்பத்தை காண்கிலேனெனா-பார்க்கமாட்டேனென்று, பரி-குதிரைகட்டிய, நெடு-நெடிய, தேரொடும்-ரதத்துடனே, பருதிவானவன்-சூரியதேவன், உரவுநீர்-உவர்நீரையுடைய, கருங்கடல்-கறுத்தசமுத்திரத்தில், ஒளித்திட்டான் - மறைந்தான். எ-று. (௧௫)

மாயிருஞாலமும் வானுநுங்கிய
பாயிருட்கங்குலிற் பாவைதன்னொடும்
போயரின்முற்றிய பொலிவின்மண்டப
மேயினனரசர்கோன் விதியின்கொட்பினால்.

(ப - ரை.) மா-மகத்தாகிய, இரு-பெரிய, ஞாலம்-பூமியையும், வானும்-ஆகாயத்தையும், நுங்கிய - விழுங்கிய, பாய் - பரவிய, இருள்-இருட்டையுடைய, கங்குலில்-இராத்திரியில், பாவைதன்னொடும்-தமயந்தியுடனே, போய்-சென்று, அரில்-தூறுகள், முற்றிய-நிறைந்த, பொலிவில்-சிறப்பற்ற, மண்டபம்-ஓர் மண்டபத்தை, அரசர்கோன்-ராசாதிராசனாகிய நளமகாராசன், விதியின்-வினையினது, கொட்பினால்-திரிபினால், மேயினன்-அடைந்தான், எ-று.

இன்னகிற்புகைதவழ்ந் தினிதின்மென்மைய
பன்மலரமளிமேற் பள்ளிகொள்பவர்
புன்னுனைபரந்தவெம் பொடிகொள்பார்மிசை
மன்னினரூழினும் வலிதியாவதே.

(ப - ரை.) இன்-இனிதாகிய, அகிற்புகை-அகிற்றூமம், தவிழ்ந்து-ஊர்ந்து, இனிதின்-இன்பமாய், மென்மைய-மிருதுவாகிய, பல - நானாவிதமான, மலர்-புஷ்பம்பரப்பிய, அமளிமேல்-படுக்கையின்மீது, பள்ளிகொள்பவர்-சயனிப்பவராகிய (தமயந்தி நளனிருவரும்) புல்-புல்லினது, நுனி-நுனிகள், பரந்த-பரவிய, வெம்-வெவ்விய, பொடிகொள் - புழுதியைக்கொண்ட, பார்மிசை-பூமியின்மேல், மன்னினர்-படுத்தார்கள் (ஆதலால்) ஊழினும்-ஊழினைக்காட்டிலும், வலிது-வன்மையையுடையது, யாவது-யாது எ-று. (கஎ)

அனிச்சமென்புதுமல ரமளிமேயினும்
பனித்திடுமெய்யெனப் பதைத்துவாடுவேன்
கனிப்படுகிளவிவெம் பொடியிற்கண்படி
லினித்தமியேனுயி ரெங்கனுய்யுமே.

(ப - ரை.) அனிச்சம்-அனிச்சவிருக்ஷத்தினது, மெல் - மிருதுவாகிய, புதுமலர்-புதியமலரையுடைய, அமளி-மெத்தையிலே, மேயினும்-படுத்தாலும், மெய்-சரீரமானது, பனித்திடுமென-வருந்துமென்று, பதைத்து - துடித்து, வாடுவேன்-சோர்வேன், கனிப்படு-பழச்சுவைபொருந்திய, கிளவி-வசனத்தையுடைய தமயந்தி, வெம்பொடி-வெவ்வியபுழுதியில், கண்படில் - நித்திரைசெய்யில், இனி-இனிமேல், தமியேனுயிர்-தனியாகிய என்னுயிர், எங்ஙன்-எவ்வடி, உய்யும்-பிழைக்கும் எ-று. (கஅ)

கண்ணகன்புவிக்கெலாங் களைகணுகிய
தணமதிநெடுங்குடை விதர்ப்பன்றாழ்குழ
னண்ணருமித்துய ருழந்துநண்ணுமே
லெண்ணின்மற்றியார்துய ரெய்திடாரென்றான்.

(ப - ரை.) கண்ணகல்-இடமகன்ற, புவிக்கெலாம்-பூமிக்கெல்லாம், களைகணுகிய-ஆதாரமாகிய, தண்-குளிர்ந்த, மதி-சந்திரன்போன்ற, நெடு-நீண்ட, குடை-குடையையுடைய, விதர்ப்பன் - விதர்ப்பதேசத்தையாளும் வீமராசனீன்ற, தாழ்குழல்-தமயந்தியானவள், நண்ணரு - பொருந்துதற்கரிய, இத்துயர்-இந்தத்துன்பத்தை, உழந்து-வருந்தி, நண்ணுமேல் - அடையுமானால், எண்ணின்-நினைக்குமிடத்தில், யார்-எவர்கள், துயர்-துன்பத்தை,எய்திடார்-அடையார்கள், என்றான்-என்றுசொன்னான், எ-று. (கசு)

வளைகடலுலகினின் மன்னர்தாடொழ
வுளையரிப்பூந்தவி சுரையுமெம்பிரான்
முளரியாலெங்கணு முற்றுமண்டபத்
தெளியர்போலிருத்திகொ லென்றுவிம்மினாள்.

(ப - ரை.) வளைகடல்-சமுத்திரஞ்சூழ்ந்த, உலகினில்-உலகத்தில், மன்னர்-அரசர்கள், தாதொழ-பாதத்தில் வணங்க, உளை - புறமயிரினையுடைய, அரி-சிங்கந்தாங்கிய, பூந்தவிசு - அழகுபொருந்திய ஆசனத்தில், உறையும்-இருக்கும், எம்பிரான்-என்கர்த்தன், முளரியால்-முட்செடிகளால்,எங்கணும்-எவ்விடத்தும், முற்றும்-நிறையப்பெற்ற, மண்டபத்து-மண்டபத்தில், எளியர்போல்-வறியோர்போல், இருத்தி-இருக்கிறாய், என்று - என்றுசொல்லி, விம்மினாள்-அழுதாள், எ-று. கொல்-அசை. (உ0)

தடங்கணீர்துடைத்துமெய் தைவந்தாயிழை
நடுங்கலென்றாற்றிட ந ள்ளியாமத்து
மடங்கல்போன்மொய்ம்புடை மன்னர்மன்னவன்
கொடுங்கைமேற்றுயின்றனள் பொன்னங்கொம்பனாள்.

(ப - ரை.) தடம்-விசாலமாகிய, கண்-கண்ணினின்றுவரும், நீர் - சலத்தை, துடைத்து-மாற்றி, மெய்-தேகத்தை, தைவந்து-தடவிக்கொடுத்து,ஆயிழை-பெண்ணே, நடுங்கலென்று-அஞ்சாதேயென்று, ஆற்றிட-தேற்ற,நள்ளியாமத்து-அர்த்தராத்திரியில், மடங்கல்போல்-சிங்கம்போல், மொய்ம்புடை-பலத்தையுடைய, மன்னர் மன்னவன்- அரசர்க்கரசனான நளமகாராசனுடைய, கொடுங்கைமேல்-வளைந்தகையின்மீது, பொன்னங்கொம்பனாள்-அழகிய பொற்கொம்பையொத்த தமயந்தி, துயின்றனள்-நித்திரைசெய்தாள், எ-று.

காண்புகு படலம்-முற்றிற்று.

ஆக செய்யுள்-௧0௩௭

# பிரிவுறு படலம்.

இப்படலத்தால் கானிடத்துச்சென்ற நளமகாராசன் அவ்விடத்தில் தமயந்திபடும் பெருந்துன்பத்தைக்கண்டு சகிக்காதவனாய் அதற்குக்காரணந்தானாகையால் தான்பிரிந்தால்அவள்சிறுதுயருடன் அருகிலுள்ள தன்தாய்வீட்டை யடைவாளென்றெண்ணிப் பிரிவுறல் சொல்லப்படுகின்றது.

கலி விருத்தம்.

விண்படுமின்னென மிளிருமாகமு
மண்படத்துயரொரு வடிவுகொண்டெனக்
கண்படுதோகையை நோக்கிக்காவலன்
புண்படுநெஞ்சொடும் புலம்பியெண்ணினான்.

(ப - ரை.) விண்படு-மேகத்திலுண்டாகிய,மின்னென-மின்னல்போல், மிளிரும்-பிரகாசிக்கும், ஆகமும்-சரீரமும், மண்பட - புழுதியடைய, துயர்-துன்பம், ஒருவடிவம்-ஒருவடிவத்தை, கொண்டென-கொண்டதுபோல்,கண்படு-நித்திரைசெய்யாநின்ற, கோதையைத-மயந்தியை, நோக்கி-பார்த்து,காவலன்-நளமகாராஜன்,புண்படு-புண்பட்ட,நெஞ்சொடும்-மனதுடனே,புலமபி-அரற்றி, எண்ணினன்-ஆலோசித்தான். எ-று. (௧)

நண்ணருங்கானெலாந் தொடர்ந்துநண்ணுமேற்
கண்ணினாலிவடுயர் காணலாவதே
பெண்ணருங்கலத்தினைப் பிரியிற்றந்தையூ
ரண்ணியதவ்வுழி யடைந்துவைகுமால்.

(ப - ரை.) நண்ணரு-பொருந்துதற்கரிய, கானெலாம் - காடுமுழுதும், தொடர்ந்து-பின்றொடர்ந்து, நண்ணுமேல்-அடையுமானால், கண்ணினால்-கண்களினால், இவள்-இத்தமையந்தியினது, துயர்-துன்பத்தை, காணலாவதே-பார்க்கக்கூடுமோ, பெண்ணருங்கலத்தினை-பெண்களுக்கரிய ஆபரணம் போன்ற இவளை, பிரியில்-நீங்கில்,தந்தை-பிதாவினுடைய,ஊர்-நகரமானது, அண்ணியது-சமீபமாயது, அவ்வுழி-அந்நகரத்தினிடத்து, அடைந்து - சேர்ந்து, வைகும்-இருப்பாள், எ-று. (௨)

விரிமலர்ப்பூங்குழல் விழிக்கிலீங்கிவட்
பிரிகுவதரிதினிப் பிரியவெண்ணிலோ
வொருதுகிலாயதித் துகிலையூறுசெய்
கருவியிங்கேதெனக் கருத்தினெண்ணினன்.

(ப - ரை.) விரி-மலர்ந்த, மலர்-புட்பத்தையணிந்த,பூ-பொலிவுபெற்ற, குழல்-கூந்தலையுடைய தமயந்தி, விழிக்கில்-கண்விழித்துக்கொண்டால், ஈங்கு-இவ்விடத்தில், இவள்-இவளை, பிரிகுவது-நீங்குவது, அரிது-கூடாது,இனி இனிமேல், பிரிய-இவளைநீங்க, எண்ணிலோ-ஆலோசிக்கிலோ, ஒருதுகிலாயது-(இருவருக்கும்) ஓராடையாயிருக்கின்றது, இத்துகிலை-இவ்வஸ்திரத்தை, ஊறுசெய்-துணிக்கின்ற, கருவி-ஆயுதம், இங்கு-இவ்விடத்தில், ஏதென-யாதென்று, கருத்தின்-மனதில், எண்ணினன்-ஆலோசித்தான், எ-று.

எண்ணியதுணர்ந்திவர்ப் பிரிப்பமுன்னமே
கண்ணியவஞ்சகக் கலியும்வாளதாய்
நண்ணிமுற்கிடத்தலு மெடுத்துநாமவே
லண்ணலுந் துகிலடு வரிந்திட்டானரோ.

(ப - ரை.) எண்ணியது-ஆலோசித்ததை, உணர்ந்து-அறிந்து, அவர்-அவ்விருவரையும், பிரிப்ப-பிரிக்க,முன்னமே-முன்னமே, கண்ணிய-கருதிய, வஞ்சகம்-கபடத்தையுடைய, கலியும்-கலிபுருஷனும், வாளதாய்-வாளாகி,நண்ணி-பொருந்தி, முன்-எதிரில், கிடத்தலும்-இருந்த அளவில், எடுத்து - கையிலெடுத்து, நாமம்-அச்சத்தைத்தரும் வேல்-வேலையுடைய, அண்ணலும் - நளனும், துகில்-வஸ்திரத்தை, நடு-மத்தியில், அரிந்திட்டான்-அரிந்தான். எ-று.

சில்லரிநெடுங்கணு டெருளுறுவகை
மெல்லெனக்கொடுங்கையி னீக்கிவெய்துயிர்த்
தொல்லையி லுயிர்விடு முடம்புபோன்மென
வல்லலங்கடலிடை யழுந்தினனரோ.

(ப - ரை.) சில்-சிலவாகிய, அரி-அரிபரந்த, நெடு-நீண்ட, கணாள்-கண்களையுடைய தமயந்தி, தெருளுறுவகை-விழிக்காதவிதமாய், மெல்லென-மிருதுவாக, கொடுங்கையின்-வளைந்தகையினின்றும், நீக்கி-அகற்றி, வெய்துயிர்த்து-பெருமூச்சுவிட்டு, ஒல்லையில்-சீக்கிரத்தில், உயிர்-பிராணனை விடும்-நீக்கும் உடம்புபோன்மென-தேகத்தைப்போல, அல்லலங்கடலிடை - துக்கசாகரத்தில், அழுந்தினன்-முழுகினன். எ-று. அரோ-அசை. (௫)

எழுமகன்றலினி யென்கொலாமென
வழுமுயிர் துறந்தென வவசமேற்கொளா
விழுமிவட் காக்கென மெலிந்துதெய்வதந்
தொழுமினையனபல துன்பமெய்துமால்.

(ப - ரை.) எழும்-எழுந்திருப்பான், அகன்றால்-நீங்கினால், இனி-இனிமேல், என்கொலாமென-என்னவாகுமோவென்று, அழும்-புலம்புவாள், உயிர் துறந்தென-உயிர்நீங்கினவன்போல, அவசமேற்கொளா - பரவசத்தை மேற்கொண்டு, விழும்-விழுவான், இவள்-இவளை, காக்கென-இரக்ஷிக்கவென்றும், மெலிந்து-வாடி, தெய்வதம்-வனதேவதைகளை, தொழும் - வணங்குவான், இனையன-இவைபோன்ற, பல-அனேகமான, துன்பம்-துயரங்களை, எய்தும்-அடைவான். எ-று. (௬)

செல்லும்வெந்துயரொடுஞ் செல்லக்காலெழா
தொல்லையின்மீளும்வெய் துயிர்க்குமொண்ணுதல்
கல்லதரிடைத்தனி யேகிற்பேய்க்கணங்
கொல்லுமென்றாருயிர் குழைந்துசாம்புமால்.

(ப - ரை.) செல்லும்-நடப்பான், வெந்துயரொடும் - வெவ்விய துக்கத்துடன், செல்ல-நடக்க, காலெழாது-அடியெழும்பாமல், ஒல்லையில்-சீக்கிரத்தில், மீளும்-திரும்புவான், வெய்துயிர்க்கும்-பெருமூச்சுவிடுவான், ஒண்ணுதல்-ஒள்ளிய நெற்றியையுடைய தமயந்தி, கல்லதரிடை - மலைவழியில், தனி-தனியே, ஏகில-செல்வாளானால், பேய்க்கணம்-பிசாசக்கூட்டங்கள், கொல்லுமென்று-கொன்றுவிடுமென்று, ஆருயிர்-நிறைந்தவுயிர், குழைந்து - குழைவுற்று, சாம்பும்-வாடுவான். எ-று. ஆல்-அசை. [இது தன்மை நவிற்சியணி.]

ஆயிடையின்னணம் வருந்தியன்புகூர்
வேயுறழ்தோளியைப் புரிந்துவெஞ்சின
மாயவெங்கொடுங்கலி வயத்தனாதலிற்
போயினன்பித்தரிற் பொருவில்வாய்மையான்.

(ப - ரை.) ஆயிடை-அவ்விடத்தில், இன்னணம்-இப்படியாக, வருந்தி-துன்புற்று, அன்புகூர்-ஆசைமிகுந்த, வேயுறழ்-மூங்கிலையொத்த, தோளியை-தோளையுடைய தமயந்தியை, பிரிந்து-நீங்கி, வெஞ்சினம் - வெவ்வியகோபத்தையும், மாயம்-வஞ்சனையையும், வெம்-குரூரமான, கொடு - கொடுமையையுடைய, கலி-கலியனுக்கு, வயத்தனுதலில்-வசப்பட்டவனுதலால், பொருவில்-ஒப்பற்ற, வாய்மையான்-சத்தியத்தையுடைய நளன், பித்தரின் - பித்தரைப்போல், போயினன்-போயினுன். எ-று. (அ)

கள்ளிருட்போதுவெங் கானினமவே
லள்ளிலைப்பூணினு னகன்றுபோதலும்
விள்ளருந்துயரொடு மெலிந்துகண்படும்
பிள்ளைமானேக்கிதன் செய்கைபேசுவாம்.

(ப - ரை.) கள்ளிருட்போது-நடுராத்திரியில், வெங்கானில் - வெவ்விய காட்டில், நாமவேல்-அச்சத்தைச்செய்யும் வேலையும், அள் - கூர்மைபொருந்திய, இலை-தொங்கலையுடைய, பூணினுன்-ஆபரணத்தையுமுடைய நளமகாராசன், அகன்று-நீங்கி, போதலும், போனவளவில், விள்ளரு-நீங்குதற்கரிய, துயரொடு-துன்பத்துடனே, மெலிந்து-நைந்து, கண்படு-நித்திரைசெய்கின்ற, பிள்ளைமான்-மான்கன்றுபோன்ற, நோக்கிதன்-கண்களையுடைய தமயந்தியினது, செய்கை-நடக்கையை, பேசுவாம்-சொல்லுவோம். எ-று. (கூ)

நீடியதுயில்சிறி துணர்ந்துநேரிழை
யாடகத்தொடிக்கையா லணைக்கக்காண்கிலா
ளூடினள்பதைத்தன ளுயுர்ப்புவீங்கின
டேடினள்காந்தளஞ் செங்கைநீட்டியே.

(ப - ரை.) நீடியதுயில்-மிகுந்தநித்திரை, சிறிதுணர்ந்து - கொஞ்சந்தெளிந்து, நேரிழை-தமயந்தி, ஆடகத்தொடி-பொன்னுற்செய்தவளையலணிந்த, கையால்-கைகளால், அணைக்க-தழுவ, காண்கிலாள்-காணுதவளாய், ஊடினள்-பிணங்கினுள், பதைத்தனள்-துடித்தாள், உயிர்ப்புவீங்கினள்-பெருமூச்சுவிட்டாள், காந்தள்-காந்தல்மலரையொத்த, அம்-அழகிய, செங்கை-சிவந்தகையை, நீட்டி-நீட்டி, தேடினள் - தேடினுள். எ று. [இதுதன்மை நவிற்சியணி.] (௧௦)

ஆயிடைக்காண்கிலா தழுங்கிச்செங்கடை
பாயரிநெடுங்கணீ ரருவிபாய்தரத்
தூயமென்மலர்க்கர நெரித்துத்துண்ணென
வாய்வெரீ இயால்வயி றறுக்கிமாழ்கினுள்.

(ப - ரை.) ஆயிடை-அவ்விடத்தில், காண்கிலாது-(நளனைக்) காணுமல் அழுங்கி-வருந்தி, செங்கடை - சிவந்தகடையையுடைய, பாய்-பரவிய, அரி-

அரிகளையுடைய, நெடு-நீண்ட, கண்-கண்ணினின்றும், நீரருவி-நீர்வெள்ளம், பாய்தர-ஒழுக, தூய-பரிசுத்தமாகிய, மெல் - மிருதுபொருந்திய, மலர்க்கரம்-தாமரைமலர்போன்ற கைகளை, நெரித்து, துண்ணென-திடுக்கென்று, வாய் வெரீஇ-கூசலிட்டு, ஆல்-ஆலிலைபோன்ற, வயிறு-வயிற்றை, அதுக்கி - பிசைந்து, மாழ்கினாள்-மயங்கினாள். எ-று. (கக)

தெளித்தபூம்பள்ளியிற் சிறிதுநீங்கினு
மளப்பருந்துயரொடு மவலமெய்துவேன்
றளிப்பெயற்கங்குலிற் றமியண்மாழ்குற
வொளித்துநீதனிவிளை யாடினுய்வனே.

(ப - ரை.) தெளித்தபூ-புஷ்பங்களைப்பரப்பிய, பள்ளியில்-சயனத்தில், சிறிது-கொஞ்சம், நீங்கினும்-விலகினும், அளப்பரு - அளவிடுதற்கரிய, துயரொடும்-துன்பத்துடன், அவலம்-வருத்தத்தை, எய்துவேன் - அடைகின்ற யான், தளிப்பெயல்-பனித்துளி துளிக்கின்ற, கங்குலில் - இராத்திரியில், தமியள்-தனித்தவளாய், மாழ்குற-வருந்த, ஒளித்துநீ-நீமறைந்து, தனி-தனியாய், விளையாடில்-விளையாடினால், உய்வனோ-யான்பிழைப்பனோ. எ-று.

கொச்சகக்கலிப்பா.

கான்றாருயிரொழுக் கண்ணீர்கவுளலைப்ப
வூன்றோய்கணைபட் டுழலும்பிணையொத்தேன்
மான்றேரரசர் முடியுழுதவார்கழற்காற்
றோன்றாலென்கண்களிப்ப வின்னமுமென்றோன்றிலையே.

(ப - ரை.) கான்று-வெளிப்பட்டு, ஆருயிர்-பொருந்தியவுயிர், சோர-நீங்க, கண்ணீர்-கண்ணீரானது, கவுள்-கன்னத்தை, அலைப்ப - அலைக்க, ஊன்றோய்-தசைபடிந்த, கணைபட்டு-அம்புபட்டு, உழலும் - சுழலாநின்ற, பிணையொத்தேன்-மானுக் கொப்பானே, மாற்றேர்-குதிரைகட்டிய தேரையுடைய அரசர்-அரசருடைய, முடி-கிரீடங்கள், உழுத-படிந்த, வார் - நெடிய, கழல்-வீரக்கழலைத்தரித்த, கால்-பாதத்தையுடைய, தோன்றால் - அரசனே, என-என்னுடைய, கண்களிப்ப கண்மகிழ்ச்சியடைய, இன்னமும்-இன்னேரமட்டும், என்-என்னகாரணத்தினால், தோன்றிலை-காணப்படவில்லை. எ-று.

நேரலார்போரேறே நிடதத்தார்கோமானே
யாரவரைமார்பா வளியேனுயிர்க்குயிரே.
காரிருள்வாயான்புலம்பக் கானகத்துவிட்டகன்றுஞ்
சாரலையாலின்னு மிதுவோநின் றண்ணளியே.

(ப - ரை.) நேரலார்-பகைவர்க்கு, போரேறே-போர்செய்கின்றசிங்கமே, நிடதத்தார்-நிடதேசத்தார்க்கு, கோமானே-அரசனே, ஆரம்-முத்துமா

லையணிந்த, வரைமார்பா மலைபோன்ற மார்பையுடையவனே, அரியேனுயிர்க்கு-ஏழையாகிய என்னுயிர்க்கு, உயிரே - உயிர்போன்ற நளமகாராஜனே, காரிருள்வாய்-கரியவிருளினிடத்தில், யான்-நான், புலம்ப-புலம்பும்படி, கானகத்து-காட்டினிடத்தில், விட்டகன்றும்-என்னைநீக்கியும், இன்னும்-இவ்வளவுகாலஞ்சென்ற பின்பும், சாரலை-சேர்ந்தாயில்லை (ஆதலால்) இதுவோ-இதுதானோ, நின்-உன்னுடைய, தண்ணளி-குளிர்ந்தவருள், எ-று. ஆல் - ஏ-அசைகள். (௧௪)

நெஞ்சமெலிவ நினதுதடந்தோளுங்
கஞ்சமலர்முகமுங் காணாதுகண்பனிப்ப
மஞ்சுதவழ்வெற்பெறிந்த வச்சிரத்தோனன்றளித்த
விஞ்சைபயின்று விளையாட்டயருதியோ.

(ப - ரை.) நெஞ்சமெலிவேன்-மனம்வாடுகின்றயான், நினது - உன்னுடைய, தடந்தோளும்-விசாலமாகிய தோள்களையும், கஞ்சம் - தாமரைமலர்போன்ற, முகமும்-வதனத்தையும், காணாது-பாராமல், கண்பனிப்ப-கண்ணீர்விடும்படி, மஞ்சுதவழ்-மேகங்கள் தவழ்கின்ற, வெற்பு - மலைகளின் (சிறகை) எறிந்த-அறுத்த, வச்சிரத்தோன்-வச்சிராயுதத்தையேந்திய இந்திரன், அன்று-தூதுசென்றவன்று, அளித்த-கொடுத்த, விஞ்சை-வித்தையை, பயின்று-பழகி, விளையாட்டருதியோ-விளையாடுகின்றாயோ. எ-று. (௧௫)

ஞாலத்திருணடப்ப நாட்கமலம்வாய்நெகிழ
வேலைத்திரைமுகட்டில் வெய்யோனெழுந்தனனான்
மாலைக்கதிர்வடிவேன் மன்னர்பெருமானே
காலைக்கடவ கடன்கழிக்கவாராயே.

(ப - ரை.) ஞாலத்து-பூமியிலுள்ள, இருள்-அந்தகாரமானது, நடப்ப-செல்லவும், நாள்-புதிய, கமலம்-தாமரைமுகைகள், வாய்நெகிழ - மலரவும், வேலை-கடலினது, திரை-அலைகளினது, முகட்டில்-உச்சியில், வெய்யோன்-சூரியன், எழுந்தனனா-உதித்தான் (ஆதலால், மாலை - வெற்றிமாலையணிந்த, கதிர்-ஒளிபொருந்திய, வடி-கூரிய, வேல்-வேலாயுதத்தை யேந்திய, மன்னர்பெருமானே-அரசர்க்கரசனாகிய நளமகாராசனே, காலை-உதயத்தில், கடவ-செய்யத்தக்க, கடன்-நித்தியகன்மத்தை, கழிக்க-செய்துமுடிக்க, வாராயே-வாராயா. எ-று. ஏ-அசை. (௧௬)

மன்னவனேயிப்பிறப்பிற் கண்டுமணந்திலனே
லின்னமொருபிறப்பி லானாலுமேழையேன்
றன்னந்தனியே யிருந்துதவமாற்றியுமுன்
பொன்னகலமுள்ளுருகப் புல்லாதொழிவேனோ.

(ப - ரை.) ஏழையேன்-ஏழையாகிய யான், மன்னவனே-நளமகாராசனே, இப்பிறப்பில்-இந்த சனனத்தில், கண்டு - (உன்னை) கண்டு, மணந்திலனேல்-சேராமற் போவேனானால், இன்னம்-இனிமேல் (வருஞ் சனங்களுள்) ஒருபிறப்பி லானாலும்-ஒருசனனத்தி லாவது, தன்னந்தனியே யிருந்து-தனித்திருந்து, தவமாற்றியும்-தவத்தைச் செய்தாவது, உன்-உன்னுடைய, பொன்னகலம்-அழகு பொருந்திய மார்பம், உள்ளுருக - உள்ளமுருகும்படி, புல்லாது-தழுவாமல், ஒழிவேனோ-நீங்குவேனோ. எ-று. (கஎ)

வாவுமிளமான்காண் மயில்காண்மடப்பிடிகாள்
கூவுங்கரியகுயில்காண் மென்புள்ளினங்கா
ளாவியெனமேவி யகலேமெனவகன்ற
காவலன்றான்போன வழியெனக்குக்காட்டீரே.

(ப - ரை.) வாவும்-தாவாநின்ற, இளமான்காள்-இளமை தங்கிய மான்களே, மயில்காள்-மயில்களே, மடப்பிடிகாள்-அழகிய பெட்டையானைகளே, கூவும்-கூவுகின்ற, கரியகுயில்காள்-கருங்குயில்களே, மெல்-மென்மையாகிய, புள்ளினங்காள்-பறவைக் கூட்டங்களே, ஆவியென-உயிரைப்போல, மேவி-பொருந்தி, அகலேமென-பிரியோமென்று சொல்லி, அகன்ற - (இப்பொழுது) நீங்கிய, காவலன்றான்-நளமகாராசன், போனவழி-சென்றவழியை, எனக்கு-என்றனுக்கு, காட்டீரே-நீங்கள் காட்டீரா எ-று. (கஅ)

என்றுவுருகி யிருகண்ணீராலியுகத்
தன்றுத்தழும்பப் புலம்பித்தமியளாய்
மின்றாரிடைநுடங்கச் செல்வாள்விரல்வேந்தன்
பொன்றாரடிநோக்கிப் பூங்கொடிபோல்வீழ்ந்தழுதாள்.

(ப - ரை.) என்று-இப்படியென்று, உருகி-மனமுருகி, இருகண் - இரண்டு கண்களினின்றும், நீராலி-நீர்த்துளிகள், உக-உதிர, தன்று-தன்னுடையநாவானது, தழும்ப-தடிப்புறும்படி, புலம்பி-அரற்றி, தமியளாய்-தனித்தவளாய், மின்-மின்னலின் றன்மை, ஆர்-நிறைந்த, இடை-இடையானது, நுடங்க-துவள, செலவாள்-நடக்கின்ற தமயந்தியானவள், விறல்-வெற்றி பொருந்திய, வேந்தன்-நளமகாராசனது, பொன்றார்-அழகு பொருந்திய, அடி-பாதக்குறியை, நோக்கி-பார்த்து, பூங்கொடிபோல்-புஷ்பக்கொடிபோல், வீழ்ந்து அதில்வீழ்ந்து, அழுதாள்-புலம்பினாள். எ-று. (கக)

ஐயன்கமல வடிச்சுவடுகாண்டலுமே
வெய்யதுயரவிட மீதூரவாய்புலராச்
செய்யகமல மலரிற்றிருவனையாள்
கையறவாநெஞ்சங் கலுழாவுயிர்சோர்ந்தாள்.

(ப - ரை.) ஐயன்-நளமகாராஜனுடைய, கமலவடிச்சுவடு-தாமரைமலர் போன்ற பாதக்குறியை, காண்டலும்-கண்டவளவில், வெய்ய-கொடிய, துயரவிடம் - துன்பமாகிய விஷம், மீதூர - அதிகரிக்க, வாய்புலரா - வாயுலர்ந்து, செய்ய - சிவந்த, கமலமலரில் - தாமரைப் புஷ்பத்தி லிருக்கின்ற, திருவனையாள்-இலக்குமியையொத்த தமயந்தியானவள், கையறவா-செயலற்று, நெஞ்சங்கலுழா-மனங்கலங்கி, உயிர்சோர்ந்தாள்-மூர்ச்சித்தாள். எ-று. (௨0)

இவ்வாறு துன்பக் கடலினிடைமூழ்கும்
மைவார்தடங்கண் மடமாதின்செவ்விமுகஞ்
செவ்வான் மதியமெனச் செங்கட்டுளையெயிற்று
வெவ்வாயரவ முருத்துவிழுங்கியதே.

(ப - ரை.) இவ்வாறு - இந்த விதமாய், துன்பக்கடலி னிடை - துன்பக்கடலில், மூழ்கும் - அழுந்திய, மை - அஞ்சன மெழுதிய, வார் - நெடிய, தடம் - விசாலமாகிய, கண் - நேத்திரங்களையும், மடம் - அறியாமையையுமுடைய, மாதின் - தமயந்தியினது, செவ்வி - அழகு பொருந்திய, முகம்-வதனத்தை, செவ் - செவ்வையாகிய, வால்-வெளுத்த, மதியமென - சந்திரனென்று (எண்ணி) செங்கண் - சிவந்த கண்களையும், துளையெயிற்று-துவாரம் பொருந்திய பற்களையுடைய, வெவ்வாய் - வெவ்விய வாயையு முடைய, அரவம் - மலைப்பாம்பு, உருத்து - கோபித்து, விழுங்கியது-விழுங்கிற்றுஎ-று. ஈண்டு - மதிக்குச்செவ்வை நிறைவெனக்கொள்க. ஏ-அசை. (௨௧)

நெய்த்தோரின்மூழ்கி நிணம்பருகும்வைவேலோய்
பைத்தோர்கொடுந்தறுகட் பாந்தள்விழுங்கியதா
லெய்த்தேனுயிர்காத்தற் கெய்தாயெனவழுதாண்
மைத்தோய்குவளை மதர்நெடுங்கண்வாணுதலே.

(ப - ரை.) நெய்த்தோரில் - உதிரத்தில், மூழ்கி - குளித்து, நிணம்-மாமிசத்தை, பருகும் - புசிக்கானின்ற,வை - கூர்மை பொருந்திய, வேலோய்-வேலாயுதத்தையுடைய நளமகாராஜனே! பைத்து - படத்தையுடையதாகிய, ஓர் - ஒரு, கொடுந்தறுகண் - கொடிய கோபத்தையுடைய, பாந்தள் - மலைப்பாம்பானது, விழுங்கியது - (என்னை) விழுங்கியது, எய்த்தேன் - இளைத்த என்னுடைய, உயிர்காத்தற்கு - உயிரைக் காப்பதற்கு, எய்தாய்-வாராயோ, என - என்று, மைத்தோய் - அஞ்சனந் தோய்ந்த, குவளை - கருநெய்தல் போன்ற, மதர்நெடுங்கண் - குளிர்ச்சி பொருந்திய நெடிய கண்களையுடைய, வாணுதல் - தமயந்தியானவள், அழுதாள் - புலம்பினாள், எ-று. (௨௨)

பொங்கழல்வெங்கானகத்துப் பூவையழுங்குரல்கேட்
டங்கோர்சிலைக்கை யடல்வேடன்வந்தணுகி
வெங்கணரவெறிந்து வெவ்வாயிடைநின்றுங்
கொங்கவிழுமென்கூந்தற் கோதைதனைநீக்கினனால்.

(ப - ரை.) பொங்கழல்-மிகுந்த வக்கினியை யுடைய, வெம்-வெப்பமாகிய, கானகத்து-காட்டினில், பூவை-தமயந்தியானவள், அழும்-புலம்புகின்ற, குரல்கேட்டு-சத்தத்தைக் கேட்டு, அங்கு-அவ்விடத்தில், ஓர்-ஒரு, சிலைக்கை-வில்லைக்கையி லேந்திய, அடல்-பலம்பொருந்திய, வேடன்-வேடனானவன், வந்தணுகி-வந்துசேர்ந்து, வெங்கண்-வெவ்விய கண்களையுடைய, அரவு-மலைப்பாம்பை, எறிந்து-பிளந்து, வெவ்வாயிடை நின்றும் -வெவ்விய வாயினிடத்தினின்றும், தொங்கவிழ்-வாசனை வீசாநின்ற, மென்கூந்தல்-மென்மையாகிய கூந்தலையுடைய, கோதைதனை-தமயந்தியை, நீக்கினன்-விடுவித்தான். எ-று. ஆல்-அசை. (உரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெய்யவரவின்பகுவாயின் விடுத்தமடமானெழினோக்கி
மையல்கூர்ந்தநெஞ்சினனாய் வரிவிற்றடக்கைவயவேடன்
றெய்யின்முலைமேற்புல்லுதற்குத் தொடரத்துஞ்சாவருங்கற்பின்
றையன்முனிந்துநோக்குதலுஞ் சாம்பராயிற்றவனுடலே.

(ப - ரை.) வெய்ய-கொடிதாகிய, அரவின்-மலைப்பாம்பினது, பகுவாயின்-பிளப்பாகிய வாயினின்றும், விடுத்த-விடுவிக்கப்பட்ட, மடமான்-தமயந்தியினது, எழில்-அழகை, நோக்கி-பார்த்து, மையல்கூர்ந்த-மோகித்த, நெஞ்சினனாய்-மனமுள்ளவனாய், வரிவில்-நீண்டவில்லை யேந்திய, தடக்கை-விசாலமாகிய கையையுடைய, வயம்-வெற்றி பொருந்திய, வேடன் - வேடனானவன், தொய்யில்-சந்தனக்கோல மணிந்த, முலைமேல்-ஸ்தனத்தின்மேல், புல்லுதற்கு-அணைதற்கு, தொடர-பின்றொடர, துஞ்சா-கெடாத, அரு-அருமையாகிய, கற்பின் -கற்பினை யுடைய, தையல் - தமயந்தியானவள், முனிந்து-கோபித்து, நோக்குதலும்-பார்த்த மாத்திரத்தில், அவனுடல்-அவ்வேடனுடலம், சாம்பராயிற்று-நீறாயிற்று. எ-று. ஏ-அசை. (உச)

கற்பினழலாற்கொடுஞ்சிலைக்கை வேடனுடலங்கரியாக்கிப்
பொற்பின்றுறைபோய்நலங்கனிந்த பொன்னம்பாவைபுலம்பெய்தி
வெற்பினுயர்தோள்வேந்துசெலும் வெங்கான்றுருவியேகுதலு
மற்பின்முனிவர்தவமியற்றுஞ் சாலைநோக்கியருகணைந்தாள்.

(ப - ரை.) கற்பினழலால்-பாதி விருத்தியாக்கினியால், கொடுஞ்சிலைக்கை-கொடிய வில்லைக் கையிலேந்திய, வேடனுடலம்-வேடன் சரீரத்தை, கரியாக்கி-சாம்பராக்கி, பொற்பின்றுறைபோய்-அழகிற்சிறந்து, நலங்கனிந்த-நன்மை மிகுந்த, பொன்னம்பாவை-தமயந்தியானவள், புலம்பெய்தி-அழுதுகொண்டு, வெற்பின்-மலைபோல்-உயர்ந்த, தோள்-புயத்தையுடைய, வேந்து-நளமகாராசன், செல்லும்-செல்லாநின்ற, வெங்கான்-வெவ்வியகாட்டினில், துருவி-தேடிக்கொண்டு, ஏகுதலும்-போகுமளவில், அற்பின் - அற்பினையுடைய, முனிவர்-முனிவர்கள், தவமியற்றும்-தவஞ்செய்யாநின்ற, சாலை-பர்ணசாலையை, நோக்கி-பார்த்து, அருகு-அதனருகில், அணைந்தாள் - சேர்ந்தாள்.

அடைந்தமாதின்முகநோக்கி யாரைநீவெவ்வழற்கானி
னடந்துதனியேயித்தலையிற் போந்ததென்னைநளினமலர்த்
தடங்கண்கலுழ்ந்துபுலம்பெய்துந் தன்மையெவன்கொல்சாற்றுகென
மடந்தைபுகுந்தவாறனைத்து முனிவர்கேட்பவகுத்துரைத்தாள்

(ப - ரை.) அடைந்த-தம்மிடத்துவந்த, மாதின்-தமயந்தியினது,முகம்-வதனத்தை, நோக்கி-பார்த்து, யாரைநீ-நீயார், வெவ்வழல்-வெவ்விய அழல் பொருந்திய, கானில்-காட்டினில், நடந்து-காலானடந்து, தனியே-தனிமையாகி, இத்தலையில்-இவ்விடத்தில், போந்ததென்னை-வந்ததென்னகாரணம், நளினமலர்-தாமரைமலர்போன்ற, தடங்கண்-விசாலமாகியகண்கள், கலுழ்ந்து-கலங்கி, புலம்பெய்துந்தன்மை-துன்பப்படுத்தல், எவன்கொல் - என்னகாரணம், சாற்றுகென-சொல்லென்று, முனிவர்கேட்ப-முனிவர்கள் கேட்க, மடந்தை-தமயந்தியானவள், புகுந்தவாறனைத்தும்-நடந்தவையெல்லாம், வகுத்து-பிரித்து, உரைத்தாள்-(அவர்க்குச்) சொல்லினுள், எ-று.

கேட்டவளவிலுளமுருகிக் கிள்ளைமருட்டுபனிமொழியாய்
வாட்டமொழிதிநிற்பிரிந்த வடிவேனளனைச்சின்னுளி
னூட்டங்களிப்பக்கண்டுமுன்போ னலம்பெற்றிருத்தியெனநவிலா
வீட்டுந்தவத்தோர்மறைக்கிழவ ரிருக்கைநோக்கியேகினரால்.

(ப - ரை.) கேட்டவளவில் - (இச்செய்தியைக்) கேட்டமாத்திரத்தில், உளமுருகி-மனமுருகி, கிள்ளை - கிளிப்பிள்ளைகளை, மருட்டும் - வெருட்டாநின்ற, பனிமொழியாய் - குளிர்ந்த சொற்களையுடைய, தமயந்தியே! வாட்டம்-சோர்வை, ஒழிதி-ஒழித்துவிடு, நிற்பிரிந்த-உன்னைப்பிரிந்த, வடிவேல்-கூர்மையுடைய வேலேந்திய, நளனை-நளமகாராசனை, சின்னுளில் - சிலநாளிலே, நாட்டங்களிப்ப-கண்கள்களிக்க, கண்டு-பார்த்து, முன்போல்-நலம்பெற்றிருத்தி-முன்போல நன்மையை யடைந்து இருப்பாயாகவென்று, நவிலா-ஆசீர்வதித்து, ஈட்டுந்தவத்து-தவஞ்செய்கின்ற, ஓர்-ஒப்பற்ற, மறைக்கிழவர்-அந்தணர்கள், இருக்கைநோக்கி - (தாங்க) ளிருக்கு மாச்சிரமத்தைக்குறித்து, ஏகினர்-சென்றூர்கள். எ-று. ஆல்-அசை. (உஎ)

பிதிர்ந்தபசும்பொற்றிதலைமுலைப் பெய்பூங்கோதைபிணைபோல்வா
ளெதிர்ந்தவணிகர்வழித்துணையா வேகிக்கதிர்மாமணிவரன்றி
யதிர்ந்துபுனல்பாய்பேராற்றங் கரையினுரையுமரையிருளின்
மூதிர்ந்தசினத்துப்பிறைக்கோட்டு மூரிக்களிறென்றணுகியதால்.

(ப - ரை.) பிதிர்ந்த-உதிர்ந்த, பசும்பொன்-பசியபொன்போன்ற, திதலை-தேமலையுடைய, முலை - ஸ்தனங்களையும், பெய்பூங்கோதை - மலர்மாலையணிந்த கூந்தலையுமுடைய, பிணைபோல்வாள்-மான்போன்ற தமயந்தியானவள், எதிர்ந்த -எதிர்ப்பட்ட, வணிகர் - வர்த்தகர், வழித்துணையா - வழித்

துணையாக, ஏகி-போய், கதிர்மாமணி - ஒளிபொருந்தியசிறந்தமணிகளை, வரன்றி-வாரிக்கொண்டு, அதிர்ந்து இரைந்து, புனல்-சலமானது, பாய் - பெருகாநின்ற, பேராற்றங்கரையில்-பெரிய ஆற்றங்கரையினிடத்தில், உறையும்-வாசஞ்செய்கின்ற, அரையிருளின் - அர்த்தராத்திரியில், முதிர்ந்த - மிகுந்த, சினத்து-கோபத்தையுடையதும், பிறைக்கோட்டு-பிறைபோன்றகொம்புகளையுடையதுமாகிய, மூரி - வலிமையுடைய, களிறொன்று - ஒருயானையானது, அணுகியது-வந்துநெருங்கிற்று. எ-று. (உஅ)

அணுகியாங்குப்புலம்பெய்து மலர்பூங்கோதைமயிலொழிய
வணிகமாக்களியாவரையு மதமல்யானைகொன்றேகத்
துணைவந்தடைந்தோர்யாவரையு தொலைத்துநடந்த பரூஉத்தடக்கை
யிணைவெண்கோட்டுக்களிறென்னையென்கொல்லாததெனக்கலுழ்ந்தாள்

(ப - ரை.) ஆங்கு-அவ்விடத்தில், அணுகி-வந்தடைந்து, புலம்பெய்தும் புலம்பாநின்ற, அலர்பூங்கோதை - மலர்ந்தபூமாலையணிந்த அளகபாரத்தையுடைய, மயில்-தமயந்தியானவள், ஒழிய - நீங்கலாக, வணிகமாக்களியாவரையும்-வர்த்தகரனைவரையும், மதம்-மும்மதம்பொருந்திய, மால்யானை - பெரிய யானையானது, கொன்று-கொலைசெய்து, ஏக-போகாநிற்க, துணை-துணையாக, வந்தடைந்தோர்-வந்தடையப்பட்ட, யாவரையும்-அனைவரையும், தொலைத்து-கொன்று, நடந்த - சென்ற, பரூஉத்தடக்கை - பருத்துநீண்டதுதிக்கையையும், இணை-இரண்டாகிய, வெள்-வெண்மைபொருந்திய, கோட்டு கொம்புகளையுமுடைய, களிறு-யானையானது, என்னை-துன்பப்படுகின்ற என்னை, என்-என்னகாரணத்தினால், கொல்லாதது - கொல்லாமற்போயிற்று, என-என்று, கலுழ்ந்தாள்-புலம்பினாள். எ-று. (உகூ)

சாதலொழிந்தவழிச்செல்வோர் துணையாவுள்ளந்தளர்வெய்திப்
பாதமலர்கொப்புளமெய்திப் பனிக்கப்பரல்வெங்கானிறந்து
கோதைவடிவேல்வலனேந்து குலவுத்திணிதோட்சுவாகுவெனுஞ்
சேதிபதிதன்வளநகரிற் சென்றாள்விதர்ப்பன்சேயிழையே.

(ப - ரை) சாதலொழிந்த - இறக்காமல் சேடித்துநின்ற, வழிச்செல்வோர்-வழியிற்செல்லுகின்ற, பிராமணர்கள், துணையா-சகாயமாகக்கொண்டு உள்ளந்தளர் வெய்தி-மனங்கலங்கி, பாதமலர்-மலர்போன்றபாதங்கள், கொப்புளமெய்தி-கொப்புளித்து, பனிக்க-நீரொழுக, பரல்-பருக்கைகளையுடைய, வெங்கான்-வெவ்வியவனத்தை, இறந்து விட்டுநீங்கி, கோதை-வெற்றிமாலையணிந்த, வடிவேல்-கூர்மைபொருந்திய வேலாயுதத்தை, வலன் - வலது புறத்தில், ஏந்து-தங்காநின்ற, குலவு-திரட்சியையும், திணி-வலிமையையுமுடைய தோள்-புயத்தையுடைய, சுவாகுவெனும்-சுவாகுவென்னும் பெயரையுடைய,

சேதிபதிதன்-சேதிதேசத்தரசனது, வளநகரில்-வளப்பம்பொருந்திய பட்டணத்தில், விதர்ப்பன்சேயிழை-தமயந்தியானவள், சென்றாள்-சேர்ந்தனள்.

துணிப்பட்டொழிந்தமென்றுகிலுஞ் சுடர்விட்டொளிரமண்ணாத
மணியிற்றோன்றிமாசடைந்த வடிவும்விரிந்தவார்குழலும்
பிணியுற்றுழலுநெஞ்சமுமாய்ப் பித்தேறினர்போற்கோமறுகி
லணுகச்சேதிபதிதாய்கண் டார்கொலிவளென்றையுற்றாள்.

(ப - ரை.) துணிபட்டொழிந்த-துண்டிடப்பட்ட, மென்றுகிலும்-மெல்லிய ஆடையும், சுடர்விட்டொளிர-ஒளிவிட்டு விளங்கும்படி, மண்ணாத - கழுவாத, மணியில்-இரத்நம்போல, தோன்றி-காணப்பட்டு, மாசடைந்த-அழுக்கடைந்த, வடிவும்-உடம்பும், விரிந்த-அவிழ்ந்த, வார்குழலும்-நீண்டகூந்தலும் பிணியுற்று-துன்பப்பட்டு, உழலும்-கலங்காநின்ற, நெஞ்சமும்-மனமும், ஆய் (ஆகிய இவைகளையுடையவ) ளாய், பித்தேறினர்போல்-பித்தர்போல், கோமறுகில்-இராசவீதியில், அணுக-(தமயந்தி) வர, சேதிபதி-சுவாகு வரசனது, தாய்-தாயானவள், கண்டு-தமயந்தியைக்கண்டு, ஆர்கொலிவள்-இந்தப்பெண் யாரோ, என்று-என்று, ஐயுற்றாள்-சந்தேகித்தாள். எ-று. (ருக)

பொன்னம்பாவையுடன்முழுதும் புகையுண்டென்னச்சவிமழுங்கு
மின்னுண்மருங்குற்சில்லோதி யணங்கோவரசர்மடமகளோ
வென்னத்தெருளேனீங்கிவளை யீண்டுக்கொணர்திரெனமருங்கின்
மின்னுமகளிர்தமைப்பணிப்ப விடைகொண்டவருமருகணைந்தார்.

(ப - ரை.) பொன்னம்பாவை-பொற்பதுமை யானது, உடன்முழுதும் உடம்பு முழுமையும், புகையுண்டென்ன-புகையுண்டதுபோல, சவிமழுங்கும் ஒளிமழுங்கிய, மின்-மின்னலையொத்த, நுண்-நுட்பமாகிய, மருங்குல்-இடையையுடைய, சில்லோதி-இப்பெண், அணங்கோ-தெய்வப்பெண்ணோ, அரசர் மடமகளோ-இராசகுமாரத்தியோ, என்ன-என்று, தெருளேன்-தெளியேன், ஈங்கு-இவ்விடத்தில், இவளை-இப்பெண்ணை, ஈண்டு - சீக்கிரத்தில், கொணர்திர்-கொண்டு வாருங்கள், என-என்று, மருங்கினமன்னும்-அருகிலுள்ள, மகளிர்தமை-ஸ்திரீகளை, பணிப்ப-(அவ்வரசனதுதாயானவள்) சொல்ல, விடைகொண்டு-உத்தரவு பெற்றுக்கொண்டு, அவரும்-அம்மாதர்களும், அருகு-தமயந்தி சமீபத்திலே, அணைந்தார்-வந்தார்கள். எ-று. (ருஉ)

அடைந்தமாதர்தனிப்போந்த வணங்கின்கமலமுகநோக்கிக்
கடைந்தமணிச்செப்பெனப்புடைத்துக் கதித்துவீங்குவனமுலையா
படங்கொளரவின்முடிகிடந்த பார்தாங்கிறைவன்றனையீன்ற
மடந்தைக்வருகென்றனளென்னவான்றோய்மாடத்தினிதடைந்தாள்.

(ப் - ரை.) அடைந்தமாதர் - வந்தஸ்திரீகள், தனிப்போந்த - தனித்து வந்த, அணங்கின் - தமயந்தினது, கமலமுகநோக்கி - தாமரைமலர்போன்ற முகத்தைப்பார்த்து, கடைந்த - கடைதலிடப்பட்ட, மணிச்செப்பென - இரத்தின கும்பங்கள்போல, புடைத்து - அடிபரந்து, கதித்து - பருத்து, விங்கும் - வளராநின்ற, வனமுலையாய் - அழகியஸ்தனங்களையுடைய பெண்ணே படங்கொள் - படத்தைக்கொண்ட, அரவின் - ஆதிசேடனுடைய, முடி - முடியின்மேல், கிடந்த - இருந்த, பார் - பூமியை, தாங்கு - தரிக்காநின்ற, இறைவன்றனை - சுவாகுராசனை, ஈன்ற - பெற்ற, மடந்தை - அவனதுதாயானவள், வருகென்றனள் - (உன்னை) வரச்சொல்லினள், என்ன - என்றுசொல்லாநிற்க, வான்றோய் - ஆகாசமளாவிய, மாடத்து - உபரிகையில். இனிது - இன்பத்தோடு, அடைந்தாள் - (தமயந்தியானவள்) சேர்ந்தாள், எ-று. ()

வந்தமடமான்முகநோக்கி வரிவண்டூதப்பொதியவிழ்ந்த
வந்தண்கமலமலர்கவற்றி யழகுவாய்ந்தமுகம்பசப்பச்
சிந்தைதளர்ந்துதனிப்போதற் குற்றதெவன்கொல்சேயிழையா
யுந்தையாருன்றலைவனெவ னுன்பேர்யாதிங்குரையென்றாள்.

(ப - ரை.) வந்த - தன்னிடத்துவந்த, மடமான் - தமயந்தினது, முகநோக்கி - முகத்தைப்பார்த்து, சேயிழையாய்-பெண்ணே, வரிவண்டு-இசைப்பாட்டினையுடைய வண்டுகள், ஊத - ஒலிக்க, பொதியவிழ்ந்த - கட்டவிழ்ந்த, அந்தணகமலமலர் - அழகிய குளிர்ந்ததாமரைமலர்களை, கவற்றி - கவலச்செய்து, அழகுவாய்ந்த - அழகுபொருந்திய, முகம்-வதனமானது, பசப்ப - பசலைநிறமடைய, சிந்தைதளர்ந்து - மனந்தளர்ந்து, தனிப்போதற்கு - தனித்துவருவதற்கு, உற்றது - பொருந்தியது, எவன் - யாது, உந்தை - உன்றகப்பன், யார் - எவன், உன்றலைவன் - உன்கணவன், எவன் - யார், உன்பேர் - உன்னுடையநாமதேயம், யாது - எது, இங்கு - இவ்விடத்தில், உரையென்றாள் - (அரசன்றாய்) சொல்லென்றாள், எ-று. (௩௪)

வீமன்புதல்விபுகழ்நிடத வேந்தர்கோமான்மனைக்கிழத்தி
நாமம்பகரிற்றமயந்தி யென்பாடன்கோனண்ணலற்குக்
காமர்நிதியும்வளநாடுஞ் சூதினிழந்துகானிடைப்போ
யாமந்தனின்மற்றவட்பிரிய வவளைத்தேடியீண்டணைந்தேன்.

(ப - ரை.) வீமன்புதல்வி - வீமராசன்மகள், புகழ் - புகழப்பட்ட, நிடதவேந்தர்கோமான் - நளமகாராஜனது, மனைக்கிழத்தி - மனையாள், நாமம்பகரில் - பேர்கூறுமிடத்து, தமயந்தியென்பாள் - தமயந்தியென்றுசொல்லப்படுவாள், தன்கோன் - அவளதுகணவனானவன், நண்ணலற்கு - பகைவனுக்கு, காமர்நிதியும் - விரும்பப்படுகின்றதனங்களையும், வளநாடும் - செழித்த நாட்டையும், சூதில் - சூதினில், இழந்து-தோற்றுவிட்டு, கானிடைப்போய்-

வனத்திற்சென்று, யாமந்தனில்-இராத்திரியில், அவட்பிரிய-அவளைப்பிரிய, அவளை - அத்தமயந்தியை, தேடி - தேடிக்கொண்டு, மீண்டு - இந்நகரில், அணைந்தேன் - வந்தேன், எ-று. (௬௫)

அணையமடமானுயிர்த்தோழி யானென்றுரைப்பவகமகிழ்ந்து
தனியளாகிக்கொடுங்கானிற் றலைவன்பிரியத்தளர்ந்தேங்கும்
கனைவண்டிமிருங்கருங்குழலைக் காணுமளவுமிந்நகரி
லினையல்வாழியிருத்தியென விசைந்தாங்கவளுமிருந்தனளால்.

(ப-ரை.) அணையமடமான் - அத்தமயந்தினுடைய, உயிர்த்தோழி- உயிரையொத்ததோழி, யான் - நான், என்றுரைப்ப - என்று (தமயந்தி)சொல்ல, அகமகிழ்ந்து - சந்தோஷித்து, கொடுங்கானில் - கொடியகாட்டினில், தலைவன் - கணவன், பிரிய - பிரிந்தேக, தனியளாகி - தனித்தவளாகி, தளர்ந்து - தளர்ச்சியடைந்து, எங்கும் - துன்பப்படாநின்ற, கனை-கனைக்கின்ற, வண்டு - வண்டுகள், இமிரும் - சத்தியாநின்ற, கருங்குழலை - கரியகூந்தலையுடைய தமயந்தியை, காணுமளவும் - பார்க்குமளவும், இந்நகரில் - இந்நகரத்தில், இருத்தி - இருப்பாயாக, இனையல் - வருத்தப்படாதே, வாழி - வாழக்கடவை, என - என்று, அரசன்றாய் சொல்ல இசைந்து - (அவள்சொல்லுக்) கிசைந்து, ஆங்கு - அந்நகரத்தில், அவளும் - அந்தத்தமையந்தியும், இருந்தனள் - இருந்தாள், எ-று. (௬௬)

காதல்கூர்ந்துதன்மகளாஞ் சுனந்தைக்கதிர்வாண்முகநோக்கி
மாதர்நோக்கிம்மடவரலை வருந்தாதளித்தியெனலோடு
மேதமின்றியவள்காப்ப விருந்தாண்மற்றிங்கிதுநிற்க
கோதைவடிவேனளற்குற்ற செய்தியனைத்துங்கூறுவாம்.

(ப-ரை.) காதல்கூர்ந்து - அன்புசெய்து, தன்மகளாஞ்சுனந்தை-தன்னுடையமகளாகிய சுனந்தையினது, கதிர்வாள் - மிகுந்தஒளிபொருந்திய, முகம்-முகத்தை, நோக்கி - பார்த்து, மாதர்நோக்கு-அழகியபார்வையுடைய, இம்மடவரலை - இப்பெண்ணை, வருந்தாது-துன்பப்படாமலிருக்கும்படி, அளித்தி - காப்பாய், எனலோடும் - என்று (அரசன்றாய்) சொல்லியவளவில், ஏதமின்றி - பழுதின்றி, அவள் - அச்சுனந்தையானவள், காப்ப - இரக்ஷிக்க, இருந்தாள் - (தமயந்தி)*இருந்தனள், இங்கு - இவ்விடத்தில், இது - இச்செய்தி, நிற்க - இருக்க, கோதைவடிவேல் - வெற்றிமாலையணிந்த கூறியவேலையேந்திய, நளற்கு - நளமகாராசனுக்கு, உற்ற - பொருந்திய, செய்தியனைத்தும் - செய்கையனைத்தையும், கூறுவாம் - சொல்லுவாம், எ-று.

மற்று அசை. (௬எ)

பிரிவுறுபடலம்-முற்றிற்று.

ஆ செய்யுள் - ௫oஎச.



(ப - ரை.) என்று-இப்படியாகச்சொல்லி, கண்கள்-கண்களினின்றும், நீர்-நீரானது, இடையறுது-இடைவிடாமல், ஒழுகிட - பெருக, மாசுதுன்று-அழுக்கடைந்த, மேனியும்-வடிவத்தவளும், துணிபடு அறுபட்ட, ஆடையும்-ஆடையையுடையவளும், ஆகி-ஆய், நின்ற-(தன்னெதிரி) னின்ற, மாதினை-தமயந்தியை, நோக்கினன்-பார்த்தவனாய், நெட்டுயிர்ப்பெறிந்து-பெருமூச்சுவிட்டு, குன்றிரண்டென-இரண்டுமலைகள்போல், வீங்கு-பூரித்த, தோள்-தோள்களையுடைய, கொற்றவன்-நளமகாராசனானவன், கூறும்-(இவ்வாறு) சொல்லுவான். எ - று. (கக)

அலர்முலைப்பசுங்கொடியனையரையிருட்போதிற்
கலிவயத்தனாய்க்காட்டிடைநீத்தனனின்னை
நலியும்வெங்கலிதுணந்தபின்னணினினின்பான்
மெலியன்மீட்டுமோர்சுயம்வரம்வேட்டதென்னென்றான்.

(ப - ரை.) அலர்-பருத்த, முலை-ஸ்தனங்களையுடைய, பசு-பசுமையாகிய, கொடியனாய்-கொடியையொத்த, தமயந்தியே, அரையிருட்போதில் அர்த்தராத்திரியில், கலி-கலியனுக்கு, வயத்தனாய்-வசப்பட்டவனாகி, காட்டிடை வனத்தில், நின்னை-உன்னை, நீத்தனன்-விடுத்தேன், நலியும் - வருத்துகின்ற, வெங்கலி-வெவ்வியகலியன், தணர்ந்தபின் - பிரிந்துசென்றபின்பு நின்பால்-உன்னிடத்தில், நண்ணினன்-வந்தடைந்தேன், மெலியல்-வருந்தாதே, மீட்டும்-மறுபடியும், ஓர் சுயம்வரம்-ஒரு சுயம்வரத்தை, வேட்டது-விரும்பியது, என்-யாதுபற்றி, என்று-சொன்னான். எ - று. (உ0)

நிடதர்கோவினையயோத்தியினேடினன்கண்டேன்
படருறேலெனவந்தொருமறையவன்பகரக்
கடிதினெய்துவான்மணவினையிழைத்தனன்கருத்தி
லடியனேன்றனையையுறேலெனமொழிந்தழுதாள்.

(ப - ரை.) நிடர்தகோவினை-நளமகாராசனை, நேடினன்-தேடி, அயோத்தியில்-அயோத்திநகரத்தில், கண்டேன்-பார்த்தேன். படருறேல்-வருத்தப்படாதே, என-என்று, ஒருமறையவன்-ஒருபிராமணன், வந்து-இவ்விடத்தில் வந்து, பகர-சொல்ல, கடிதின்-சீக்கிரத்தில், எய்துவான் - உன்னைச்சேரும் பொருட்டு, மணவினை-சுயம்வரமென்பதை, இழைத்தனன்-செய்தேன், கருத்தில்-மனதில், அடியேன்றனை-அடியாளாகிய யென்னை, ஐயுறேலென - சந்தேகப்படாதே யென்று, மொழிந்து-சொல்லி, அழுதாள் - (தமயந்தி) புலம்பினள். எ-று. (உக)

முன்னைநல்லுருக்காட்டெனமுற்றிழைமொழியப்
பன்னகத்திறையுதவியபூந்துகில்பரிவான்
மன்னரேறனன்புனைதலுமாணுருவெய்திக்
கன்னல்வேளினுங்கவினலங்கனிந்திடநின்றான்.

(ப - ரை.) முன்னை-பழைய, நல்லுரு - நல்லஉருவத்தை, காட்டென-காட்டுவாயென்று, முற்றிழை-தமயந்தியானவள், மொழிய-சொல்ல, பன்னகத்திறை-நாகராசனாகிய கார்க்கோடகன், உதவிய-கொடுத்த, பூந்துகில்-அழகிய வஸ்திரங்களை, பரிவால்-ஆசையோடு, மன்னரேறனன்-இராசசிங்கமாகிய நளமகாராசன், புனைதலும்-தரித்தமாத்திரத்தில், மாணுரு-மாட்சிமைப்பட்டவுருவத்தை, எய்தி-அடைந்து, கன்னல்-கருப்பு வில்லைத்தரித்த, வேளினும்-மன்மதனைக்காட்டிலும், கவின்-அழகினது, நலம்-நன்மையானது, கனிந்திட-முதிர, நின்றான்-(நளமகாராச) னிருந்தான். எ-று. (உஉ)

நின்றமன்னனைநிரைவளைக்கைம்மலர்கூப்பி
மன்றலங்குழன்மடவரல்வணங்கினணிற்ப
வென்றிவேலுடைவிதர்ப்பர்கோன்விளைந்தமைகேட்டு
துன்றுதன்கிளைமன்னவர்சூழ்வரப்புகுந்தான்.

(ப - ரை) நின்ற-எதிரில்நின்ற, மன்னனை-நளமகாராசனை, நிரை-வரிசையாயணிந்த, வளை-வளையலையுடைய, கைம்மலர் - மலர்போன்றகைகளை, கூப்பி-குவித்து, மன்றல்-வாசனைபொருந்திய, அம்-அழகிய, குழல்-கூந்தலையுடைய, மடவரல்-தமயந்தியானவள், வணங்கினள்-வணங்கி, நிற்ப-இருக்க, வென்றி-வெற்றிபொருந்திய, வேலுடை-வேலையுடைய, விதர்ப்பர்கோன்-வீமராசனானவன், விளைந்தமை-நடந்தசெய்திகளை, கேட்டு-கேள்வியுற்றுதுன்று-நெருங்கிய, தன்-தன்னுடைய, கிளை-பந்துக்களாகிய, மன்னவர் - அரசர்கள், சூழ்வர-சூழ, புகுந்தான்-அவ்விடம்வந்து சேர்ந்தான். எ-று. (உரு)

அன்னகாலையிலகலிருவிசும்பிலோர்வாணி
மன்னகேட்டியிம்மடவரறன்னைமூவாண்டு
மின்னலின்றியாமளித்தனஞ்சுயம்வரமென்று
வுன்னையிவ்வழிக்கூட்டுதற்கொண்டொடியிழைத்தாள்.

(ப - ரை.) அன்னகாலையில்-அந்தச்சமயத்தில், அகல - அகன்ற, இரு-பெருமைபொருந்திய, விசும்பில்-ஆகாயத்தில், ஓர்வாணி-ஒரு அசரீரிவாக்கு, மன்ன-நளமகாராசனே, கேட்டி-கேள், இம்மடவாறன்னை-இத்தமயந்தியை, மூவாண்டும்-மூன்றுவருஷமளவும், இன்னலின்றி-தீங்கில்லாமல், யாம் நாம் அளித்தனம்-இரக்ஷித்தோம், சுயம்வரமென்று-சுயம்வரமென்று சொல்லப்பட்டதை, உன்னை - உன்னை, இவ்வழி - இவ்விடத்தில், கூட்டுதற்கு - சேர்த்தற்கு, ஒண்டொடி-தமயந்தியானவள், இழைத்தாள்-செய்தாள். எ-று.

வடபுலத்தினிதேனுக்குநர்மாசறவிளங்குங்
கடவுண்மீனினுந்தொழுதகுகற்பினர்க்கரசாங்
கொடிமருங்குலையுறுதருளெனக்கூர்வே
னிடதர்கோமகன்மகிழ்வுறநிகழ்ந்ததையன்றே.

(ப - ரை.) வடபுலத்தினில்-வடதிசையில், நோக்குனர்-காண்கின்றவரது, மாசற-குற்றமற, விளங்கும்-பிரகாசியாநின்ற, கடவுண்மீனினும்-தெய்வத்தன்மையுள்ள அருந்ததியைக் காட்டிலும், தொழுதற்கு-மேன்மையாகிய, பிற்பினர்க்கு-பதிவிரதைகட்கு, அரசாம்-அரசாகிய, கொடிமருங்குலை-தமயந்தியை, ஐயுறுது-சந்தேகியாமல், அருளென-கிருபைசெய்யென்று, கூர்வேல்-கூர்மைபொருந்திய வேலேந்திய, நிடதர்கோமான்-நளமகாராஜன் மகிழ்வுற-மனங்களிக்க, நிகழ்ந்தது-(ஆகாசவாணி) உண்டாயிற்று. எ-று. (உகு)

தமரவேலையினந்தரதுந்துபிதழங்க
வமரர்யாவரும்பூமழைபொழிந்துநின்றார்த்தா
ருமிழ்செழுங்கதிர்மணிமுடிவீமனுமுவந்தான்
குமரனன்னவன்கோல்வளைத்தோளியையடைந்தான்.

(ப - ரை.) தமரம்-பேரொலியையுடைய, வேலையின்-சமுத்திரம்போல அந்தரம்-ஆகாசத்தில், துந்துமி-துந்துமிவாத்தியமானது, தழங்க - சத்திக்க, அமரர்யாவரும்-தேவர்களனைவரும், பூமழை-புஷ்பவருஷத்தை, பொழிந்து-சொரிந்து, நின்று-நிலைபெற்று, ஆர்த்தார்-துதித்தார்கள், உமிழ்-கக்கப்பட்ட செழு-செழுமையாகிய, கதிர்-கிரணங்களையுடைய, மணிமுடி ரத்நகிரீடத்தையுடைய, வீமனும்-வீமராசனும், உவந்தான் - சந்தோஷித்தான், குமரனன்னவன்-முருகனையொத்த நளமகாராசன், கோல்வளை-அழகியவளையலையணிந்த தோளியை-புயத்தையுடைய தமயந்தியை, அடைந்தான்-சேர்ந்தான். எ-று.

மண்களித்ததுமாதிரங்களித்தனமலர்மேற்
பெண்களித்தனள்பேறங்களித்தனகண்டோர்
கண்களித்தனகளித்தனகலைவலோர்நெஞ்சம்
விண்களித்தனகளித்ததுவீமன்மாநகரம்.

(ப - ரை.) மண்-பூமியானது, களித்தது-களிப்புற்றது, மாதிரம் - மலைகள், களித்தன-களிப்புற்றன, மலர்மேற்பெண்-இலக்ஷ்மி, களித்தனள்-களிப்புற்றனள், பேறம்-மகத்தான தருமங்கள், களித்தன-களிப்புற்றன, கண்டோர்-பார்த்தவர்களது, கண்-நேத்திரங்கள், களித்தன-களிப்புற்றன, கலைவலோர்-வித்துவான்களுடைய, நெஞ்சம்-மனங்கள், களித்தன-களிப்புற்றன விண்-விண்ணுலகங்கள், களித்தன-களிப்புற்றன, வீமன்-வீமராசனது, மா-பெரிய, நகரம்-பட்டணமானது, களித்தது-களிப்புற்றது. எ-று. (உஎ)

உருவவொண்கழனிடதர்கோன்வெளிப்படலோரா
விருதுபன்னனுங்கறிந்தபினவனுழையெய்தி
யரசநின்னையானறிந்திடாதியற்றியவனைத்துந்
திருவுளங்கொளாதருளெனச்சேவடிதொழுதான்.

(ப - ரை.) உருவம்-அழகையுடைய, ஒண்கழல்-ஒளிபொருந்தியவீரக்கழலையணிந்த, நிடதர்கோன்-நளமகாராசன், வெளிப்படல்-(மறைவினின்றும்) வெளிப்பட்டதை, ஓரா-ஆராய்ந்து, இருதுபன்னன் - இருதுபன்னவரசன், ஆங்கு-அந்நகரத்தில், அறிந்தபின்-தெரிந்துகொண்டபின்பு, அவனுழையெய்தி-அந்நளனிடத்து வந்து, அரச-நளமகாராசனே, நின்னை - உன்னை, யான்-நான், அறிந்திடாது-அறியாமல், இயற்றியவனைத்தும்-செய்தகுற்றங்களனைத்தையும், திருவுளங்கொளாது-மனத்திற்கொள்ளாமல், அருளென - கிருபைசெய்யவேண்டுமென்று, சேவடி-சிவந்தபாதங்களில், தொழுதான்-வணங்கினான், எ-று. (உஅ)

செய்யதாடொழுமன்னனைச்செங்கையாற்றழுவிக்
கொய்யுளைப்பரியுளமறிவிஞ்சையுங்கொடுத்து
மையினமாமதிமுகமலர்ந்தின்னுரைவழங்கி
யையனேவவவ்வரசனுமயோத்திநாடடைந்தான்.

(ப - ரை.) செய்யதாடொழும்-சிவந்தபாதத்தில் வணங்கிய, மன்னனை இருதுபன்னராசனை, செங்கையால்-சிவந்தகைகளால், தழுவி - அணைத்துக்கொண்டு, கொய்யுளை-கொய்துகட்டிய புறமயிரினையுடைய, பரி-குதிரைகளினது, உளம்-மனதை அறிவிக்கின்ற, விஞ்சையும்-வித்தையையும், கொடுத்து உபதேசித்து, மையில்-களங்கமில்லாத, மா-பெருமைதங்கிய, மதி-சந்திரன் போன்ற, முகமலர்ந்து-முகமலர்ச்சியடைந்து, இன்னுரை-இனியசொற்களை வழங்கி-சொல்லி, ஐயன்-நளமகாராசன், ஏவ-விடைகொடுக்க, அவ்வரசனும் அவ்விருதுபன்னராசனும், அயோத்திநாடு - அயோத்திதேசத்தை, அடைந்தான்-சேர்ந்தான். எ-று. (உகூ)

தேவியைக் கண்ணுற்ற படலம்-முற்றிற்று.

ஆக செய்யுள்-ககறுள.



உ

கடவுள் துணை.

# அரசாட்சிப்படலம்.

[இப்படலத்தால் நளன் தமயந்தியை அடைந்தபின்பு அவளோடு தனது நிடதேசத்திற்சென்று புட்கரனைவென்று அரசாட்சிசெய்தல் சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

கொங்குண்வார்குழற்கொம்மைவெம்முலைநலம்பருகித்
திங்களொன்றவணிருந்தபின்றெண்டிரையுடுத்த
வங்கண்மாநிலம்புரந்திடுமாமனோடாய்ந்து
பொங்குதானையோடெழுந்தனன்புலவுவேற்குரிசில்.

(ப-ரை.) புலவு - புலால்நாற்றம்நாறுகின்ற, வேல் - வேலையுடைய, குரிசில் - நளமகாராசனானவன், கொங்குண் - வாசனைபொருந்திய, வார்-நீண்ட, குழல் - கூந்தலையும், கொம்மை - திரட்சிபொருந்திய, வெம் - விருப்பத்தைத்தருகின்ற, முலை - ஸ்தனங்களையுமுடைய தமயந்தியினது, நலம்-இன்பத்தை, பருகி - அனுபவித்து, திங்களொன்று-ஒருமாதம், அவண்-அக்குண்டினபுறத்தில், இருந்தபின் - வாசஞ்செய்தபின்பு, தெண்டிரை - கடலை, உடுத்த - ஆடையாகவுடுத்த, அங்கண் - அழகியவிடத்தையுடைய, மா - பெரிய, நிலம் - பூமியை, புரந்திடும் - இரட்சியாநின்ற, மாமனோடு - மாமனாகிய வீமராசனோடு, ஆய்ந்து - ஆலோசித்து, பொங்குபிரகாசியாநின்ற, தானையோடு - சேனையோடு, எழுந்தனன் - பிரயாணப்பட்டான், எ-று. (க)

மழைமதக்களியானையுங்கலினவாம்பரியுஞ்
செழுமணித்தடந்தேர்களும்வயவருஞ்செறிய
வெழுகடற்புவிமன்னருமிறைஞ்சினர்செல்ல
வழலுயிர்க்கும்வேலரசனுநிடதநாடடைந்தான்.

(ப-ரை.) மழை - மழைபோன்ற, மதம் - மதசலத்தையும், களி - களிப்பையுமுடைய, யானையும் - யானைகளும், கலினம் - கடிவாளத்தையுடைய, வாம் - தாவுகின்ற, பரியும் - குதிரைகளும், செழு - செழித்த, மணி - இரத்தினங்களிழைத்த, தடம் - விசாலமாகிய, தேர்களும் - ரதங்களும், வயவரும்-படைவீரர்களும், செறிய - நெருங்கவும், எழுகடல் - எழுசமுத்திரங்கள்சூழ்ந்த, புவி - சப்ததீபங்களிலுள்ள, மன்னரும் - அரசர்களும், இறைஞ்சினர்-வணங்கினவராகி, செல்ல - நடக்கவும், அழலுயிர்க்கும் - அக்கினியைக்கக்காநின்ற, வேல் - வேலையுடைய, அரசனும் - நளனும், நிடதநாடு - நிடததேசத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ-று. (உ)

மூதெயிற்புறத்திறுத்தபின்மொய்யமர்தொடங்கப்
போதல்செய்கவெம்போர்த்தொழிற்கஞ்சினையாகிற்
காதலிற்கவறுடுவான்வருகெனக்கழறித்
தூதுபோக்கினன்புட்கரன்றனக்குவேற்றோன்றல்.

(ப - ரை.) மூது - பழைய, எயிற்புறத்து - மதிலினதுபுறத்திலே, இறுத்தபின் - இறங்கியபின்பு, மெய் - நெருங்கிய, அமர் - போரை, தொடங்க- ஆரம்பிக்க, போதல்செய்க - வருவாயாக, வெம் - வெவ்விய, போர்த்தொழிற்கு - யுத்தச்செய்கைக்கு, அஞ்சினையாகில் - படுவையேயானால், காதலின்- ஆசைபோடு, கவறுடுவான் - சூதாடுதற்கு, வருக - வருவாயாக, என - என்று, கழறி - சொல்லி, புட்கரன்றனக்கு - புட்கரராசனுக்கு, வேல்-வேலையுடைய, தோன்றல் - நளன், தூது - தூதரை, போக்கினன் - விடுத்தான், எ-று. ()

போயதூதுவர்புட்கரற்கித்திறம்புகல
வாயுங்கேள்விநூலமைச்சொடும்வேறிருந்தாய்ந்து
காயும்போரினில்வேறன்மற்றரிதெனக்கருதி
மாயவெங்கவறுடுவான்வருகெனவிடுத்தான்.

(ப - ரை.) போய்தூதுவர் - நளனிடத்தினின்றும்போனதூதுவர், புட்கரற்கு - புட்கரனுக்கு, இத்திறம் - இவ்விதங்களை, புகல - சொல்ல, ஆயும்- ஆராய்ச்சிசெய்யத்தகுந்த, கேள்வி - கேள்வியையும், நூல் - தருமசாஸ்திரத்தையுமுடைய, அமைச்சொடும் - மந்திரியோடும், வேறிருந்து - தனியேயிருந்து, ஆய்ந்த - ஆலோசித்து, காயும் - கொல்லும், போரினில் - யுத்தத்தில், வேறல் - வெல்லுதல், அரிதென - அரியதென்று, கருதி - நினைத்து, மாயம்- வஞ்சனையோடுங்கூடிய, வெம் - வெவ்விய, கவறுடுவான் - சூதாடுதற்கு, வருகென - வருவாயாகவென்றுசொல்லி, விடுத்தான் - அனுப்பினான், எ-று. ()

விட்டதூதுவருரைத்தசொற்கேட்டலும்விரிந்து
மட்டுலாந்தொடைமார்பினன்மாநகரெய்திக்
கட்டுவார்கழற்புட்கரகவறுநாமாடற்
கொட்டம்யாதெனவுரைத்தனனுலங்கெழுதோளான்.

(ப - ரை.) விட்டதூதுவர்-அனுப்பப்பட்டதூதர்கள், உரைத்தசொல்- சொல்லியசொற்களை, கேட்டலும் - கேட்டமாத்திரத்தில், விரிந்து-மலர்ந்து, மட்டுலாம்-தேனொழுகுகின்ற, தொடை-மாலையையணிந்த, மார்பினன்-மார்பையுடையநளன், மா-பெரிய, நகர் - பட்டணத்தில், எய்தி - அடைந்து, காட்டு-காட்டப்பட்ட, வார்-நீண்ட, கழல்-வீரக்கழலையுடைய, புட்கர-புட்கர

னே! கவறு-சூதை, நாமாடற்கு-நாமாடுவதற்கு, ஒட்டம்யாதென-பந்தயம்யாதென்றகேட்ச, உலங்கெழுதோளான்-திரள்கல்லையொத்ததோள்களை யுடையவரசன், உரைத்தனன்-சொன்னான். எ-று. (௫)

வயிரவாட்படைமன்னவர்மன்னநீதோற்பின்
முயலிலாமதிபூத்திடுமுழுநெறிக்குவளை
யயரநீண்டகட்டேவியையளித்தியான்றோற்பி
னுயிரினோடுநின்னுலகெலாந்தருவனென்றுரைத்தான்.

(ப - ரை.) வயிரம்-கூர்மை பொருந்திய, வாட்படை - வாளாயுதத்தை யுடைய, மன்னவர்மன்ன-அரசர்க்கரசனாகிய நளமகாராசனே! நீதோற்பின்-நீதோற்றால், முயலிலா-முயற்கறை யொழிந்த, மதி - சந்திரனிடத்தில், பூத்திடும்-புஷ்பித்த, முழுநெறி-முழுநெறிப்பை யுடைய, குவளை - நீலோற்பலங்கள், அயர-சோர்வையடைய, நீண்டகண் - நீண்டகண்களையடைய, தேவியை-தமயந்தியை, அளித்தி-கொடு, யான்தோற்பின்-நான்தோற்றால், உயிரினோடு-என்னுயிரோடு, நின்னுலகெலாம்-உனது உலகமுழுவதையும், தருவனென்று-கொடுப்பேனென்று, உரைத்தான்-சொன்னான். எ-று. (௬)

அன்னவாறியைந்தாடலும்புட்கரன்றோற்ப
மன்னமுன்னநீவென்றதுங்கொடுங்கலிவயத்தா
னின்னதாருயிர்நேர்ந்தனனெம்பியாதலினாற்
றொன்னகர்க்கினிதேகெனப்பணித்தனன்றோன்றல்.

(ப - ரை.) அன்னவாறு-அத்தன்மையாகவே, இயைந்து - சம்மதித்து, ஆடலும்-ஆடுமளவில், புட்கரன்-புட்கராசன், தோற்ப-தோற்க, மன்ன புட்கராசனே! முன்னம்-முன்பு, நீ-நீ, வென்றதும்-செயித்ததும், கொடும்-கொடிய, கலிவயத்தால்-கலியினது வசத்தினால் (அன்றிவேறல்ல,) எம்பியாதலினால்-தம்பியாகையினாலே, நின்னது-உன்னுடைய, ஆர்-நிறைந்த, உயிர்-உயிரை, சேர்ந்தனன்-கொடுத்தேன், தொன்னகர்க்கு-பழமையாகிய உனது நகரத்திற்கு, இனிது-இனிதாக, ஏகென-போவென்று, தோன்றல்-நளன், பணித்தனன்-ஆக்கியாபித்தான். எ-று. (௭)

பணிதலைக்கொடுபுட்கரன்போதலும்பன்னூற்
கணிதர்சொற்றநல்லோரையிற்கடிநகரெய்தி
யணிபொலன்கழன்மன்னவன்விதர்ப்பர்கோனளித்த
மணிசெய்மேகலைவாணுதற்கொற்றரைவிடுத்தான்.

(ப - ரை.) பணி-அந்தவாக்கினையை, தலைகொடு-சிரசின்மீதுகொண்டு, புட்கரன்-புட்கராசன, போதலும்-போயினபின், பன்னூல்-அனேக சாஸ்திரங்களை யுணர்ந்த, கணிதர்-சோதிஷர்களாலே, சொற்ற-சொல்லப்பட்ட, நல்லோரையில்-நல்ல லக்கினத்தில், கடி-காவலையுடைய, நகர்-பட்டணத்தை, எய்தி-அடைந்து, அணி-அணியப்பட்ட, பொலன் - பொன்னாற் செய்யப்பட்ட, கழல்-வீரக்கழலை யுடைய, மன்னவன்-நளன், விதர்ப்பர்கோனளித்த-

வீமராசன் பெற்ற, மணிசெய்-இரத்நங்களாற் செய்யப்பட்ட, மேகலை-மேகலாபரணத்தை யுடைய், வாணுதற்கு - ஒளிபொருந்திய நெற்றியை யுடைய தமயந்திக்கு, ஒற்றரை-வேவுகாரரை, விடுத்தான்-அனுப்பினான். எ-று. (அ)

ஒற்றரேகியவ்விதர்ப்பர்கோன்றன்னுழையுரைப்ப
வற்றமில்லெனவரும்பொருளாங்கவர்க்களித்துக்
கற்றைவார்குழன்மதர்நெடுங்கண்ணியைக்கணிதர்
சொற்றவோரையில்விடுத்தனன்றோன்றன்மாநகரில்.

(ப - ரை.) ஒற்றர்-வேவுகாரர், ஏகி-போய், அவ்விதர்ப்பர்கோன் றன்னுழை-அவ்வீமராசனிடத்தில், உரைப்ப-சொல்ல, அற்றமில்லென - மிகுதியான, அரு-அரிய, பொருள்-பொருளை, ஆங்கு - அவ்விடத்தில், அவர்க்கு-அவர்களுக்கு, அளித்து-கொடுத்து, கற்றை-கூட்டமாகிய,வார்-நீண்ட,குழல்-கூந்தலையும், மதர்-மதர்த்த, நெடு-நெடிய, கண்ணியை - கண்களையுமுடைய தமயந்தியை, கணிதர்-சோதிஷர்கள், சொற்ற-சொல்லிய, ஓரையில்-இலக்கினத்தில், தோன்றல்-வீமராசன், மா-பெரிய, நகரில் - நளனது பட்டணத்தில், விடுத்தனன்-விட்டான். எ-று. (கூ)

வெள்ளைத்தானையுமகளிருஞ்சூழ்வரவேந்த
னுள்ளத்தாமரைமலருறையோடரிக்கண்ணாள்
வள்ளத்தாமரைப்பொகுட்டின்மேல்வண்டுகண்படுக்கு
மள்ளற்றீம்புனற்கழனிசூழ்நிடதநாடடைந்தாள்.

(ப - ரை.) வெள்ளைத்தானையும்-பிரவாகம் போன்ற சேனையும், மகளிரும்-மாதர்களும், சூழ்வர-சூழ்ந்துவரும்படி, வேந்தன்-நளமகாராசனது,உள்ளம்-மனமாகிய, தாமரைமலர்-தாமரைப்பூவில், உறை-வாசஞ் செய்கின்ற, ஓடரி-செவ்வரி பரந்த, கண்ணாள்-கண்களை யுடைய தமயந்தியானவள், வள்ளம்-கிண்ணம்போன்ற, தாமரைப் பொகுட்டின்மேல்-தாமரை மலரின் கர்ணிகையில், வண்டு-வண்டுகள், கண்படுக்கும்-நித்திரை செய்யாநின்ற, அள்ளல்-சேற்றையும், தீப்புனல்-மதுரமான சலத்தையு முடைய கழனி - வயல்களால், சூழ்-சூழப்பட்ட, நிடதநாடு-நிடததேசத்தை, அடைந்தாள் - சேர்ந்தாள். எ-று. (க0)

நவ்விநோக்கியர்சூழ்வரநகைநிலாவெறிக்குங்
கொவ்வைவாய்மலர்ப்பூங்குழற்குவிமுலைமடந்தை
தெய்வநாண்மலர்த்தவிசிழிதிருமகளென்ன
வெவ்வமில்லதோரெரிமணிச்சிவிகைநின்றிழிந்தாள்.

(ப - ரை.) நவ்வி-மான்போன்ற, நோக்கியர்-பார்வையை யுடைய மங்கையர், சூழ்வர-சூழ்ந்துவர, நகை-பற்கள், நிலா-நிலாவைப் போல, எறிக்கும் - பிரகாசிக்கின்ற, கொவ்வை-கோவைக்கனிபோன்ற, வாய் - சிவந்தவாயையும்,மலர்-புஷ்பத்தையுடைய,பூ-அழகிய, குழல்-கூந்தலையும்,குவி-குவிந்த,

மூலை-ஸ்தனங்களையுமுடைய, மடந்தை-தமயந்தியானவள்,தெய்வம்-தெய்வத்தன்மை பொருந்திய, நாள்-அன்றலர்ந்த, மலர்த்தவிசு - புஷ்பாசனத்தினின்றும், இழி-இழிகின்ற, திருமகளென்ன - இலக்குமிபோல், எவ்வமில்-குற்றமில்லாததாகிய, ஓர்-ஒரு, எரி - பிரகாசிக்கின்ற, மணிச்சிவிகை நின்று-இரத்நதண்டிகையி னின்றும், இழிந்தாள்-இறங்கினாள். எ-று. (கக)

பரிதிவானவனெதிர்தலும்பனியிதழ்விரிந்த
முருகுலாநறுந்தாமரைபோன் முகமலரா
வருகுநுண்ணிடையின்னுயிர்க்காதலனம்பொற்
றிருவநாண்மலர்ச்சேவடிசென்னியிற்றொழுதாள்.

(ப - ரை.) பரிதிவானவன்-சூரியனானவன், எதிர்தலும் - தோன்றினவளவில், பனியிதழ்-குளிர்ச்சிபொருந்திய விதழ்கள், விரிந்த-மலர்ந்த, முருகுலாம்-வாசனைவீசுகின்ற, நறு-நல்ல, தாமரைபோல்-தாமரைபோல, முகமலரா-முகமலர்ச்சியடைந்து, அருகு-சிறந்த, நுண்ணிடை-நுட்பமானவிடையையுடையதமயந்தி,இன்னுயிர்-இனியவுயிர்போன்ற, காதலன்-கணவனாகியநளனது, அம்-அழகிய, பொன்-பொன்போன்ற, திருவ-செல்வத்தையுடைய நாள்-புதிய, மலர்ச்சேவடி-தாமரைமலர்போன்றபாதங்களை, சென்னியின்-சிரசினால், தொழுதாள்-வணங்கினாள். எ-று. (கஉ)

தொழுதமங்கையைச்சுடர்மணித்தடக்கையாலெடுத்துக்
கொழுதிவண்டினங்கூட்டுணுந்தெரியறாழ்மார்பி
னுழுதுவெம்முலைக்குங்குமச்சேற்றிடையொளிப்பத்
தழுவினனவடேம்பியவின்னுயிர்தளிர்த்தாள்.

(ப - ரை.) தொழுத-வணங்கிய, மங்கையை-தமயந்தியை, சுடர்மணி-பிரகாசம்பொருந்திய ஆபரணத்தையுடைய, தடம்-நீண்ட, கையால் - கரங்களால், எடுத்து-எடுத்து, கொழுதி-கோதி, வண்டினம் - வண்டுக்கூட்டங்கள கூட்டுணும்-கொள்ளைகொள்கின்ற, தெரியல்-மாலையானது, தாழ்-தொங்குகின்ற, மார்பின்-மார்பினிடத்திலே, உழுது - வெம்விருப்பத்தைத் தருகின்ற முலை-ஸ்தனஙகள், குங்குமச்சேற்றிடை-கும்குமச்சேற்றில், ஒளிப்ப - ஒளிக்கும்படி, தழுவினன்-ஆலிங்கனஞ் செய்தான், அவள்-அந்தத் தமயந்தி, தேம்பிய-மெலிந்த, இன்னுயிர்-இனியஉயிர், தளிர்த்தாள்-துளிர்த்தாள், எ-று.

திருந்துமாமணிச்செய்குன்றுந்தெளிபுனற்றடமும்
விருந்துவேனிலாற்கெதிரியவிரைமலர்க்காவும்
முருந்துவாணகைமுகிழ்முலைமடந்தையோடாடிப்
பொருந்தவிண்ணிடைப்போகமுண்டுவந்தனர்போன்றான்.

(ப - ரை.) திருந்து-திருத்தமாகிய, மா-பெரிய, மணி-இரத்நங்கள் பதித்த, செய்குன்றும்-விளையாட்டு மலைகளிடத்தும், தெளி-தெளிந்த, புனல்-சலத்தையுடைய, தடமும்-வாவிகளிடத்தும், விருந்து-விருந்தாக, வேனிலாற்கு-

மன்மதனுக்கு, எதிரிய-தோன்றிய, விரை-வாசனையையுடைய, மலர்-புஷ்பங்களையுடைய, காவும்-சோலைகளிடத்தும், மூருந்து-மயிலிறகினடியையொத்த, முலை-தனங்களையுமுடைய, மடந்தையோடு - தமயந்தியுடனே, ஆடிவிளையாடி, பொருந்த-அமைய, விண்ணிடை-தெய்வலோகத்தில், போகம் - இன்பத்தை, உண்டு-அனுபவித்து, உவந்தனர்-மகிழ்ந்தவர்களை, போன்றான் ஒத்திருந்தான். எ-று, (கச)

ஆழிசூழ்புவிமுழுவதுமாழியொன்றுருட்டி
வாழிநல்லறம்புரிந்தருமகம்பலவாற்றிச்
சூழிமால்வரைப்பிடருறுதிமையொழித்தாறப்
பாழியம்புயத்துலகெலாம்பரித்தினிதிருந்தான்.

(ப - ரை.) ஆழிசூழ்-சமுத்திரஞ்சூழ்ந்த, புவிமுழுவதும் - பூமிமுழுமையும், ஆழியொன்று-ஏகசக்கரத்தை, உருட்டி-நடத்தி, 'நல்லறம்-நல்லதருமத்தை, புரிந்து-செய்து, அரு-செய்தற்கரிய, மகம்பல - பலயாகங்களை, ஆற்றி-செய்து, சூழி-முகப்படாமணிந்த, மால்-பெரிய, வரை-மலையையொத்த யெட்டுத்திக்கு யானைகளும், பிடர்-பிடரியிற்றாங்கிய, உறு-மிகுந்த, சுமை - பூமிபாரத்தை, யொழித்து-நீக்கி, ஆற-இளைப்பாறும்படி, பாழி-வலிபொருந்திய, அம்-அழகிய, புயத்து-தோளினிடத்தில், உலகெலாம் - உலகமுழுவதையும், பரித்து-தாங்கி, இனிது-இனிதாக இருந்தான் - (நளமகாராச) னிருந்தான். எ-று. வாழி-அசை. (கரு)

## அரசாட்சிப்படலம் முற்றிற்று.

ஆகூ படலம் உஅ - க்கு

ஆகூ செய்யுள் ககஎஉ,



கடவுள் துணை.

# படல அகராதி.

## பாகம் - க.



## பாகம் - உ.



படல அகராதி முற்றிற்று.

PRINTED AT THE SUN OF INDIA PRESS. CHOOLAI, MADRAS.

# நூதன புத்தகங்கள்.

படுக்கையறையில் பாசாங்குசெய்த

## பங்கஜவல்லிக்கதை.

(ஓர் நவீநக தமிழ் நாவல்.)

பங்கஜவல்லி என்னும் இக்கதாநாயகி சீமானுகிய சித்தூர் - செல்வகேசவ முதலியாருடைய புதல்வி. இவள் கண்டோர் மையல் கொள்ளத்தக்க கட்டழகியா யிருந்ததோடு, தமிழ்க்கடலை வாய் மடுத்துக்கலை மகளெனச் சொல்லும்படியான 11 பிரசங்கங்களை செய்தனள் அதை கவனியுங்கள்.

பின்னர்ப் பங்கஜவல்லியின் கலியாணச்சிறப்பும் அவள் படுக்கையறை சென்று தனது நாயகனேடு பாசாங்குசெய்து. தன் குற்றத்தை மறைப்பதும் இருவர்க்கும் நடக்கும் சம்பாஷணையும் வெகு இனிமையைத் தாரிற்கும் புத்திமான்களே!

கொஞ்சம் காப்பிகளே கைவசமிருப்பதால், வேண்டுவோர் எமக்கு எழுதிக்கொள்ளவும். விலை அணு 8

## மைனுவதிக் கதை.

இக்கதை வாசிப்போரும் நற்புத்தியும் ஆசாரியபக்தியும் அரியயுக்தியும் சாபானுக்கிரக சக்தியும் உண்டாகுமென்பதற்கு யாதொருதடையுமில்லை இக்கதையின் பெருமையைப் பூரணமாகச்சொல்லில் மிகவும் விரிவாகிறபடியால் சுருக்கமாக வரையலாயிற்று புத்தகம் 1-க்கு அணு - 12

## சுந்தராங்கி.

அனேக நீதிபோதங்களை யடக்கி தெவிட்டாத இன்பத்தைக் கொடுக்குந்தன்மையானது ஆதிமுதல் அந்தம் வரையில் எளியதமிழ் வசனநடையில் எழுதப்பட்டிருப்பதால் சாமானியபடிப்பினையுடைய நம்பெண்மக்கள் கூடவாசிக்கலாம்.

இதன்விலைஅணு6. விபிசார்ஜ்அணு 2.

| | | | |
|---|---|---|---|
| ராமரகசியம் | 0 | 6 | 0 |
| மனோரஞ்சனி | 0 | 12 | 0 |
| அனுபோகபிரச்னை ஆரூடம் | 0 | 8 | 0 |

பிருஹஜ்ஜாதகமென்னும்

## மங்களேஸ்வரியம்.

இது மகாசோதிட சாஸ்திரங்களிலொன்று மேலும் ஓராசாரம் பாராசாரியமுதலிய சோதிட சாஸ்திரங்களுக்கும் இணையானது எல்லாச் சோதிடர்களும் கையாளத்தகுந்தது, இச்சாஸ்திரம், முற்காலத்ததாயும், மகாசிரேஷ்டமானதாயுமிருப்பதால் இதைப்பற்றி அதிகமாய் தெரிவிக்க வேண்டியதில்லை. இதனுண்மை பரம்பரையானசோதிடர்களுக்கு நன்ருய்த்தெரியவருமென்பது உண்மையே.

புத்தகம் 1-க்கு விலை ரூபா 1 4 0

வி-பி-சார்ஜ் அணு 4.

## மோகனசுந்தரி.

உலகத்தில் மாற்ருந்தாயாகவருபவள், முதற்ருரத்தின் பிள்ளைகளை நடத்தும்குரூரச்செய்கைகள் வவ்வளவல்லஎன்பதை அனுபவிகள்அறிந்தேயிருப்பார்கள்.உலகத்தில்நடக்கும்மாற்ருந்தாயின் அக்கிரமத்தைப் பற்றியே இக்கதையில்எழுதியிருக்கிறது

விலை. 0-6-0. வி. பி. சார்ஜ் அணு 2.

## தற்கால வயித்திய போதினி.

அநேகவைத்தியர்களால் கையாளப்பட்டுவருகின்றபாகங்கள் மாத்திரமே 15-அத்தியாயங்களாகப்பிரித்துத் தற்கால வைத்தியபோதினிஎன்கிறபேரிட்டு எழுதி ஒருநூல்அச்சிட்டிருக்கின்றனன் ஆனல் இந்த நூலில்சொல்லியபடியே விபரீதமான அர்த்தஞ் செய்துகொள்ளாமல் சரியானமாதிரிசெய்து பார்த்தால்அவ்வம்மருந்துகளுக்குச் சொல்லியுள்ள வேலைகளைக் கட்டாயம் செய்தேதீரும் இதற்குச்சந்தேகமேயில்லை உயர்ந்தபதிப்பு.

கிளேஸ்கடிதம் இதன் விலை அணு-8.

வி-பி-சார்ஜ் அணு-2.

ஸ்ரீ இராமலிங்கப்பிள்ளையவர்கள் அருளிச்செய்த

## திருவருட்பாத்திரட்டு

மூலமும் உரையும்.

இதன்விலை ரூபா 1. வி-பிஅணு-3.

